இங்ஙனமிருக்கப் பிற்காலத்து ஆசார்யர்களிலே சிலர் வேதத்தைக் கர்மகாண்டம் என்றும் அதனால் தாழ்ந்தபடியைச் சேர்ந்ததென்றும் உபநிஷத்தே ஞானகாண்டம் என்றும் ஆதலால் அது வேதத்தைக் காட்டிலும் உயர்ந்ததென்றும் கருதுவாராயினர்.

இங்ஙனம் பிற்காலத்து ஆசார்யர்கள் நினைப்பதற்குண்டான காரணங்கள் பல. அவற்றுட் சிலவற்றை இங்கே தருகிறேன். முதலாவது காரணம், வேத பாஷை மிகவும் பழமைப் பட்டுப் போனபடியால் அதன் உண்மையான பொருளைக் கண்டு பிடித்தல் மிகவும் துர்லபமாய் விட்டது. நிருக்தம் என்ற வேத நிகண்டையும் பிராம்மணங்கள் என்று சொல்லப்படும் பகுதிகளிலே காணப்படும் வேத மந்திர விளக்கங்களையும் கற்ற பின்னரே, ஒருவாறு வேத மந்திரங்களின் பொருளையறிதல் ஸாத்யமாயிற்று. வேதம் பிரம்மாண்ட நூல். அதில் இத்தகைய ஆராய்ச்சி செய்வார் மிக மிகச் சிலரே யாவர். இப்போது வேதத்திற்கு விளக்குப் போலே நிற்கும் ஸாயணரென்ற வித்யாரண்ய சங்கராசார்யரின் பாஷ்யம் பிராம்மணங்களையும் நிருக்தத்தையுமே ஆதாரமாக வுடையது. பிராம்மணங்களில் பெரும்பாலும் கற்பனைக் கதைகளும் கற்பிதப் பொருள்களுமே கூறப்பட்டிருக்கின்றன. நிருக்தத்திலோ என்றால் பெரும்பாலும் வேத பதங்களுக்குச் சரியான பொருளே கூறப்பட்டிருக்கிறது. ஆனால், பல இடங்களில் அதன் தாதுநிச்சயங்கள் மிகவும் ஸம்சயத்துக்கு இடமாகவும் சில இடங்களில் அதன் பொருட் கோளே பிழைப்பட்டதாகவும் இருக்கிறது.

வேத மந்திரங்களுக்கு சரியான அர்த்தம் கண்டு பிடிக்க வேண்டுமென்று தற்காலத்தில் ஐரோப்பாவிலும் இந்தியாவிலும் அநேக பண்டிதர்கள் மிகவும் சிரமப் படுகிறார்கள். சில வருஷங்களுக்கு முன்னே காலஞ் சென்றவராகிய ஸ்வாமி தயாநந்த ஸரஸ்வதி வேதத்துக்குத் தாம் எப்போது மில்லாத புதிய அர்த்த மொன்று கற்பித்து அதற்கிணங்க 'ஆர்ய ஸமாஜம்' என்ற புது மதக் கொள்கை யொன்று ஸ்தாபித்தார்.

ஆனால், சிற்சில பதங்களுக்கு ஸாயனாசார்யர் சொல்லும் உரை ப்ரத்யக்ஷமாகப் பிழை யென்று தோன்றினும், பொதுப்படையாகச் சொல்லுமிடத்தே தற்காலத்து ஹிந்து வைதிகர்களால் அங்கீகாரம் செய்யப்பட்டிருக்கும் ஸாயன பாஷ்யமே பூர்வ வ்யாக்யானங்களுக்கு விரோதமில்லாமலும், தெளிவாகவும், உண்மையாகவும் அமைந்திருக்கிறது.

ஸாயன பாஷ்யமில்லா விட்டால், வேதம் ஹிந்து ஜாதிக்குப் பயன்படாமலே போயிருக்கும். சரியான ஸமயத்தில் ஸாயனர் வேதங்களுக்கு பாஷ்யம் எழுதி வைத்தார். எனினும், ஸாயனாசார்யர்கூடத் தம்முடைய குருக்களைப் போலவே வேதம் கர்ம நூலென்று கருதிவிட்டார். அதனால், அது ஹிந்து மதத்துக்கு ஆதிவேர் என்பதை இந்த ஆசார்யர்களால் மறுக்க முடியாவிடினும், அதற்கு ஞான நெறியில் எவ்வித பிரமாணமுமில்லை யென்று அவர்கள் தவறாக எண்ணும்படி நேர்ந்துவிட்டது. ஏனென்றால், வேதத்தைக் கர்மங்களைப் போற்றுகிற நூலாகக் கருதிய

இவர்கள் கர்மங்களென்ற இடத்தே யாகங்களைக் கருதிக் கூறினர். அதாவது, யாகங்களுக்கு மாத்திரம் உபயோகப்படும் நூலாக எண்ணி, கர்மங்கள் என்றால் யாகங்களெனப் பொருள் கொண்டு இவர்கள் வேதத்தைக் கர்ம காண்டம் என்றார்கள்.

ஷெடி யாகங்களே பெரும்பாலும் பசு வதைகளும், குதிரைக் கொலைகளும், ஆட்டுக் கொலைகளும் முக்கியமாகப் பாராட்டிய கொலைச் சடங்குகள். இவ்விதமான கொலைகளைச் செய்தல் மோக்ஷத்துக்கு வழி யென்ற போலிவைதிகரைப் பழி சூட்டி, அந்தக் கொலைச் சடங்குகளால் மனிதன் நரகத்துத்தான் போவானென்பதை நிலை நாட்டிய புத்த பகவானும் இவருடைய மதத்தைத் தழுவிய அரசர்களும் இந்தியாவில் யாகத் தொழிலுக்கு மிகவும் இகழ்ச்சி யேற்படுத்தி விட்டார்கள். அந்தத் தருணத்தில், புத்த மதத்தை வென்று ஹிந்து தர்மத்தை நிலை நாட்ட, சங்கராசார்யர் அவதரித்தார். அவர் புத்த மதக் கருத்துக்களைப் பெரும்பாலும் ருசி கண்டு சுவைத்துத் தம்முடைய வேதாந்தத்துக்கு ஆதாரங்களாகச் செய்து கொண்டனர். ஷண்மத ஸ்தாபகாசார்யராய், சைவம் வைஷ்ணவம் முதலிய ஆறு கிளைகளையும் வேதாந்த மாகிய வேரையுமுடைய ஹிந்து மதம் என்ற அற்புத விருக்ஷத்தை ஸ்ரீ சங்கராசார்யர் தமது அபாரமான ஞானத்திறமையாலும் கல்வி வலிமையாலும் மீள உயிர்ப்பித்து அதற்கு அழியாத சக்தி ஏற்படுத்தி வைத்து விட்டுப் போனார். தம்மாலே வெட்டுண்ட புத்த மதம் என்ற

விருக்ஷத்தின் கிளைகள் பலவற்றை ஹிந்து தர்மமாகிய மரத்துக்கு நல்ல வளர்ச்சி யுண்டாகும்படி எருவாகச் செய்துபோட்டார். இங்ஙனம் புத்த மதக் கொள்கைகள் பலவற்றை ஹிந்து தர்மத்துக்கு ஆதாரமாகச் சேர்த்துக் கொண்டது பற்றியே, சங்கராசார்யரை அவருடைய எதிர்க்கக்ஷியார் பலர் 'ப்ரச்சன்ன பௌத்தர்' (மறைவுபட்ட பௌத்தர்) என்று சொன்னார்கள். எனினும் அவர் ஹிந்து தர்மத்துக்குச் செய்த பேருபகாரத்துக்காக ஹிந்துக்களிலே பெரும்பாலோர் அவரைப் பரமசிவனுடைய அவதாரமாகக் கருதிப் போற்றினார்கள்.

பௌத்த மதமே துறவு நெறியை உலகத்தில் புகுத்திற்று. அதற்கு முன் அங்கங்கே சில சில மனிதர் துறவிகளாகவும் சில சில இடங்களில் சிலர் துறவிக் கூட்டத்தாராகவும் இருந்தனர்.

துறவிகளின் மடங்களை இத்தனை தாராளமாகவும் இத்தனை வலிமை யுடையனவாகவும் செய்ய வழி காட்டியது பௌத்த மதம். எங்கு பார்த்தாலும் இந்தியாவை அம் மதம் ஒரே ஸன்யாஸி வெள்ளமாகச் சமைத்து விட்டது. பாரத தேசத்தை அந்த மதம் ஒரு பெரிய மடமாக்கி வைத்து விட்டது. ராஜா, மந்திரி, குடி, படை—எல்லாம் மடத்துக்குச் சார்பிடங்கள். துறவிகளுக்கு சரியான போஜனம் முதலிய உபசாரங்கள் நடத்துவதே மனுஷ நாகரிகத்தின் உயர் நோக்கமாகக் கருதப் பட்டது. துறவிகள் தான் முக்கியமான ஜனங்கள்! மற்ற ஜனங்களெல்லாரும்

அவர்களுக்குப் பரிவாரம்! மடந் தான் பிரதானம்; ராஜ்யம் அதற்கு ஸாதனம்.

பாரத தேசத்தில் புத்த மதம் ஜீவகாருண்யம் ஸர்வ ஜன ஸமத்வம் என்ற இரண்டு தர்மங்களையும் நெடுந்தூரம் ஊன்றும்படி செய்தது. ஆனால், உலக வாழ்க்கையாகிய ஜகத்தின் ஒளி போன்றவளாகிய பத்தினியைத் துறந்தவர்களை மேலோர் என்று வைத்து, அவர்களுக்குக் கீழே மற்ற உலகத்தை அடக்கி வைத்து உலகமெல்லாம் பொய்மயம் என்றும் துக்கமயம் என்றும் பிதற்றிக் கொண்டு வாழ்நாள் கழிப்பதே ஞான நெறியாக ஏற்படுத்தி, மனுஷ நாகரிகத்தை நாசஞ் செய்ய முயன்றதாகிய குற்றம் புத்த மதத்துக் குண்டு. அதை நல்ல வேளையாக இந்தியா உதறித் தள்ளிவிட்டது. பின்னிட்டு புத்த தர்மத்தின் வாய்ப்பட்ட பர்மா முதலிய தேசங்களிலும் புத்த மதம் இங்ஙனமே மடத்தை வரம்பு மீறி உயர்த்தி மனித நாகரிகத்தை அழித்துக்கொண்டுதான் வந்திருக்கிறது. பிற்காலத்தில் பௌத்த வழியைத் தழுவி பலமான மடஸ்தாபனங்கள் செய்த ரோமன் கத்தோலிக்க மதத்திலும் குருக்களுடைய சக்தி மிஞ்சிப்போய் மனித நாகரிகத்துக்குப் பேராபத்து விளையும் போலிருந்தது. அதை ஐரோப்பிய தேசத்தார்கள் பல புரட்சிகளாலும் பெருங் கலகங்களாலும் யுத்தங்களாலும் எதிர்த்து வென்றனர். அதுமுதல் ஐரோப்பாவில் மடாதிபதிகளுக்கு ராஜ்யத்தின் மீதிருந்த செல்வாக்கும் அதிகாரமும் நாளுக்கு நாள் குறைந்து கொண்டு வருகின்றன. இது நிற்க.

ஹிந்து தர்மம் புத்த மதத்தை ஜயிக்கவேயில்லை யென்றும், பௌத்த மதமே ஹிந்து மதத்தை ஜயித்து விட்டதாகவும் சில மாஸங்களின் முன்பு காரைக்குடியில் ஒரு நண்பர் என்னிடம் தர்க்கித்தார். சரித்திரத்திலும், ப்ரத்யக்ஷத்திலும் ஐயமற புத்த மத மழிந்து ஹிந்து மதம் வெற்றி பெற்று நிற்கும் செய்தி விளங்குகையில், பட்டப்பகலை யிரவென்று கூறுதல் போல் மேற்படி காரைக்குடி நண்பர் சொல்லிய பச்சைப் பொய்யை இங்கெடுத்துச் சொல்ல வந்த முகாந்தரம் யாதெனில்:—'அவர் சொல்லியது பச்சைப் பொய்யன்று. அதில் சிறிதளவு உண்மையும் கலந்திருக்கிறது. எங்ஙனமெனில், பௌத்த மார்க்கத்தைக் களைந்தெறிந்து மிஞ்சி நின்ற ஹிந்து மதம் பல அம்சங்களில் பௌத்த மதக் கருத்துக்களை முழுமையாகவும் பல அம்சங்களிற் சற்றே மாற்றியும் தன்னுள்ளே சேர்த்துக் கொண்டு விட்டது. ஆகவே, பௌத்த மதம் இந்நாட்டில் இருந்த இடந் தடம் தெரியாமல் மண்ணோடு மண்ணாய் மடிந்து போகவில்லை. அதன் கொள்கைகளில் பல ஹிந்து மதக் கொள்கைகளுடன் கலந்து இந்நாட்டில் வழங்கி வருகின்றன.'

இந்தச் செய்தியையே அந்தக் காரைக்குடி நண்பர் மிகவும் அதிசயோக்தியாக மேற்கண்டவாறு பச்சைப் பொய் வடிவத்தில் கூறினார். புனர்ஜன்மக் கொள்கை, புலால்—இவை யிரண்டுமே பௌத்த மதத்திலிருந்து ஹிந்து மதத்துக்குள் நுழைந்த கொள்கைகளில் முக்கியமானவை யென்று கருதப்படு

கின்றன. ஆனால், இக்கொள்கைகள் பௌத்த மதத்தி லிருந்து தான் ஹிந்து மதத்தில் புகுந்தன வென்று கூறுவதற்கு பலமான ஆதாரங்களில்லை. புனர்ஜன்மக் கொள்கை பூர்வ புராணங்களிலேயே இருந்தது. பௌத்த மதம் அக் கொள்கையை, அறிஞர் கண்டு நகைக்கத் தக்கபடியாக, வரம்பு மீறி வற்புறுத்திற்று. பிற்கால ஹிந்து மதத்தில் அக் கொள்கை அளவுக்கு மிஞ்சி, நிரர்த்தகமாக ஏறிப்போய் இப்போது ஹிந்து நம்பிக்கையிலுள்ள குறைகளிலொன்றாக இயல்கிறது. ஸாதாரணமாக ஒருவனுக்குத் தலை நோவு வந்தாலுங் கூட, அதற்குக் காரணம் முதல் நாள் பசியில்லாமல் உண்டதோ, அளவு மீறித் தூக்கம் விழித்ததோ, மிகக் குளிர்ந்த அல்லது மிக அசுத்தமான நீரில் ஸ்நாநம் செய்ததோ என்பதை ஆராயு முன்பாகவே, அது பூர்வ ஜன்மத்தின் கர்மப் பயனென்று ஹிந்துக்களிலே பாமரர் கருதக்கூடிய நிலைமை வந்து விட்டது. உலகத்து வியாபார நிலைமையையும் பொருள் வழங்கும் முறைகளையும் மனித தந்திரத்தால் மாற்றி விடலாம் என்பதும், அங்ஙனம் மாற்று மிடத்தே செல்வ மிகுதி யாலும் செல்வக் குறைவாலும் மனிதர்களுக்குள்ளே ஏற்படும் கஷ்டங்களையும் அவமானங்களையும் பசிகளை யும் மரணங்களையும் நீக்கி விடக் கூடும் என்பதும் தற் காலத்து ஹிந்துக்களிலே பலருக்குத் தோன்றவே இடமில்லை. பிறர் சொல்லிய போதிலும் அது அவர் களுக்கு அர்த்தமாவது சிரமம். ஏனென்றால், பணவிஷ யத்தில் ஏற்பட்ட பயங்கரமான பேதங்களையும் தார

தம்மியங்களையும் பார பக்ஷங்களையுங் கண்டு, அதற்கு நிவாரணம் தேட வழி தெரியாத இடத்திலே தான், பெரும்பாலும் இந்தப் பூர்வ ஜன்ம கர்ம விஷயம் விசேஷமாக ப்ரஸ்தாபத்துக்கு வருகிறது. அற்பாயுள், நீண்ட ஆயுள், நோய், நோயின்மை, அழகு, அழகின்மை, பாடத் தெரிதல், அது தெரியாமை, படிப்புத் தெரிதல், அது தெரியாமை—முதலிய எல்லா பேதங்களுக்கும் பூர்வ ஜன்மத்தின் புண்ய பாவச் செயல்களையே முகாந்தரமாகக் காட்டினார்களெனினும், பண விஷயமான வேறுபாடுகளே இவை யெல்லாவற்றைக் காட்டிலும் மனிதர்களுக்கு உள்ளக் கொதிப்பையும் நம்பிக்கைக் கேட்டையும் விளைத்து, அவர்களை இந்த ஜன்மத்தின் துக்கங்களுக்குப் பூர்வ ஜன்மத்திலே காரணந் தேடுவதும் அடுத்த ஜன்மத்தில் பரிஹாரந் தேடுவதுமாகிய விநோதத் தொழிலிலே தூண்டின.

எனவே, இந்தப் பூர்வ ஜன்ம ஸித்தாந்தத்தை பௌத்த மதம் நமது தேசத்தில் ஊர்ஜிதப் படுத்தியது பற்றி நாம் அதற்கு அதிக நன்றி செலுத்த இடமில்லை.

பௌத்த மதத்தால் நாம் அடைந்த நன்மைகளிலே உண்மையான நன்மை ஒன்றுதான். அதாவது, விக்ரஹாராதனையை பௌத்த மதம் ஊர்ஜிதப் படுத்திற்று. புதிதாக உண்டாக்கவில்லை. ஏற்கெனவே யிருந்த வழக்கத்தை மிகவும் விஸ்தாரமாக்கி ஊர்ஜிதப் படுத்திற்று. பௌத்தர்கள் மனிதருக் கேற்படுத்திய

சிலைகளை நம்மவர் தம்முடைய அற்புத ஞான சக்தியின் விரிவாலும் கற்பனு சக்தியின் தெளிவாலும் தேவர் களுக்குச் சமைத்துக் கொண்டனர். தேவர்களைச் சிலைகளில் வைத்து வணங்குதல் முக்திக்கு மஹத்தான ஸாதனங்களி லொன்ரும். ஆனல், உண்மையான பக்தி யுடன் வணங்க வேண்டும்.

இனி, புத்த மதம் இழைத்த பெருந் தீங்கு யாதெ னிலோ, இடைக்காலத்து மாயாவாதத்தை நம்முள்ளே எழுப்பிவிட்டது. உபநிஷத்துக்களிலும் வேதத்திலும் 'மாயா'என்றசொல் பராசக்தியைக் குறிப்பது. இடைக் காலத்தில் மாயை பொய் யென்றதொரு வாதம் உண் டாயிற்று. இதனல், 'ஜகத் பொய்; தேவர்கள் பொய்; ஸூர்ய நக்ஷத்ராதிகள் பொய்; பஞ்ச பூதம் பொய்; பஞ்சேந்திரியம் பொய்; மனம் பொய்; சைதந்யம் மாத்திரம் மெய்; ஆதலால், இந்த உலகத்துக் கடமை களெல்லாம் எறிந்துவிடத் தக்கன. இதன் இன்பங்க ளெல்லாம் துறந்துவிடத் தக்கன' என்றதொரு வாதம் எழுந்தது. 'இவ்வுலக இன்பங்களெல்லாம் அசாசு வதம்; துன்பங்கள் சாசுவதம். இத் தகைய உலகத் தில் நாம் எந்த இன்பங்களையுந் தேடப் புகுதல் மடமை யாகும். எனவே, எந்தக் கடமைகளையுஞ் செய்யப் புகுதல் வீண் சிரமமாகும்' என்ற கக்ஷி ஏற்பட்டது.

ஆனல், இவர்கள் எல்லா இன்பங்களையுந் துறந்து விட்டதாக நடிக்கிருர்களே யன்றி, இவர்கள் அங்ஙு னம் உண்மையிலே துறக்கவில்லை. இவ்வுலகத்தில்

ஜீவர்கள் எல்லா இன்பங்களையுந் துறப்பது ஸாத்யமுமில்லை. கடமைகளைத் துறந்துவிட்டுச் சோம்பேறிகளாகத் திரிதல் ஸாத்யம்; அது மிக ஸுலபமுங்கூட. இந்தச் சோம்பேறித்தனத்தைை ஒரு பெரிய ஸுகமாகக் கருதியே அனேகர் துறவு பூணுகிறார்கள் என்று எனக்குத் தோன்றுகிறது.

இவர்கள் கடமைகளைத் துறந்தனரே யன்றி இன்பங்களைத் துறக்கவில்லை. உணவின்பத்தைத் துறந்து விட்டார்களா? சோறில்லாவிட்டால் உயிர் போய் விடுமே என்றால், அப்போது நீங்கள் உயிரைக் காப்பாற்றிக் கொள்ளும் பொருட்டுத் தொழில் செய்து ஜீவிக்க வேண்டும். ஆடை யின்பத்தை இவர்கள் துறக்க வில்லை. ஸ்நான வின்பத்தைத் துறக்கவில்லை. தூக்க வின்பத்தைத் துறக்கவில்லை. கல்வி யின்பத்தைத் துறக்கவில்லை. புகழின்பத்தைத் துறக்கவில்லை. உயி ரின்பத்தைத் துறக்கவில்லை. வா தின்பத்தைத் துறக்கவில்லை. அவர்களில் முக்யஸ்தர்களாகிய மடாதிபதிகள் பண வின்பத்தையுந் துறக்கவில்லை. இவர்களுடைய போலி வேதாந்தத்தை அழிக்கும் பொருட்டாகவே பகவத்கீதை எழுதப்பட்டது.

உலகமெல்லாம் கடவுள்மயம் என்ற உண்மையான வேதாந்தத்தை கீதை ஆதாரமாக உடையது. மாயை பொய் யில்லை. பொய் தோன்றாது. பின் மாறுகிறதே யெனில், மாறுதல் மாயையின் இயற்கை. மாயை பொய் யில்லை. அது கடவுளின் திருமேனி.

இங்கு தீமைகள் வென்றொழிக்கற் குரியன. நன்மைகள் செய்தற்கும் எய்துதற்கும் உரியன. சரணாகதியால்—கடவுளிடம் தீராத மாறாத பக்தியால்—யோகத்தை எய்துவீர்கள். எல்லா ஜீவர்களையும் ஸமமாகக் கருதக் கடவீர்கள். அதனால், விடுதலை யடைவீர்கள். ஸத்ய விரதத்தால் ஆனந்தத்தை அடைவீர்கள். இல்லறத் தூய்மையால் ஈசத் தன்மை அடைவீர்கள்.

இந்த மஹாத்தான உண்மையையே கீதை உபதேசிக்கிறது.



# மேற்கோள் விளக்கம்.

## கீதையினின்று மேற்கோள்.

| பக்கம். | வரி. | அத்யாயம். | சுலோகம். |
|---|---|---|---|
| 3 | 6—10 | 3 | 5 |
| ,, | 18—21 | 2 | 47 |
| ,, | 22—25 | 6 | 1 |
| 4 | 21—22 | 2 | 48 |
| 5 | 7 | 2 | 48 |
| 5<br>6 | கடைசி<br>1—2 | 6 | 29 |
| 7 | 13—14 | 2 | 17 |
| 12 | 16 | 4 | 34 |
| ,, | 18—21 | 16 | 21 |
| 18 | கடைசி | 4 | 37 |
| 19 | 20 | 4 | 34 |
| 26 | 3—7 | 6 | 6 |
| 33 | 20—26 | 3 | 22 |
| 34 | 1—7 | 3 | 23 |

## வேறு மேற்கோள்.

| பக்கம். | வரி. | ஆகாம். |
|---|---|---|
| 1 | 17—18 | மத்தேயு 18, 3. |
| 13 | 5—8 | திருவாய்மொழி 5, 2, 1. |

| பக்கம். | வரி. | ஆகரம். |
|---|---|---|
| 13 | 13—16 | பாரதி. தோத்திரப். மகாசக்தி வெண்பா 3. |
| 15 | 5—6 | திருவேங்கடமாலை 65. |
| 15 | 13—16 | நமச்சிவாயத் திருப்பதிகம் : தேவாரம் 4, 11, 1. |
| 17 | 4—11 | பாரதி அறுபத்தாறு 15. |
| 33 | 13—15 | கீதாஞ்ஜலி 11. |
| 35 | 6—7 | வெற்றிவேற்கை 25, 3. |
| 36 | 1—5 | பட்டினத்துப். திருவேகம்ப மாலை 1. |
| 37 | 6—7 | தாயு. பராபரக்கண்ணி 211. |
| 38 | 8 | கொன்றைவேந்தன் 3. |
| 38 | 16—25 | தாயு. சச்சிதானந்தசிவம் 6. |
| 39 | 1—6 | |

ஓம் சக்தி.

# சந்திரிகையின் கதை.



## முதல் அத்யாயம்.



### பூகம்பம்.

பொதியை மலைச் சாரலில் வேளாண்குடி என்றொரு அழகான கிராமம் இருக்கிறது. அதற்கருகே, ஒரு சிறிய நதி ஓடுகிறது. நான்கு திசைகளையும் நோக்கினால், நீல மலைச் சிகரங்களும் குன்றுகளும் தோன்றும். ஊரெங்கும் தோப்புக்கள். எனவே, காலையில் எழுந்தால் மாலைவரை எப்போதும் ரமணீயமான பக்ஷிகளின் ஒலிகள் கேட்டுக் கொண்டிருக்கும்.

இந்த ஊரில் மற்ற வீதிகளினின்றும் ஒதுக்கமாக, மேற்றிசையில், நதிக்கருகே ஓர் அக்ரஹாரம் அதாவது பிராமணர் வீதி, இருந்தது. அந்த அக்ரஹாரத்தில் குழந்தைகளெல்லாம் எப்போதும் பக்ஷிகளின் நாதங்களுக்கிடையே வளர்ந்தது பற்றியோ, வேறு எந்தக் காரணத்தாலோ, மிகவும் இனிய குரலுடையனவாயிருந்தன. அக் குழந்தைகள்—விசேஷமாகப் பெண் குழந்தைகள்—பேசும்போது, ஸாதாரண

மாக நம்மைப் போலவே, மனுஷத் தமிழ் பாஷையே பேசுமெனினும், அந்த பாஷையைக் குயில்கள் போலவும் கிளிகள் போலவும் நாகணவாய்ப் புட்கள் போலவும் அற்புதமான குரலில் பேசின.

அந்த அக்ரஹாரத்தின் மேலோரத்திலே கிழக்கைப் பார்த்த ஒரு கிருஷ்ணன் கோயில் இருந்தது. கோயிலுக்கெதிரே புல் ஏராளமாக வளர்ந்து கிடக்கும். அங்கு பசுக்களும் ஒரு சில கழுதைகளும் மேய்ந்துகொண்டிருக்கும். அல்லது, சில பசுக்கள் கிருஷ்ணன் ஸந்நிதிக்கெதிரே படுத்துக்கொண்டு ஸ்வாமியை நோக்கி ஜபம் பண்ணிக் கொண்டிருப்பதுபோல் அசைபோட்டுக் கொண்டிருக்கும். அவற்றின்மீது காக்கைகள் வந்து உண்ணிகளைக் கொத்தி இன்புறுத்தும். சில ஸமயங்களில் கண்ணோரத்தைக் கொத்துவது போல் விளையாடி மாட்டுக்குப் பொழுது போகச் செய்துகொண்டிருக்கும். இதை யெல்லாம் மரக் கிளைகளின் மீதுள்ள பக்ஷிகள் பார்த்து வியப்புரை கூறிக் கொண்டிருக்கும்.

அன்புக்கும் அமைதிக்கும் சாந்திக்கும் அழகுக்கும் இலக்கியமாகத் திகழ்ந்தது அவ் வேளாண்குடி யூர் அக்ரஹாரம். அங்கு, பெண்மக்கள் எல்லாரும் மஹா ஸுந்தரிகள். ஆண்மக்கள் மிகவும் நல்ல குணமுடையோர். ஆனால் பெரும்பாலும் பரம ஏழைகள். பூர்வீக சொத்து, நிலம், தோட்டம் முதலியன—எல்லோருக்கும் சிறிது சிறிதுண்டு. ஆனால், அதிலிருந்து வரும் வரும்படி வெறுமே போஜனத்துக்குக் கூடக் காணாது.

இதில் வேஷ்டிகள், புடவைகள், ரவிக்கைகள், பாவாடைகள், குடுமிக் கலியாணம், பூணூல் கலியாணம், விவாகங்கள், ருது ஸ்நானங்கள், ருது சாந்திகள், சீமந்தங்கள், பல பல பண்டிகைகள், உற்சவங்கள், விழாக்கள் என்பன ஓயாமல் நிகழுமாதலால், அவ்வூர் கிருஹஸ்தர்கள், மேன்மேலும் தம் நில முதலியன சுருங்கவும் வறுமை மேன்மேலும் வளரவும், ஏக்கம் பிடித்து வாழ்ந்து வந்தனர். ஆனால், வயது முதிர்ந்தோரிடையே இத்தனை ஏக்கமும் மனக்குறைவும் குடிகொண்டிருந்தன என்ற செய்தி அவ்வூர்க் குழந்தைகளுக்குத் தெரியாது; பக்ஷிகளுக்குந் தெரியாது, கோயிலெதிரே எப்போதும் செழுமையாக வளர்ந்த புற்றரைகளில் மேய்ந்துகொண்டிருந்த பசுக்களுக்கும், கழுதைகளுக்கும் தெரியாது. இவை எப்போதும் மகிழ்ச்சியிலும், ஆரவாரத்திலும், பாட்டிலும், ஆனந்தக் களியிலும் மூழ்கிக் கிடந்தன.

இந்த அக்ரஹாரத்தில் மற்றெல்லா பிராமணர்களைக் காட்டிலும் அதிக ஏழையான மஹாலிங்கையர் என்பவர் ஒருவர் இருந்தார். அவருடைய குடும்பம் மிகப் பெரிது. வீடு மிகச் சிறிது. அவருடைய கிழத் தாய் தந்தையர் இருவர்; விதவையான தங்கை ஒருத்தி; சுமார் முப்பது வயதுள்ள மனைவி ஒருத்தி; அவளுக்கு ஐந்து பெண் குழந்தைகள். ஆறுவது ப்ரஸவம் நெருங்கிய ஸமயம்.

இத்தனைபேருக்கும் ஆஹாரம் வேண்டுமே? மஹாலிங்கையருக்கு பூர்வ சொத்துக் கிடையாது.

இளமையும், ஊக்கமும், எப்படியேனும் பணம் ஸம்பாதிக்கலாமென்ற நம்பிக்கையும் அவரை விட்டுப் பிரிந்து நெடுங் காலமாய்விட்டது. அவருக்கு சுமார் நாற்பது வயதுக்கு மேலாக வில்லை. அதற்குள்ளே குழந்தைகளின் தொகை வலியாலும், மனைவியின் வாய் வலியாலும், தாய் தந்தையரின் நோய் வலியாலும், விதவைத் தங்கையின் இளமை வலியாலும் ஷை மஹாலிங்கையர் மனத் துயர் பெருகித் தலை மயிரெல்லாம் அன்னத் தூவிபோல் நரைத்துக் கூனிக் குறுகி மிகவும் மெலிந்து, கன்னங்கள் ஒட்டிக் கண்கள் குழி வீழ்ந்து முகம் சுருங்கித் திரை கொண்டு, இளமையிலே பாராட்டிய சிங்கார ரஸமிகுதியால் மேக நோய் கொண்டு, முகத்திலும் முதுகிலும் தோட்களிலும் பரந்த மேகப்படைகளுடையவராய் விளங்கினார்.

இப்படியிருக்கையில் ஒரு மார்கழி மாதத்திரவில், வானம் மைபோல் இருண்டிருந்தது. நக்ஷத்ரங்களை யும் கண்ணுக்குப் புலப்படவில்லை. கிராமத்தாரெல்லாரும் தத் தம் வீடுகளுக்குள்ளே பதுங்கிக் கிடந்தார்கள். வெளியே பெருமழையும் சூறைக் காற்றும் மிகவும் உக்ரமாக வீசத் தொடங்கின. இரண்டு க்ஷணத்துக்கு ஒருமுறை, உலகம் தகர்ந்து விடச் செய்வன போன்ற இடியோசைகள் செவிப்பட்டன. மரங்கள் ஒடிந்து விழும் ஒலி கேட்டது. தோப்புகளெல்லாம் சூறைபோகும் ஒலி பிறந்தது. பக்கத்துக் குன்றுகள் ஒன்றுக்கொன்று மோதிச் சிதறுவனபோன்ற ஓசை தோன்றிற்று.

அக்ரஹாரத்தில் தத் தம் வீடுகளுக்குள்ளே பதுங்கி யிருந்த ஜனங்கள் இன்றுடன் உலகம் முடிந்து போய் விட்டது என்று தம் மனதில் நிச்சயப்படுத்திக் கொண்டார்கள். குழந்தைகளெல்லாம் பயமிகுதியால் கோ கோ என்று அலறின. மாதர்கள் புலம்பினர். ஆண்மக்கள் விம்மினர். சூறைக்காற்றின் ஆர்ப்பு மிகுதிப்பட்டது.

இப்படியிருக்கையில் பூகம்பம் தொடங்கிற்று. அந்த அக்ரஹாரத்திலுள்ள வீடுகளெல்லாம் பழைய வீடுகள். அத்தனை வீடுகளும் சிதறிப் போயின. அத்தனை ஜனங்களும் மடிந்து போயினர்.

மஹாலிங்கையர் வீட்டு வாயிற் புறத்திலிருந்த குச்சிலொன்று மாத்திரம் விழவில்லை. வீட்டு இரேழியில் கூடியிருந்த கிழவர், கிழவி, மஹாலிங்கையர், அவருடைய ஐந்து பெண் குழந்தைகள்—எல்லார் மீதும் வீடு விழுந்து, அவர்களத்தனை பேரும் பிணங்களாகக் கிடந்தனர். வாயிற் குச்சிலில் பிரஸவ வேதனையிலிருந்த மஹாலிங்கையருடைய மனைவியும் அவளுக்குத் துணையாக அவருடைய விதவைத் தங்கையு மிருந்தனர்.

இரவு சுமார் ஏழு மணிக்குத் தொடங்கிய சூறைக் காற்றும் மழையும், காலை நான்கு மணி சுமாருக்கு, பூகம்பத்துடன் முடிவுபெற்றன. அரை மணி நேரத்துக்கெல்லாம் உலகம் அமைதி பெற்று விட்டது. மறு நாள் பொழுது விடிந்தது. விதவைத் தங்கை—அவள் பெயர் விசாலாக்ஷி—வெளியே வந்து பார்த்தாள்.

எல்லா வீடுகளும் விழுந்திருந்தன. எங்கும் மனிதருடல்களும், மிருக பக்ஷிகளின் உடம்புகளும் பிரேதங்களாக விழுந்து கிடந்தன. முழுக்காட்சியும் அவள் பார்க்க நேரமில்லை. காற்றினாலும் மழையினாலும் மோதுண்டு வீதியில் வந்து கிடந்த பிரேதங்களை மாத்திரமே அவள் கண்டாள். இடிந்த வீடுகளுக்குள்ளே செத்துக்கிடக்கும் ஜனங்களை அவள் காணவில்லை. எனினும், தன் வீட்டில் எல்லாரும் செத்தது அவளுக்குத் தெரியுமாதலால், மற்ற வீடுகளிலும் அப்படியே நடந்திருக்க வேண்டுமென்றும் அதுகொண்டே தெருவில் ஆட்களைக் காணவில்லையென்றும் அவள் ஊஹித்துக் கொண்டாள். அப்பொழுது மீளவும் அவளுடைய மனதில், சென்ற பயங்கரமான இரவில் நிகழ்ந்த பயங்கரமான செய்திகள் நினைப்புற லாயின. பூகம்பம் தோன்றினவுடனே மஹாலிங்கையருடைய பிதாவாகிய கிழவர், "ஐயையோ, பூமி ஆடுகிறதே! நாமெல்லோரும் வாயிற் புறத்திலுள்ள குச்சிலுக்குப் போய் விடுவோம். அதுதான் இவ் வீட்டில் சற்றே உறுதியான இடம். என்னை அங்கே கொண்டு விடுங்கள்" என்று அலறினர். அந்தச் சத்தம் மாத்திரம் விசாலாக்ஷியின் செவியிற் பட்டது. அப்புறம் நடந்த பேச்சொன்றும் அவள் செவியிற் படவில்லை. வாயிற் குச்சிலுக்குள் வெளித் திண்ணை வழியாகத் தான் புகலாம். வீட்டுக்குள் ளிருந்தபடியே அங்கு வர வழியில்லை. எனினும், ஒரு சாளரப் பொந்து வழியாக அந்தக் கிழவருடைய பேரோலம் மாத்திரம் புயற் காற்றொலியையும் மிஞ்சி அவளுடைய செவியிற் பட்டது.

ஆனால், 'அங்ஙனம் அவர்கள் குச்சிலுக்குள் வருவது மாத்திரம் சாத்தியமில்லை' யென்பதை அவள் உடனே ஊஹித்துக் கொண்டாள். ஏனெனில், உள்ளேயிருந்தவர்கள் வீட்டு வாயிற் கதவைத் திறந்தன்றோ, திண்ணையிலேறி அதன் வழியாகக் குச்சிலுக்குள் வர வேண்டும்? வாயிற் கதவைத் திறந்த மாத்திரத்திலே ஸப்த மேகங்களும், ஊழிக் காற்றும் வீட்டுக்குள் புகுந்து விடுமன்றோ? ஆதலால், அவர்கள் வெளியேற வில்லையென்று நினைத்துக் கொண்டாள். ஓரிரண்டு க்ஷணங்களில் திடீரென்று உள் வீடெல்லாம் இடிந்து விழுந்த ஒலியும், அங்கிருந்தோர் எல்லாம் கூடி யலறிய பேரொலியும், அவள் செவியிற் பட்டன. எல்லோரும் செத்தார்கள் என்று நிச்சயித்துக் கொண்டாள். தானிருந்த குச்சிலும் விழு மென்று அவள் மிகவும் எதிர் பார்த்தாள். அது விழவில்லை. அதற்குள்ளே பூகம்பம் நின்றுபோய் விட்டது. சிறிது நேரத்துக் கெல்லாம் புயற்காற்றும் மழையும் அடங்கிப் போயின.

இச் செய்திகளை யெல்லாம் எண்ண மிட்டுக் கொண்டு விசாலாக்ஷி தன்னைச் சூழ இடிந்து கிடக்கும் வீடுகளையும் ஒடிந்து கிடக்கும் மரங்களையும் பார்த்து நிற்கையிலே, குச்சிலுக்குள் ளிருந்து "குவா! குவா!" என்ற சத்தம் வந்தது. உள்ளே போய்ப் பார்த்தாள். அண்ணன் மனைவியாகிய கோமதிக்கு ஒரு பெண் குழந்தை பிறந்து கிடந்தது. விசாலாக்ஷி அதற்கு வேண்டிய சிகிச்சைகளெல்லாம் செய்து கொண்டிருக்கையில், கோமதிக்கு மரணாவஸ்தை

நேர்ந்து விட்டது. அவள் சாகும்போது:—"விசாலாக்ஷீ! விசாலாக்ஷீ! நான் இரண்டு நிமிஷங்களுக்கு மேல் உயிருடனிருக்க மாட்டேன். என் பிராணன் போகுமுன்னர் உன்னிடம் சில வார்த்தைகள் சொல்லிவிட்டுப் போகிறேன். அதை உன் பிராணன் உள்ளவரை மறந்து போகாதே! முதலாவது, நீ விவாகம் செய்து கொள். விதவா விவாகம் செய்யத் தக்கது. ஆண்களும் பெண்களும் ஒருங்கே யமனுக்குக் கீழ்ப்பட்டிருக்கிறார்கள். ஆதலால், ஆண்களுக்குப் பெண்கள் அடிமைகளாய், ஆண்களுக்குப் பெண்கள் அஞ்சி ஜீவனுள்ளவரை வருந்தி வருந்தி மடிய வேண்டிய அவசியமில்லை. ஆதலால், நீ ஆண்மக்கள் எழுதி வைத்திருக்கும் நீசத்தனமான சுயநல சாஸ்த்ரத்தைக் கிழித்துக் கரியடுப்பிலே போட்டுவிட்டு, தைர்யத்துடன் சென்னப்பட்டணத்துக்குப் போய் அங்கு கைம்பெண் விவாகத்துக்கு உதவி செய்யும் ஸபையாரைக் கண்டுபிடித்து, அவர்கள் மூலமாக நல்ல மாப்பிள்ளையைத் தேடி வாழ்க்கைப்படு. இரண்டாவது, நீயுள்ளவரை என் குழந்தையைக் காப்பாற்று. அதற்கு சந்திரிகை என்று பெயர் வை." என்றாள்.

விசாலாக்ஷி 'சரி' என்றாள். கோமதியின் உயிர் பரலோகஞ் சென்றுவிட்டது.

# இரண்டாம் அத்யாயம்.

---

### விசாலாக்ஷிக்கு ஜீ. சுப்பிரமணிய அய்யர் செய்த உதவி.

சென்ற அத்யாயத்தில் கூறிய செய்திகள் நிகழ்ந்து சரியாக மூன்று வருஷங்களாயின. 1904-ஆம் வருஷத்தின் இறுதி நடைபெற்றது. அப்போது சென்னப் பட்டணத்தில் 'சுதேசமித்திரன்' பத்திராதிபராகிய ஜீ. சுப்பிரமணிய அய்யர் சில தினங்களுக்கப்பால் பம்பாயில் நடைபெறப்போகிற 'காங்க்ரஸ்' என்ற பாரத ஜன ஸபைக்கொரு பிரதிநிதியாகச் செல்ல வேண்டுமென்றகருத்துடன் யாத்திரைக்கு வேண்டிய உடுப்புக்கள் தின்பண்டங்கள் முதலியன தயார் செய்துகொண்டிருந்தார். அக் காலத்தில் திருவல்லிக்கேணி வீரராகவ முதலித் தெருவில் ஜீ. சுப்பிரமணிய அய்யர் மஹா கீர்த்திபெற்று விளங்கினர். அவருக்குக் கொடிய ரோக மொன்றினால் உடம்பெல்லாம் முகமெல்லாம் சிதைந்து முள் சிரங்குகள் புறப்பட்டிருந்தன. இருந்தாலும் நிகரற்ற மனோ தைர்யத்துடன் அவர் தேசப் பொதுக் காரியங்களை நடத்திவந்தார். மேற்கூறிய 1904 டிஸம்பர் மாஸத்திடையே ஒரு நாட் காலையில் அவர் தம் வீட்டு மேடையின்மேல் தம்முடைய விஸ்தாரமான புஸ்தகசாலையி னருகே ஒரு சாய் நாற்காலியின்மீது சாய்ந்துகொண்டு பத்திரிகை வாசித்துக்கொண்டிருந்தார்.

அவர் முன்னே ஒரு ஸுமங்கலிப் பெண்—அவருடைய இளைய மகள்—ஒரு பிரமாண்டமான ஊறுகாய்ப் பரணியைக் கொண்டு வைத்தாள்.

" இதில் என்னம்மா, வைத்திருக்கிறது?" என்று அய்யர் கேட்டார்.

"நெய்யிலே பொரித்த எலுமிச்சங்காய் ஊறுகாய்; நல்ல காரம் போட்டது" என்று மகள் சொன்னாள்.

" இதையெல்லாம் எப்படிச் சுமந்துகொண்டு போகப் போகிறோம்? அந்த வேலைக்காரனோ பெரிய குருட்டுமுண்டம்" என்று அய்யர் முணுமுணுத்தார்.

இதற்குள், மேடையைவிட்டுக் கீழே இறங்கிச் சென்ற மகள் திரும்பிவந்து, "அப்பா, வாயிலிலே ஒரு பிராமண விதவை ஒரு சிறு குழந்தையுடன் வந்து நிற்கிறாள். ஏதோ அவஸர காரிய நிமித்தமாக உம்மை உடனே பார்க்க வேண்டுமென்று சொல்லுகிறாள்" என்றாள்.

"அவளுக்கு எத்தனை வயதிருக்கும்?" என்று ஜீ. சுப்ரமணிய அய்யர் கேட்டார்.

"இருபது வயதிருக்கலாமென்று தோன்றுகிறது" என்று மகள் சொன்னாள்.

"சரி, ஒரு நாற்காலியைக் கொணர்ந்து என் எதிரே போடு. அந்தப் பெண்ணை வரச் சொல்" என்று அய்யர் சொன்னார்.

மகள் அங்ஙனமே ஒரு நாற்காலி எடுத்துக் கொண்டுவந்து அவரெதிரே போட்டாள். அப்பால்

கீழே சென்றாள். சில க்ஷணங்களுக்குள்ளே, நம்முடைய விசாலாக்ஷி குழந்தை சந்திரிகையுடன் அந்த மேடைக்கு வந்து ஜீ. சுப்பிரமணிய அய்யருக்கெதிரே போட்டிருந்த நாற்காலியின்மேல் உட்கார்ந்தாள்.

எந்த விசாலாக்ஷி? சென்ற அத்யாயத்தில் பூகம்பத்திலே தப்பிப் பிழைத்த விசாலாக்ஷி. அங்ஙனமே பூகம்பத்தில் பிழைத்த சந்திரிகை என்ற குழந்தையுடன் வந்து, ஜீ. சுப்பிரமணிய அய்யர் முடியசைப்பால் உணர்த்திய குறிப்பின்படி, அவரெதிரே ஆஸனத்தில் அமர்ந்தாள்.

"எந்த ஊரம்மா?" என்று அய்யர் கேட்டார்.

"பொதியை மலைச் சாரலில் குற்றாலத்துக்கருகே வேளாண்குடி என்ற கிராமம்" என்று விசாலாக்ஷி சொன்னாள்.

"ஓஹோஹோ! மூன்று வருஷங்களுக்கு முன்பு ஏறக்குறைய இதே மாஸத்தில் மேற்படி கிராமத்தில், சூத்திரத் தெருக்களெல்லாம் தப்பிப் பிழைக்க, அக்ரஹாரம் மாத்திரம் பூகம்பத்தில் அழிந்து போனதாகக் கேள்விப் பட்டேன்; அதே வேளாண்குடி தானா?" என்று அய்யர் கேட்டார்.

விசாலாக்ஷி "ஆம்" என்றாள்.

"நீ மிகவும் யௌவனமுடையவளாகவும் அழகுடையவளாகவும் இருக்கிறாயே! உனக்கு இந்தக் கைம்பெண் நிலைமை நேர்ந்து எத்தனை காலமாயிற்று?" என்று அய்யர் கேட்டார்.

"பதினைந்து வருஷங்களாயின" என்று விசாலாக்ஷி சொன்னாள்.

"உனக்கு இப்போது எத்தனை வயது?" என்று அய்யர் கேட்டார்.

"இருபத்தைந்து" என்று விசாலாக்ஷி சொன்னாள்.

"பத்து வயதில் கன்னிப் பருவத்தில் விதவையாய் விட்டாயா?" என்று அய்யர் கேட்டார்.

"ஆம்" என்று விசாலாக்ஷி சொன்னாள்.

அதைக் கேட்டவுடனே தமது சொந்த மகளொருத்தி இளம் பிராயத்திலே விதவையானதும், பிறகு தாம் அவளுக்கு பம்பாயிலே சென்று தென்னாட்டு வைதிக பிராமணரொருவருக்கு விவாகம் செய்து கொடுத்தும், அம் மகள் தன் கணவனுடன் நீடு சுகித்து வாழும் பாக்கியம் பெறாமல் மிக விரைவிலே மடிந்ததும், தம்முடைய தர்ம பத்தினி உயிர் துறந்ததும்—ஆகிய இச் செய்திகளெல்லாம் ஜீ. சுப்பிரமணிய அய்யரின் ஞாபகத்துக்கு வர, அப்போது, சிங்கத்துக்கும் இடிக்கும் அஞ்சாத அவருடைய வீர நெஞ்சம் இளகி, அவர் பச்சைக் குழந்தைபோல் விம்மி விம்மி அழத் தலைப்பட்டார். சில க்ஷணங்களுக்குள்ளே தம்மைத் தாம் தேற்றிக்கொண்டு, ஜீ. சுப்பிரமணிய அய்யர் விசாலாக்ஷியை நோக்கி, "நீ இங்கே வந்ததின் நோக்கம் யாது?" என்று கேட்டார்.

"என்னைத் தக்க கணவனொருவனுக்கு வாழ்க்கைப் படுத்திக் கொடுக்கவேண்டும். என் கையில் ஒரு

கொழும்புக் காசுகூடக் கிடையாது. ஆகலால், என் கணவன் பணமுடையவனில்லாவிட்டாலும் நல்ல படிப்பும், மாஸந்தோறும் கொஞ்சம் பொருள் ஸம்பாதிக்கும் திறமும் உடையவனாக இருக்க வேண்டும். இந்தக் குழந்தையும் என்னோடு தான் இருக்கும்" என்றாள்.

"இந்த குழந்தை ஏது?" என்று ஜீ. சுப்பிரமணிய அய்யர் கேட்டார்.

"இது என் தமையனாரின் குழந்தை. வேளாண் குடி அக்ரஹாரம் முழுமையும் பூகம்பத்தில் அழிந்த போது, நானும் இக் குழந்தையின் தாயும் மாத்திரம் மழைக்கும் காற்றுக்கும் அந்த பூகம்பத்துக்கும் இரையாகாமல் உயிர் தப்பினோம். பூகம்பமும் புயற் காற்றும் பெருமழையும் அடங்கிச் சிறிது நேரத்துக்கப்பால் இக் குழந்தை பிறந்தது. இதைப் பெறும் கடமை தீர்ந்தவுடன் தாயும் பரலோகம் போய் விட்டாள். சாகும் போது இதன் காவலை என்மீது சுமத்திக் கட்டளையிட்டாள்" என்று விசாலாக்ஷி சொன்னாள்.

"இந்த மூன்று வருஷங்களாக நீ ஆஹாரத்துக்கு என்ன செய்கிறாய்?" என்று ஜீ. சுப்பிரமணிய அய்யர் கேட்டார்.

"செம்புப் பிச்சை; உவாதான மெடுத்து வயிறு வளர்த்து இந்தக் குழந்தையையும் காப்பாற்றிக் கொண்டு வருகிறேன்" என்றாள்.

ஜீ. சுப்பிரமணிய அய்யர் உடனே தம்முடைய கைப்பெட்டியைத் திறந்து நூறு ரூபாய் நோட்

ஒன்றை எடுத்து விசாலாக்ஷி கையில் கொடுத்தார். விசாலாக்ஷி அதனை எழுந்து நின்று வாங்கி, இரண்டு கண்களிலும் ஒற்றிக்கொண்டு, தன் புடவைத் தலைப்பில் முடித்து இடுப்பிலே சொருகிக்கொண்டாள்.

“சரி, அம்மா, நீ போய் வா” என்று ஜீ. சுப்பிரமணிய அய்யர் சொன்னார். அப்போது விசாலாக்ஷி சொல்லுகிறாள்:—“ஐயா, நான் தங்களைப் பிதா ஸ்தானமாக பாவித்துத் தங்களிடம் பணம் வாங்க உடம்பட்டேன். எனினும், நான் இங்கு வந்தது தங்களிடம் பணம் வாங்கிக்கொண்டு போவதற்கன்று என்பதைத் தாங்கள் மறக்கக்கூடாது; கணவனை வேண்டி உங்களிடம் வந்தேன்” என்றாள்.

அது கேட்டு, ஜீ. சுப்பிரமணிய அய்யர்:—“அந்தக் காரியம் என்னால் செய்து கொடுக்கமுடியாது” என்றார்.

“தங்களைத் தவிர எனக்கு வேறு புகலுமில்லை” என்று விசாலாக்ஷி வற்புறுத்தினாள்.

“என்னால் ஸாத்யமில்லையே! நான் என்ன செய்வேன்?” என்றார் அய்யர்.

“நீங்கள் தயவு வைத்தால் ஸாத்யப்படும்” என்று விசாலாக்ஷி சொன்னாள்.

“உன்னிடம் நல்லெண்ணமில்லாமலா, நீ கேட்காமலே உனக்கு நூறு ரூபாய் கொடுத்தேன்?” என்று ஜீ. சுப்பிரமணிய அய்யர் கேட்டார்.

"அவ்வளவு தயவு போதாது. இன்னும் அதிக தயவு செலுத்தவேண்டும்" என்று விசாலாக்ஷி மன்றாடினாள்.

ஜீ. சுப்பிரமணிய அய்யர் தலையைச் சொரிந்தார். சில க்ஷணங்களுக்கப்பால் விசாலாக்ஷியை நோக்கிச் சொல்லுகிறார்:— "ராஜமஹேந்தரபுரத்தில் என்னுடைய ஸ்நேகிதர் ஒருவர் இருக்கிறார். அவருடைய பெயர் வீரேச லிங்கம் பந்துலு. அவர் விதவைகளுக்கு விவாகம் செய்துவைப்பதில் மிகவும் சிரத்தையுடன் உழைத்து வருகிறார். உன் வசம் ஒரு கடிதம் எழுதிக் கொடுக்கிறேன். அதை அவரிடத்தில் கொண்டு கொடு. அவர் உனக்கு வேண்டிய ஸௌகரியம் செய்துகொடுப்பார்" என்றார்.

"சரி" என்றாள் விசாலாக்ஷி.

உடனே, ஜீ. சுப்பிரமணிய அய்யர் தம்முடைய மேஜையின்மேல் வைத்திருந்த மணியைக் குலுக்கினார். கீழேயிருந்து அவருடைய மகள் வந்து, "என்ன வேண்டுமப்பா?" என்று கேட்டாள்.

"அந்த வேலைக்காரப் பயல் இன்னும் வரவில்லையோ?" என்று ஜீ. சுப்பிரமணிய அய்யர் உறுமினார்.

"அவன் பட்டணத்துக்கன்றோ போயிருக்கிறான், ஸ்மித் ஷாப்பிலே போய் மருந்து வாங்கிக் கொண்டுவர? இனி அவன் பன்னிரண்டு மணிக்கு மேலேதான் வருவான். உமக்கென்ன வேண்டும்?" என்றாள்.

"என்னுடைய மேஜை மேலே, பேனா மைக்கூடு வைத்திருக்கிறேன். மேஜை திறந்துதான் இருக்கிறது. அதற்குள்ளே வலப் பக்கத்து அறையில் கடிதமெழுதுந் தாளும் உறைகளும் கிடக்கின்றன. ஒரு தாளும் ஒரு உறையும் கொண்டுவா. மையொத்துந் தாளையும் எடுத்துவா. அடியில் வைத்தெழுத ஒரு தடிப் புஸ்தகம் கொண்டுவா" என்று ஜீ. சுப்பிரமணிய அய்யர் சொன்னார்.

அவர் வேண்டிய ஸாமான்களை யெல்லாம் மகள் கொண்டுவந்து கொடுத்தாள். ஜீ. சுப்பிரமணிய அய்யர் ஒரு கடிதமெழுதி உறைக்குள்ளே போட்டு, அதை மக ளிடம் கொடுத்து "உறையை சரியாக ஒட்டிக்கொண்டு வா" என்றார். அவள் அதை ஒட்டிக்கொண்டுவந்து கொடுத்தாள். கொடுத்து விட்டு, மகள் மறுபடி பேனா வையும் மைக்கூட்டையும் மையொத்தும் தாளையும் கொண்டு மேஜையில் வைத்துவிட்டுக் கீழே சென்று விட்டாள். ஜீ. சுப்பிரமணிய அய்யர் கடிதத்தைக் கையில் வைத்துக்கொண்டே விசாலாக்ஷியை நோக்கி, "உனக்குத் தெலுங்கு தெரியுமா?" என்று கேட்டார். "தெரியும்" என்றாள் விசாலாக்ஷி. "எங்கே படித் தாய்?" என்று அய்யர் கேட்டார்.

"எங்களூரில் நானிருந்த வீட்டுக்குப் பக்கத்து வீட்டில் தெலுங்கப் பிராமணரொருவர் இருந்தார். நான் சிறு குழந்தைப்பிராய முதலாகவே அந்தக் குடும் பத்தாருடன் மிகவும் நெருக்கமாகப் பழகிக் கொண்டு

வந்தபடியால் எனக்குத் தெலுங்கு பாஷை தெலுங்கர் களைப் போலவே பேச வரும்" என்றாள்.

"சரி. உனக்குக் கூடிய சீக்கிரத்தில் நல்ல மணமக னுடன் விவாகம் நடைபெறும். நீங்கள் தம்பதிகளிரு வரும் நெடுங்காலம் இன்புற்று வாழக் கடவீர்" என்று சொல்லி, அய்யர் அவளிடம் காயிதத்தைக் கொடுத் தார். அவள் அக் கடிதத்தை வாங்கி கண்ணிலே ஒற்றிக் கொண்டு மடியில் வைத்துக் கட்டிக்கொண்டாள். பிறகு ஸ்ரீ. சுப்பிரமணிய அய்யரை நோக்கி ஸாஷ்டாங்கமாக நமஸ்காரம் பண்ணிவிட்டு, அவரிடம் விடை பெற்றுக் கொண்டு, குழந்தையை அழைத்துக்கொண்டு சென் றனள். அக் குழந்தையும் ஸ்ரீ. சுப்பிரமணிய அய்யரை நோக்கிப் புன்னகை செய்துகொண்டே போயிற்று.

---

## மூன்றும் அத்யாயம்.

### விசாலாக்ஷியின் ஏமாற்றம்.

ராஜமகேந்திரபுரத்தில் வீரேசலிங்கம் பந்துலு வீட்டைத் தேடிப் போய் விசாலாக்ஷி விசாரித்தாள். அவர் அங்கில்லை யென்றும், அவள் வந்த நாளுக்கு முதல் நாள்தான் புறப்பட்டுச் சென்னப்பட்டணத் துக்குப் போனு ரென்றும் தெரியவந்தது. சென்னை எழும்பூரில் பண்டித வீரேசலிங்கம் பந்துலு ஒரு தனி வீட்டில் தம் மனைவியுடன் வந்து தங்கியிருந்தார்.

விசாலாக்ஷி சென்னப்பட்டணத்துக்கு வந்து, மறு நாட்காலையில் எழும்பூரில் அவர் இருந்த வீட்டிற்குப் போனாள். உள்ளே அவர் மாத்திரம் நாற்காலி மேஜை போட்டு உட்கார்ந்து கொண்டு ஏதோ நூலெழுதிக் கொண்டிருந்தார்.

விசாலாக்ஷி அவரை நமஸ்காரம் பண்ணினாள். ஜீ. சுப்பிரமணிய அய்யரிடமிருந்து தான் வாங்கிக்கொண்டு வந்த கடிதத்தைக் கொடுத்தாள். வீரேசலிங்கம் பந்துலு தன் எதிரேயிருந்த நாற்காலியின் மீது விசாலாக்ஷியை உட்காரச் சொன்னார். அவள் தன் மடியில் சந்திரி கையை வைத்துக்கொண்டு அந் நாற்காலியின் மீதுட் கார்ந்தாள். வீரேசலிங்கம் பந்துலு அவள் கொணர்ந்த கடிதம் முழுதையும் வாசித்துப் பார்த்துவிட்டு, அவளை நோக்கி 'இன்றைக்கென்ன கிழமை?' என்று தமிழில் கேட்டார். அவள் 'புதவாரமு' என்று தெலுங்கில் மறு மொழி சொன்னாள்.

"மீகு தெலுகு வச்சுனா?" என்று வீரேசலிங்கம் பந்துலு கேட்டார்.

"அவுனு சால பாக வச்சுனு" என்றாள் விசாலாக்ஷி.

இங்கு நமது கதை வாசிப்போரிலே பலருக்குத் தெலுங்கு பாஷை தெரிந்திருக்க வழியில்லை யாதலால், அவ் விருவருக்குள் தெலுங்கில் நடைபெற்ற ஸம் பாஷணையை நான் தமிழில் மொழி பெயர்த்துத் தரு கிறேன்.

"உனக்குத் தாய் தந்தையர் இருக்கிறார்களா?" என்று வீரேசலிங்கம் பந்துலு கேட்டார்.

"இல்லை" என்றாள் விசாலாக்ஷி.

"அண்ணன், தம்பி, அக்காள், தங்கை—?"

"எனக்கு யாருமே இல்லை. அதாவது, என்னுடைய விவகாரங்களில் கவனம் செலுத்தி என்னைக் காப்பாற்றக்கூடிய பந்துக்கள் யாருமில்லை. அப்படியே சிலர் இருந்தபோதிலும், நான் இப்போது விவாகம் செய்து கொள்ளப் போவதினின்றும் அவர்கள் என்னை ஜாதிக்குப் புறம்பாகக் கருதிவிடுவார்கள்" என்று விசாலாக்ஷி சொன்னாள்.

"உனக்கு என்னென்ன பாஷைகள் தெரியும்?" என்று வீரேசலிங்கம் பந்துலு கேட்டார்.

"எனக்குத் தமிழ் தெரியும். தெலுங்கு தெரியும். இரண்டு பாஷைகளும் நன்றாக எழுதவும் வாசிக்கவும் பேசவுந் தெரியும்" என்று விசாலாக்ஷி சொன்னாள்

"இங்கிலீஷ் தெரியுமா?" என்று பந்துலு கேட்டார்.

"தெரியாது" என்றாள் விசாலாக்ஷி.

"கொஞ்சங் கூட?" என்று கேட்டார்.

"கொஞ்சங்கூடத் தெரியாது" என்றாள்.

"ஸங்கீதம் தெரியுமா?" என்று பந்துலு கேட்டார்.

"எனக்கு நல்ல தொண்டை. என் பாட்டை

மிகவும் நல்ல பாட்டென்று என் சுற்றத்தார் சொல்வார்கள்'' என்று விசாலாக்ஷி சொன்னாள்.

''வீணை, பிடில், ஹார்மோனியம்—ஏதேனும் வாத்யம் வாசிப்பாயா?'' என்று பந்துலு கேட்டார்.

''ஒரு வாத்யமும் நான் பழகவில்லை'' என்றாள் விசாலாக்ஷி.

''தாளந் தவறாமல் பாடுவாயா?'' என்று பந்துலு கேட்டார்.

''தாளம் கொஞ்சங்கூடத் தவறமாட்டேன்'' என்று விசாலாக்ஷி சொன்னாள்.

''எங்கே? ஏதேனும் ஒரு பாட்டுப் பாடிக் காட்டு, பார்ப்போம்'' என்று பந்துலு கேட்டார்.

அந்த ஸமயத்தில் சமையலறைக்குள் ஏதோ வேலை செய்து கொண்டிருந்தவளாகிய வீரேசலிங்கர் பந்துலுவின் கிழமனைவி உள்ளேயிருந்து இவர்கள் பேசிக் கொண்டிருந்த கூடத்துக்கு வந்து ஒரு நாற்காலியின் மீது உட்கார்ந்தாள். அவளைக் கண்டவுடன், விசாலாக்ஷி எழுந்து நமஸ்காரம் பண்ணினாள். அவள் ஆசீர்வாதங் கூறி வீற்றிருக்க விடைகொடுத்து விசாலாக்ஷியின் மடியிலிருந்த குழந்தையை வாங்கித் தன் மடியில் வைத்துக்கொண்டாள்.

குழந்தை வீறிட்டு அழத் தொடங்கிற்று.

''என்னிடம் கொடு, நான் அழாதபடி வைத்துக் கொள்ளுகிறேன்'' என்று பந்துலு சொன்னார். அவள் அக் குழந்தையைத் தன் கணவனிடம் கொடுத்தாள்.

அவர் மடிக்குப் போனவுடனே குழந்தையாகிய சந்திரிகை அழுகையை நிறுத்தியது மட்டுமன்றி வாயைத் திறந்து புன்னகை செய்யத் தொடங்கினாள்.

"கிழவருக்கு வேறொன்றுந் தெரியாவிட்டாலும், குழந்தைகளை அழாதபடி வைத்துக் கொள்வதில் மிகவும் ஸமர்த்தர்" என்றாள் கிழவி.

"ஆமாம்! எனக்கென்ன தெரியும்? படிப்புத் தெரியுமா, இழவா? நீ தான் ஸகல கலா பண்டிதை" என்று சொல்லி வீரேசலிங்கம் பந்துலு முறுவலித்தார்.

அப்பால், வீரேசலிங்கம் பந்துலு தமக்கு ஜீ. சுப்பிரமணிய அய்யர் எழுதிய கடிதத்தில் கண்டபடி விசாலாக்ஷியின் விருத்தாந்தங்களை யெல்லாம் விரித்துக் கூறினார்.

அவருடைய மனைவி இதைக் கேட்டு:—"சென்ற வாரம் தங்களைப் பார்க்கும்பொருட்டுத் தஞ்சாவூர் டிப்டி கலெக்டர் ஒரு அய்யங்கார் வந்திருந்தாரன்றோ? அவர் தமக்கு ஒரு விதவைப் பெண் பார்த்து விவாகம் செய்து வைக்கவேண்டுமென்று தங்களை வேண்டினாரன்றோ? அவருக்கு இந்தப் பெண்ணைக் கொடுக்கலாம். இவளுடைய முதல் புருஷன் இவள் ருது ஆவதற்கு முன்னே யிறந்தானா? பிந்தி இறந்தானா?" என்று வினவினாள்.

அப்போது வீரேசலிங்கம் பந்துலு:—"அந்த விஷயம் உனக்குச் சொல்லத் தவறிவிட்டேனா? இதோ

சொல்லுகிறேன் கேள். இவளுக்குப் பத்தாம் வயதிலே அந்தப் புருஷன் இறந்துபோனான். அவன் இறந்து போய் இப்போது பதினைந்து வருஷங்களாயின" என்றார்.

"சரி; அப்படியானால் அந்த டிப்டிகலெக்டர் யாதோர் ஆக்ஷேபமின்றி இவளை மணம்புரிந்து கொள்வார். முதற் புருஷனுடன் கூடியனுபவிக்காமல் கன்னிப் பருவத்திலே தாலியறுத்த பெண் தமக்கு வேண்டுமென்று அவர் சொன்னாரன்றோ?" என்று கிழவி கேட்டாள்.

"ஆம்; இவள்தான் அவர் விரும்பிய லக்ஷணங்களெல்லாம் பொருந்தியவளாக இருக்கிறாள். இவளை அவர் அவசியம் மணம்புரிந்து கொள்ள விரும்புவார். நீ சொல்லுமுன்பே, நான் இந்தக் கடிதத்தை வாசித்துப் பார்த்த மாத்திரத்தில், ஷை டிப்டி கலெக்டர் கோபாலய்யங்காரை நினைத்தேன். ஆனால் 'இந்தப் பெண் அவரை மணம்புரிந்துகொள்ள உடன்படுவாளோ' என்பதுதான் ஸந்தேஹம்" என்று பந்துலு சொன்னார்.

இதைக் கேட்டவுடனே கிழவி:—"ஏன்? அவரிடத்தில் என்ன குற்றங் கண்டீர்? எலுமிச்சம் பழம் போலே நிறம்; ராஜ பார்வை; பருத்த புஜங்கள்; அகன்ற மார்பு; ஒரு மயிர்கூட நரையில்லை; நல்ல வாலிபப் பருவம். டிப்டி கலெக்டர் உத்தியோகம் பண்ணுகிறார். எத்தனை கோடி தவம் பண்ணியோ, இவளுக்கு அப்படிப்பட்ட புருஷன் கிடைக்கவேண்டும்" என்றாள்.

அப்போது வீரேசலிங்கம் பந்துலு:—"அந்த கோபாலய்யங்கார் நீ சொன்ன லக்ஷணங்களெல்லாம் உடையவரென்பது மெய்யே. ஆனால் சாராயம் குடிக்கிறார். மாம்ஸ போஜனம் பண்ணுகிறார். கட்குடியர் வேறென்ன நல்ல லக்ஷணங்களுமுடையவராக இருப்பினும் அவற்றை விரைவில் இழந்து விடுவார்கள். அவர்களுடைய செல்வமும் பதவியும் விரைவில் அழிந்து போய்விடும்" என்றார்.

இது கேட்டு விசாலாக்ஷி:—"சரி. அவர் என்னை விவாகம் செய்துகொள்ளும்படி ஏற்பாடு செய்யுங்கள். அவருடைய கெட்ட குணங்களை யெல்லாம் நான் மாற்றிவிடுகிறேன்" என்றாள்.

"குடி வழக்கத்தை மாற்ற பிரமதேவனாலேகூட முடியாது" என்று வீரேசலிங்கம் பந்துலு சொன்னார்.

அதற்கு விசாலாக்ஷி:—"என்னால் முடியும். ஸாவித்ரி தன் கணவனை யமனுலகத்திலிருந்து மீட்டுக் கொண்டு வரவில்லையா? பெண்களுடைய அன்புக்கு ஸாத்யப்படாதது யாதொன்றுமில்லை. நான் அவருடைய மாம்ஸ போஜன வழக்கத்தை உடனே நிறுத்தி விடுவேன். மது வழக்கத்தை ஓரிரண்டு வருஷங்களில் நிறுத்திவைப்பேன். மற்ற லக்ஷணங்களெல்லாம் அவரிடம் நல்லனவாக இருப்பதால் இவ்விரண்டு குற்றங்களிருப்பது பெரிதில்லை. நான் அவரை மணம் புரிந்து கொள்ள முற்றிலும் ஸம்மதப் படுகிறேன்" என்றாள்.

இது கேட்டு வீரேசலிங்கம் பந்துலு:—'சரி.

பாட்டுப் பாடத் தெரியும் என்றாயே? ஏதேனும் கீர்த்தனம் பாடு, கேட்போம்" என்றார்.

"சுருதிக்குத் தம்பூர் இருக்கிறதோ?" என்று விசாலாக்ஷி கேட்டாள்.

"ஹார்மோனியம் இருக்கிறது" என்று சொல்லி வீரேசலிங்கம் பந்துலுவின் மனைவி உள்ளேபோய் ஒரு நேர்த்தியான சிறிய அழகிய 'மோஹின்' பெட்டியை எடுத்துக்கொண்டுவந்து விசாலாக்ஷியிடம் கொடுத்தாள்.

பெட்டியை மடிமீதுவைத்து விசாலாக்ஷி முதற் கட்டை சுருதி வைத்துக்கொண்டு மிகவும் ஸன்னமான அற்புதமான குரலில் தியாகய்யர் செய்த "மாருபல்கு கொன்னு லேமிரா" (மறுமொழி சொல்லாதிருப்ப தென்னடா?) என்ற தெலுங்குக் கீர்த்தனையைப் பாடினாள். கால் விரல்களினால் தாளம் போட்டாள்.

அப்போது அந்த வீட்டு வாசலில் ஒரு மோட்டார் வண்டி நின்ற சத்தம் கேட்டது. சேவகனொருவன் ஒரு சீட்டைக் கொண்டுவந்து வீரேசலிங்கம் பந்துலுவிடம் கொடுத்தான். அதைப் பார்த்தவுடனே வீரேசலிங்கம் பந்துலு எழுந்து தன் கையிலிருந்த குழந்தை சந்திரிகையை விசாலாக்ஷியிடம் நீட்டினார். அவள் அந்த கீர்த்தனத்தில் பல ஸங்கதிகளுடன் அநுபல்லவி பாடி முடித்து மறுபடி "மாரு பல்க" என்ற பல்லவி யெடுக்குந் தறுவாயிலிருந்தாள்.

வீரேசலிங்கம் பந்துலு குழந்தையை நீட்டின வுடனே, விசாலாக்ஷி தன் கையிலிருந்த ஹார்மோனியப் பெட்டியைக் கீழே வைத்துவிட்டு எழுந்து நின்று குழந்தையைக் கையில் வாங்கிக்கொண்டாள்.

"என்ன விசேஷம்? யார் வந்திருக்கிறார்கள்?" என்று பந்துலுவை நோக்கி அவருடைய மனைவி கேட்டாள்.

"கோபாலய்யங்காரே வந்து விட்டார். பழம் நழுவிப் பாலில் விழுந்தது" என்று சொல்லி வீரேசலிங்கம் பந்துலு மேல் வேஷ்டியை எடுத்துப் போர்த்துக் கொண்டு, மட மட வென்று வெளியே சென்றார்.

இவர் வெளியே போனவுடன், கிழவி விசாலாக்ஷியை நோக்கி, "அவர்களிருவரும் வந்தால் தமக்குள்ளே பேசிக்கொண்டிருப்பார்கள். நாம் சமையலறைக்குப் போய்விடுவோம். இன்று பகலில் கோபாலய்யங்கார் இங்கேயே போஜனம் பண்ணுவார். அவர் பந்துலுவைப் பார்க்க வந்தால், ஒரு வேளை ஆஹாரமாவது இங்கு செய்யாமல் போவது வழக்கமில்லை. மேலும் இப்போது அவருக்கு ராஜாக் காலம். ஆதலால் நாம் விருந்துக்கு அழைத்தால் மறுத்துச் செல்ல வேண்டிய ஹேது இராது. நீயும் இங்கேயே இரு. நாளைக்குப் போகலாம். பந்துலுவுக்கும் எனக்கும் மாத்திரமென்று ஒரு ரஸம், அன்னம், சட்னி, அப்பளம் பண்ணிவைக்கக் கருதியிருந்தேன். இப்போது விருந்து வந்து விட்டது.

நேற்று வாங்கிக்கொண்டு வந்த வெங்காயமும் புடலங்காயும் நிறைய மிஞ்சிக் கிடக்கின்றன. வெங்காய ஸாம்பார், தேங்காய் சட்னி, மைஸூர் ரஸம், புடலங்காய் பொடித்தூவல், வடை, பாயஸம் இவ்வளவும் போதும். அப்பளத்தை நிறையப் பொரித்து வைப்போம். கோபாலய்யங்காருக்குப் பொரித்த அப்பளத்தில் மோஹம் அதிகம். சரி. நீ காலையிலே ஸ்நாநம் பண்ணிவிட்டுத் தான் வந்திருக்கிறாய். குழந்தையை வேலைக்காரியிடம் கொடுத்தால் விளையாட்டுக் காட்டிக் கொண்டிருப்பாள். நீ கைகால் அலம்பிவிட்டு என்னுடன் சமையலுக்கு வா" என்றாள்.

விசாலாக்ஷி "அப்படியே சரி" என்றாள். மாதர் இருவரும் சமையலறைக்குள்ளே புகுந்தனர். வேலைக்காரியும் குழந்தை சந்திரிகையும் அவ்வீட்டுக் கொல்லையிலிருந்த விஸ்தாரமான பூஞ்சோலையில் மர நிழலில் வீற்றிருந்து பக்ஷிகளின் விளையாட்டுக்களையும் அற்புதமான பாட்டுகளையும் ரஸித்துக்கொண்டிருந்தனர்.

குழந்தை சந்திரிகைக்கு வயது இப்போது மூன்று தானாயிற்று. எனினும், அது சிறிதேனும் கொச்சைச் சொற்களும் மழலைச் சொற்களும் இல்லாமல் அழுத்தந் திருத்தமாக வார்த்தை சொல்லும். அந்தக் குழந்தையின் குரல் சிறிய தங்கப் புல்லாங்குழலின் ஓசையைப் போன்றது. குழந்தையின் அழகோ வர்ணிக்குந் தரமன்று. தெய்விக ரூபம்; வனப்பின் இலக்கியம்.

சோலைப் பறவைகளெல்லாம் இக் குழந்தையின் அழகைக் கண்டு மயங்கிக் களிகொண்டு இதன் தலை

யைச் சுற்றிச் சுற்றி வட்டமிடலாயின. பலவிதக் குருவி களும், குயில்களும், கிளிகளும், நாகணவாய்களும் தங் களுக்குத் தெரிந்த நாதங்களில் மிகவும் அழகிய நாதங் களைப் பொறுக்கியெடுத்து, இக் குழந்தையின் முன்னே வந்து நின்றொலித்தன. வானரங்கள் தமக்குத் தெரிந்த பாய்ச்சல்களிலும் நாட்டியங்களிலும் மிகவும் வியக்கத்தக்கனவற்றை இக் குழந்தைக்குக் காண் பித்தன.

புன்னகை செய்த மலர்ச் சிறு வாயைச் சந்திரிகை மூடவேயில்லை. வானமும், ஸூர்யனும், ஒளியும், மேகங்களும், மரங்களும், செடிகளும், கொடிகளும், மலர்களும், ஸுந்தரப் பக்ஷிகளும் கூடிக் காலை நேரத் தில் விளைவித்த அற்புதக் காட்சியிலும், பறவைகளின் ஒலிகளிலும் சந்திரிகை சொக்கிப்போய் விட்டாள்.

ஒரு ஸமயம் அவள் தன்னை மறந்து எழுந்து வானத்தை நோக்கி நின்று இரண்டு கைகளையும் கொட் டிக்கொண்டு கூத்தாடுவாள். ஒரு ஸமயம் பக்ஷிகளின் ஒலிகளை அனுசரித்துத் தானும் கூவுவாள்.

இங்ஙனமிருக்கையில், வேலைக்காரி குழந்தையை நோக்கி:—“நீ ஒரு பாட்டுப்பாடு” என்றாள். “அத்தை கற்றுக் கொடுத்த ‘நந்தலால்’ பாட்டுப் பாடலாமா?” என்று சந்திரிகை கேட்டாள்.

“அந்த அம்மா உனக்குத் தாயில்லையா? அத்தை யா?” என்று வேலைக்காரி கேட்டாள்.

அதற்குச் சந்திரிகை:—“என் தந்தையும், தாயும்

நான் பிறந்தன்றைக்கே செத்துப் போய் விட்டார்கள். இந்த ஸங்கதி எனக்கு அத்தை சொன்னாள். நடுராத்திரி வேளையாம். பூமி நடுங்கிற்றும். பேய்க் காற்றடித்ததாம். சோனை மழை பெய்ததாம். எங்கள் ஊர் முழுதும், எல்லா வீடுகளும் இடிந்து விழுந்து, அத்தனை ஜனங்களும் செத்துப் போய் விட்டார்களாம். எங்கள் வீடும் இடிந்து அப்பா, தாத்தா, பாட்டி, என்னுடைய அக்காமார் ஐந்து குழந்தைகள் ஆகிய எல்லாரும் செத்துப்போய் விட்டார்கள். அம்மாவும் அத்தையு மிருந்த குச்சில் மாத்திரம் இடிந்து விழவில்லை. அம்மா வயிற்றுக்குள்ளே நான் இருந்தேன். அப்பால் நான் அந்த இராத்திரியிலேயே பிறந்தேன். நான் பிறந்தவுடனே அம்மா செத்துப் போனாள். இதுவெல்லாம் அத்தை எனக்குச் சொன்னாள். அது முதல் எனக்குப் பசுவின் பாலும் சாதமும் கொடுத்து, அத்தைதான் காப்பாற்றிக்கொண்டு வருகிறாள்" என்று தன் குழந்தைப் பாஷையில் கால்மணி நேரத்தில் சொல்லி முடித்தது. ஆனால் உடைந்த சொற்களும், நிறுத்தி, நிறுத்தி, யோசித்து, யோசித்து, மெல்ல மெல்லப் பேசுவதும் இருந்தனவே யல்லாது, பொருள் விளங்காததும் உருச் சிதைந்தது மாகிய குதலைச்சொல் ஒன்றுகூடக் கிடையாது.

இங்ஙனம் அந்த அழகிய குழந்தை பேசிக் கொண்டு வருகையில் அதன் விழிகளிலும் இதழ்களிலும் பொறி வீசி யெழுந்த அன்புச் சுடரையும் அறிவுச் சுடரையும் பணிப்பெண் மிகவும் உற்று

நோக்கி கவனித்துக்கொண்டு வந்தாள். அவள் அதன் அழகில் மயங்கிப் போய் அதனை எடுத்து மார்பாரத் தழுவிக்கொண்டு முகத்தோடு முக மொற்றி முத்த மிட்டாள்.

அந்த ஸாயம் காலை பதினொரு மணியிருக்கும். ஸுகமான காற்று வீசிக்கொண்டிருந்தது. அந்தப் பணிப்பெண் அவளை முத்தமிடும் செய்கையை இருவர் பார்த்துக்கொண்டு நின்றனர். அவ் விருவரில் ஒருவர் அவள்மீது காதல் கொண்டார்.

---

## நான்காம் அத்யாயம்.



### வீரேசலிங்கம் பந்துலு வீட்டில் விருந்து.

மோட்டார் வண்டியிலிருந்து டிப்டி கலெக்டர் கோபாலய்யங்காரைத் தக்க உபசார வார்த்தைகளுடன் கைகொடுத்தழைத்து வந்து வீரேசலிங்கம் பந்துலு வீட்டுக்குள் தமது படிப்பறையில் நாற்காலியில் உட்கார்த்தி காபி கொணர்ந்து கொடுத்தார். நெய்த் தேங்குழல் நான்கைத் தின்று, ஒரு பெரிய வெள்ளி ஸ்தாலி நிறையக் காபியும் குடித்துவிட்டு, கோபாலய்யங்கார் "ஹோ" என்று ஏப்பமிட்டுச் சாய்வு நாற்காலியின் மீது சாய்ந்துகொண்டார். அவரிடம் வீரேசலிங்கம் பந்துலு ஒரு வெற்றிலைத் தட்டு நிறைய வெற்றிலை, பாக்கு, சுண்ணாம்பு வாஸனைத் திரவியங்களுடன் கொண்டுவைத்தார். அது முழுதையும் அய்யங்கார்

மென்று மென்று முக்கால்மணி நேரத்தில் ஹதம் பண்ணிவிட்டார்.

அப்பால் பந்துலு அவரிடம் ஒரு தெலுங்கு பத்திரிகையை நீட்டினார். அவர் அதை ஆதிமுதல் அந்தம் வரை, விளம்பரங்களுட்பட, ஒரு வரி கூட மிச்ச மில்லாமல் வாசித்து முடித்தார். கோபாலய்யங்கார் இங்கிலீஷ், ஸம்ஸ்க்ருதம், தமிழ், தெலுங்கு நான்கு பாஷைகளிலும் உயர்ந்த பயிற்சியுடையவர். இவர் தெலுங்கு ஜில்லாக்களில் சில வருஷங்களில் வேலை பார்த்த ஸமயத்தில் தெலுங்கு பாஷையைத் தன் தாய் மொழிக்கு நிகராகப் பயின்றுகொண்டார்.

இவர் பத்திரிகை வாசித்து முடித்தபின், இருவரும் வீட்டுக் கொல்லையிலே போய்ச் சிறிது நேரம் உலாவிக் கொண்டிருந்தனர்; பிறகு ஸ்நானம் பண்ணினார்கள்; போஜனம் பண்ண உட்கார்ந்தார்கள்.

தேவலோகத்து விருந்துபோன்ற சமையல் பக்குவம். வீரேசலிங்கம் பந்துலுக்கு மூர்ச்சைபோடத் தெரிந்தது. இத்தனை ருசியான உணவை அவர் தம்முடைய ஜன்மத்தில் உண்டதில்லை. கனவில் கண்டதில்லை. கற்பனையில் எட்டினதில்லை. தின்னத் தின்னத் தின்ன ருசி தெவிட்டவேயில்லை. கோபாலய்யங்காருடைய முகத்தைப் பந்துலு ஒரு முறை திரும்பிப் பார்த்தார். பந்துலுவின் முகத்தை அய்யங்கார் ஒரு முறை திரும்பிப் பார்த்தார்.

பந்துலுவின் மனைவி பரிமாறிக்கொண்டிருந்தாள்.

"யாருடைய சமையல் தெரியுமா?" என்று பந்துலு வின் மனைவி கேட்டாள். "காலையில் வந்தாளே, அந்தப் பெண்ணுடைய சமையலா?" என்றார் பந்துலு.

"ஆம்" என்றாள் பந்துலுவின் மனைவி.

"அந்தப் பெண்ணை இங்கு சற்றே வரச்சொல். நம்முடைய கோபாலய்யங்கார் அவளுடைய முகத் தின் அழகையும் அவள் சொல்லின் அழகையும் அவ ளறிவின் அழகையும் பார்க்கவேண்டும். சமையலழகை மாத்திரம் பார்த்தால் போதுமா? அந்த மஹா ஸுந்த ரியின் ஸகல ஸௌந்தர்யங்களையும் பார்க்க வேண் டாமா?" என்றார் வீரேசலிங்கம் பந்துலு.

"அவளுக்கு பலமான தலைநோவு. சமையல் சிரமம் யாத்திரை சிரமம் எல்லாம் சேர்ந்து அவளுக் குத் தலைநோவு உண்டாக்கிவிட்டன. இராத்திரி அவ ளுக்கு உடம்பு நேராய்விடும். அப்போது அய்யங்கார் அவளைப் பார்க்கலாம்" என்று பந்துலுவின் மனைவி சொன்னாள். அப்பால் நெடுநேரம் இருவரும் ஆஹா ரம் பண்ணிக்கொண்டிருந்தார்கள். போஜனம் முடிந்து கை கழுவிவிட்டுப் பந்துலுவும் அய்யங்காரும் மறுபடி பந்துலுவின் படிப்பறையில் வந்து நாற்காலிகளில் உட் கார்ந்துகொண்டார்கள். மேஜைமேல் பந்துலுவின் மனைவி கொண்டுவந்து வைத்த தாம்பூலத்தை எடுத் துப்போடத் தொடங்குகையில் "இதுவே சுவர்க்கம்" என்று பந்துலு சொன்னார்.

"எது?" என்று பந்துலுவின் மனைவி கேட்டாள்.

"இப்போது செய்த போஜனம்" என்று பந்துலு சொன்னார்.

"சமையல் ருசியாக இருந்ததா?" என்று பந்துலுவின் மனைவி கோபாலய்யங்காரை நோக்கி வினவினாள்.

"மிகவும் ருசியாக இருந்தது" என்று கோபாலய்யங்கார் சொன்னார். அந்த ஸமயத்தில் கோபாலய்யங்காருடைய மனம் அங்ஙனம் ருசியாகச் சமையல் செய்த பெண்ணின் அழகையும், புத்தி நுட்பத்தையும், சொல்லினிமையையுங் குறித்து வீரேசலிங்கம் பந்துலு செய்த வர்ணனைகளைப் பற்றிச் சிந்திக்கலாயிற்று. அவள் உண்மையாகவே அத்தனை அற்புதமான பெண்தானா? அல்லது பந்துலு நூலாசிரியராகையால் வெறுமே கற்பனை தான் சொன்னாரா?" என்று அவருக்கு ஓர் ஐயமுண்டாயிற்று.

அப்போது பந்துலு தன் மனைவியை நோக்கி, "அந்தப் பெண் தன்னுடன் கொண்டுவந்திருக்கும் குழந்தையை இங்கே கூட்டிவா" என்றார். "சரி" என்று சொல்லிப் பந்துலுவின் மனைவி சமையலறைக்குள்ளே போனாள்.

அப்போது கோபாலய்யங்கார் வீரேசலிங்கம் பந்துலுவை நோக்கி:—அந்தப் பெண் அக் குழந்தைக்கு உறவெப்படி?" என்று கேட்டார்.

"அந்தப் பெண்ணுடைய தமையனார் மகள் அக் குழந்தை. அவர்களுடைய கதை மிகவும் ரஸமானது. நான் அதை உங்களுக்குப் பின்பு சொல்லு

"இப்போது செய்த போஜனம்" என்று பந்துலு சொன்னார்.

"சமையல் ருசியாக இருந்ததா?" என்று பந்துலுவின் மனைவி கோபாலய்யங்காரை நோக்கி வினவினாள்.

"மிகவும் ருசியாக இருந்தது" என்று கோபாலய்யங்கார் சொன்னார். அந்த ஸமயத்தில் கோபாலய்யங்காருடைய மனம் அங்ஙனம் ருசியாகச் சமையல் செய்த பெண்ணின் அழகையும், புத்தி நுட்பத்தையும், சொல்லினிமையையுங் குறித்து வீரேசலிங்கம் பந்துலு செய்த வர்ணனைகளைப் பற்றிச் சிந்திக்கலாயிற்று. அவள் உண்மையாகவே அத்தனை அற்புதமான பெண்தானா? அல்லது பந்துலு நூலாசிரியராகையால் வெறுமே கற்பனை தான் சொன்னாரா?" என்று அவருக்கு ஓர் ஐயமுண்டாயிற்று.

அப்போது பந்துலு தன் மனைவியை நோக்கி, "அந்தப் பெண் தன்னுடன் கொண்டுவந்திருக்கும் குழந்தையை இங்கே கூட்டிவா" என்றார். "சரி" என்று சொல்லிப் பந்துலுவின் மனைவி சமையலறைக்குள்ளே போனாள்.

அப்போது கோபாலய்யங்கார் வீரேசலிங்கம் பந்துலுவை நோக்கி:—அந்தப் பெண் அக் குழந்தைக்கு உறவெப்படி?" என்று கேட்டார்.

"அந்தப் பெண்ணுடைய தமையனார் மகள் அக் குழந்தை. அவர்களுடைய கதை மிகவும் ரஸமானது. நான் அதை உங்களுக்குப் பின்பு சொல்லு

தோற்றம் கோபாலய்யங்காரின் மனக் கண்ணுக்கு முன்னே எழுந்தது.

"குழந்தாய், உனக்குப் பாட்டுப் பாடத் தெரியுமா?" என்று கோபாலய்யங்கார் கேட்டார். "தெரியும்" என்றாள் சந்திரிகை. "எங்கே, ஒன்று பாடு. கேட்போம்" என்றார் கோபாலய்யங்கார்.

"அத்தை எனக்குக் கற்றுக்கொடுத்த நந்தலால் பாட்டுப் பாடலாமா?" என்று சந்திரிகை கேட்டாள்.

"பாடு" என்றார் கோபாலய்யங்கார்.

சந்திரிகை பாடத் தொடங்கினாள் :—

## நந்தலால் பாட்டு.

யதுகுல காம்போதி ராகம்—ஆதி தாளம்.

ஸஸ்ஸாஸா—ஸம்மாபதா—பததபபமபா—பாபா
பநீஸதபா—மாகா—ஸரிமகரீ—கெகரிரிஸஸா.

பார்க்கு மரத்திலெல்லாம், நந்தலாலா—நின்றன்
பச்சை நிறந்தோன்று தடா, நந்தலாலா ;
காக்கைச் சிறகினிலே, நந்தலாலா—நின்றன்
கரியவிழி தோன்றுதடா, நந்தலாலா ;
கேட்கு மொலியி லெல்லாம், நந்தலாலா—நின்றன்
கீத மிசைக்கு தடா, நந்தலாலா ;
தீக்குள் விரலை வைத்தால், நந்தலாலா—நின்னைத்
தீண்டு மின்பந் தோன்றுதடா, நந்தலாலா.

இந்தப் பாட்டை மிகவும் மெதுவாக, ஒவ்வோரடியையும் இரண்டுதரம் சொல்லி இசை தவறாமல், தாளந் தவறாமல், கந்தர்வக் குழந்தை பாடுவது போல்

அக் குழந்தை மிகவும் அற்புதமாகப் பாடி முடித்தது. கோபாலய்யங்காருக்கு மூர்ச்சை போட்டுவிடத் தெரிந்தது. அவர் தம்முடைய ஜன்மத்தில் இவ்வித ஸங்கீதம் கேட்டதில்லை; கனவில் கண்டதில்லை; கற்பனையில் எட்டியதில்லை.

"இதுதான் சுவர்க்கம்" என்று கோபாலய்யங்கார் சொன்னார்.

"எது?" என்று பந்துலுவின் மனைவி கேட்டாள்.

"இந்தக் குழந்தையின் பாட்டு" என்று அய்யங்கார் சொன்னார்.

"ஸங்கீதமா? கவிதையா? இந்தக் குழந்தையின் குரலா? இவற்றுள் எது சுவர்க்கம் போலிருக்கிறது?" என்று பந்துலுவின் மனைவி கேட்டாள்.

அதற்கு கோபாலய்யங்கார்—"மூன்றும் கலந்து சுவர்க்கம் போன்றிருந்தது. விசேஷமாக, இதன் குரல் மிகவும் தெய்விகமானது. குரல்கூட அவ்வளவில்லை. இந்தக் குழந்தை பாடிய மாதிரியே ஆச்சர்யம்" என்றார்.

"குழந்தையின் அழகையும் பாடுகையில் அது காண்பித்த புத்திக் கூர்மையையும் சேர்த்துச் சொல்லுங்கள்" என்று பந்துலு சொன்னார்.

"அவையும் சேர்ந்துதான்" என்று அய்யங்கார் சொன்னார்.

இவர்கள் இங்ஙனம் வியப்புரை சொல்லிக்கொண்டிருக்கையில் அக் குழந்தை எழுந்து அறையை விட்டு

வெளியே ஓடிப்போய்விட்டது. அதன் பிறகே பந்துலு வின் மனைவியும் சென்றுவிட்டாள்.

அப்போது கோபாலய்யங்கார் வீரேசலிங்கம் பந்துலுவை நோக்கி, "இந்தக் குழந்தையையும் இதன் அத்தையையும் பற்றிய கதை சொல்வதாகத் தெரிவித்தீர்களே? இப்போது சொல்லுகிறீர்களா?" என்று கேட்டார்.

பந்துலு பூகம்பம் முதலாக நாளதுவரை தாம றிந்து கொண்ட அளவில் அவ்விருவருடைய கதை முழுதையும் ஸாங்கோபாங்கமாக எடுத்துரைத்தார்.

"என் ஜன்மம் பலிதமாய் விட்டது" என்றார் கோபாலய்யங்கார்.

"அதெப்படி?" என்று பந்துலு கேட்டார்.

"இப்படிப்பட்ட பெண்ணொருத்தியை விவாகம் செய்யும் பொருட்டாகவே நான் நெடுங்காலமாகக் காத்திருந்தேன். இப்போது என் மனோரதம் நிறை வேறிவிட்டது" என்றார் அய்யங்கார்.

இதைக் கேட்டு வீரேசலிங்கம் பந்துலு கலகல வென்று நகைத்தார்.

"ஏன் சிரிக்கிறீர்கள்?" என்று அய்யங்கார் கேட்டார்.

"விவாகம் முடிந்து விட்டதுபோல் நீங்கள் பேசு கிறீர்களே! அதைக் கேட்டு நகைத்தேன். தங்களை மணம்புரிந்துகொள்ள அந்தப் பெண் ஸம்மதிப்பாளோ மாட்டாளோ? இன்று ராத்திரி அவள் போஜன காலத்

தில் நம்மோடிருந்து விருந்துண்பாள். ஸாதாரணமாக, ஹிந்து ஸ்திரீகளிடம் காணப்படும் பொய்ந்நாணம் அவ ளிடத்தில் சிறிதேனும் கிடையாது. அப்போது நீங்க ளிருவரும் பரஸ்பரம் ஸந்தித்து ஸம்பாஷணை செய்ய இடமுண்டாகும். நாளைக் காலையில் என் மனைவியின் மூலமாக அந்தப் பெண்ணுடைய ஸம்மதத்தை விசா ரித்துத் தெரிந்துகொள்ளலாம். அவள் ஸம்மதமுணர்த் துவாளாயின், பிறகு விவாகத்துக்கு வேண்டிய ஏற் பாடுகள் செய்யலாம்'' என்று பந்துலு சொன்னார். இதைக் கேட்டு கோபாலய்யங்கார்—"அப்படியானால் இன்றைக்கும் நாளைக்கும் நான் இங்கேயே தங்களு டைய விருந்தாளியாக இருந்து விடுகிறேன். எனக்கு வேறெங்கும் எவ்விதமான கார்யமுமில்லை'' என்றார்.

"அப்படியே செய்யுங்கள்" என்றார் பந்துலு.

பிறகு வீரேசலிங்கம் பந்துலு தம்முடைய பேனா மைக்கூடு முதலிய கருவிகளை எடுத்து ஏதோ எழுத்து வேலை செய்யத் தொடங்கினார்.

கோபாலய்யங்கார் சாய்வு நாற்காலியில் சாய்ந்த படியே நித்திரை போய்விட்டார்.

கோபாலய்யங்கார் தூங்கிக்கொண்டிருக்கையில் சமையலறைக்குள் மாதரிருவரும் இராத்திரி போஜனத் துக்கு வேண்டிய ஆயத்தங்கள் செய்து கொண்டிருந் தனர். மிக விஸ்தாரமான சமையல்; அறு சுவைகளும் வியப்புறச் சமைந்தது. வீரேசலிங்கம் பந்துலுவின் மனைவி சமையல் தொழிலில் மிகத்தேர்ச்சி பெற்றவள்.

நமது விசாலாக்ஷியோ அவளிலும் ஆயிரமடங்கு அதிகத் தேர்ச்சி கொண்டவள். கோபாலய்யங்கார் பிராமண ஆசாரங்களைக் கைவிட்டுப் பாஷண்டராய் விட்ட போதிலும், "பிராமணா: போஜனப்ரியா:" (பிராமணர் உணவில் பிரியமுடையோர்) என்ற வாக்கியத்தை அனுஸரிப்பதில் ஸாமான்ய வைதிக ப்ராமணர்களைக் காட்டிலும் நெடுந்தூரம் மேற்பட்டவர். ப்ராமணர்களை குற்றஞ் சொல்ல வேண்டுமென்ற கருத்துடன் மேற்படி வாக்கியத்தைப் பலர் உபயோகப்படுத்துகிறார்கள். 'பார்ப்பானுக்குச் சோற்று ருசியில் மோஹம் அதிகம்' என்று மற்ற ஜாதியார் ஸாதாரணமாகச் சொல்லிவருகிறார்கள். பிராமணர்களே சில ஸமயங்களில் இதைத் தங்கள் ஜாதிக்கு இயற்கையில் அமைந்ததொரு குறை போல பேசிக்கொள்ளுகிறார்கள். சில ஸமயங்களில் தம்மைத் தாம் வியந்துகொள்ளும் நோக்கத்துடன் ஒரு பெருமையாக அவ் வசனத்தைக் கையாடுகிறார்கள். வேறு சில ஸமயங்களில் மற்ற ஜாதியாரிடமிருந்து பணங் கேட்பதற்கு முகாந்தரமாக இந்த வாக்கியத்தைத் தவிர்க்கொணாத விதியைப் புலப்படுத்துவது போல் எடுத்துரைக்கிறார்கள். ஆனால் இந்த வாக்கியம் வெறும் பிசகென்று நான் நினைக்கிறேன். "ஸர்வே ஜநா: போஜனப்பிரியா:" எல்லா ஜனங்களும் போஜனத்தில் பிரியமுடையவர்கள் என்பது என்னுடைய அபிப்பிராயம். உணவின் அளவை எடுத்து நோக்கின் ஸாதாரண பிராமணனொருவனைக் காட்டிலும் ஸாதாரண சூத்திரன்—மறவன், அல்லது இடையன், அல்லது உழவன்,

எந்தத் தொழிலாளியும்—நாளொன்றுக்குக் குறைந்த பக்ஷம் மூன்றுமடங்கு அதிகமாகத் தின்னுகிறான். ஆங்கிலேயன் ஒன்பது மடங்கு அதிகமாக உண்கிறான். ஜெர்மனியன் இருபத்தேழு பங்கு அதிகமாகத் தின்கிறான். இனி, அளவை விட்டுவிட்டு, ஆஹாரத்தின் பக்குவ பேதங்களை எண்ணுமிடத்தே அதில் பிராமணர், அல்லாதார் என்ற பாகுபாட்டுக் கிடமில்லை. செல்வர்கள் உணவைப் பலவகையாகப் பக்குவங்கள் செய்து புசிக்கிறார்கள். ஏழைகள் சிலவகைப் பக்குவங்களை செய்கிறார்கள். பரம ஏழைகளாய், ஒருவேளை சோற்றுக்கும் வழியில்லாத ஜனங்களே, இந் நாட்டில், லக்ஷக் கணக்காக மலிந்து கிடக்கிறார்கள். இவர்கள் கூழும் கஞ்சியும் ஒருகால் மிளகாயும் தவிர வேறுவிதமான பக்குவங்களை உண்ணுதல் அருமையிலும் அருமையிலும் அருமை. இத்தனை கொடிய ஏழ்மை நிலையில் பெரும்பாலும் பள்ளர் பறையர்களும் சூத்திரர்களில் தாழ்ந்த வகுப்பினருமே இருக்கிறார்கள். ஆனால் மற்ற வகுப்பாரிலும் பலர் அந்த ஸ்திதிக்கு மிக ஸமீபத்தில் தத்தளித்துக் கொண்டிருக்கிறார்கள். பிராமணர்களிலும் அங்ஙனமே பலர் அந்தப் பரிதாபகரமான நிலையில் அகப்பட்டுத் தவிக்கத் தான் செய்கிறார்கள். ஆனால் இந்த தேசத்தில் மற்ற ஜாதி ஏழைகளைக் காட்டிலும் பிராமண ஏழைகளுக்கு, முக்கியமாக வைதிகபிராமணர்களுக்கு, இனும் சாப்பாடுஅதிகமாகக் கிடைக்கும் வழி யேற்பட்டிருக்கிறது. எனினும் இவ் விஷயத்தில் பிராமணரென்றும் அல்லாதாரென்றும்

பிரிவுசெய்தல் பொருந்தாது. பொதுப்படையாக ஏழை களின் வீட்டில் செய்வதைக் காட்டிலும் செல்வர் வீட்டில் கறி குழம்பு முதலிய பதார்த்தங்களில் அதிகவகுப்புக்கள் சமைக்கிறார்களென்று சொல்லலாம். இந்த விதிக்குப் பல விலக்குக்களுமுள்ளதால், 'பொதுப் படையாக' என்றேன். ஏனென்றால் செல்வமிருந்த போதிலும் லோப குணமுடையோரின் வீடுகளில் போஜனவகைகள் மிகக் குறைவாகத்தான் இருக்கும். தவிரவும், தொழில் செய்யாமல் சோம்பேறிகளாக வாழும் செல்வர்களுக்கும், பொருள் தேடுவதிலும் அதைக் காப்பதிலும் மிதமிஞ்சிய கவலை செலுத்தும் செல்வர்களுக்கும் ஜீர்ணசக்தி எப்போதும் பரம மோச மாகவே இருக்குமாதலால், அவர்கள் வீட்டில் எத்தனை வகையான பக்குவங்கள் செய்தபோதிலும் ஒன்றிலும் ருசியேற்படாது. ஏற்கெனவே, இத்தகையோர் போஜ னப்பிரியர் என்று சொல்லத்தகார். அன்னத் துவேஷ முடையோரை போஜனப்பிரியர் என்று கூறுவதெப்படி? இந்த விஷயத்தைக் குறித்து இன்னும் அதிக விஸ்தார மாக எழுதலாம். எனினும், போஜனம் பண்ணுவதில் எல்லோரும் விருப்புடையோரே யெனினும், போஜன விஷயத்தைக்குறித்து நீண்ட ப்ரஸ்தாபம் நடத்துவதில் தற்காலத்துப் படிப்புப் படித்தவர்களுக்கு அதிகச்சுவை யேற்படாதாகையாலும், இந்நூல் படிப்போரில் எவ் வித ருசியுடையோருக்கும் அதிக அருசி யேற்படாமல் கதையெழுத வேண்டுமென்பது என்னுடைய நோக்க மாதலாலும் எனது கருத்தை இங்கு சுருக்கமாகச்

சொல்லி முடித்துவிடுகிறேன். எவ்வகையாக நோக்கு மிடத்தும் பிராமணர் போஜனப்பிரியர் என்று கூறி அவ்வகுப்பினர் இவ்விஷயத்தில் பொது மனித ஜாதியினின்றும் வேறுபட்ட குணமுடையோரென்று குறிப்பிடும் பழமொழி யுக்தமில்லை யென்பதே என் அபிப்ராயம். இது நிற்க.

கோபாலய்யங்காருக்கு ஜீர்ண சக்தி அதிகம். வீமஸேனனுக்கு 'விருகோதரன்' ஓநாய் வயிறுடையோன்—என்ற பெயரொன்று உண்டு. ஓநாய்க்குப் பசி அதிகமாம். தின்னத் தின்ன—எவ்வளவு தின்றபோதிலும்—ஸாதாரணமாக அதன் பசி அடங்குவதில்லையாம். உழைக்கும்போது மிகவும் தீவிரத்துடனும் நிதானத்துடனும் சோம்பரென்பது சிறிதேனு மில்லாமலும் உழைத்தால், மனிதர் இப்படிப்பட்ட பசி பெறலாம். தொழில் செய்வதில் வலிமை செலுத்த வேண்டும். ஒருவனது முழு வலிமையையும் செலுத்திச் செய்யப்படும் தொழிலே தொழிலாம். ஆனால், எவ்வளவு தொழில் செய்த போதிலும், அதை எத்தனை வலிமையுடன் செய்த போதிலும், அதனால் உடம்புக்கு சிரமமுண்டாகாத வண்ணமாகச் செய்யவேண்டும். வேர்க்க வேர்க்க கஸ்ரத் எடுப்பவன் ஸமர்த்தனல்லன். எத்தனை கஸ்ரத் எடுத்தாலும் வேர்வை தோன்றாதபடி தந்திரமாக எடுப்பவனே ஸமர்த்தன். இதை ஒரு வேளை ஸாதாரண மல்லர் அங்கீகாரம் செய்யத் திகைக்கக் கூடும். ஆனால் நூறு கஸ்ரத் பண்ணின மாத்திரத்திலேயே உடம்பெல்லாம் வெயர்த்துக் கொட்டிப் போகும் மனி

தனைக் காட்டிலும், ஆயிரம் கஸ்ரத் செய்தபின் வெயர்க்கும் மனிதன் அதிக ஸமர்த்தன் அதிக பலவான் என்பதை யாரும் மறுக்க மாட்டார்கள். இந்தக் கணக்கைத் தான் நான் இன்னும் சிறிது தூரம் எட்டிப் போடுகிறேன். கஸ்ரத் செய்யும் தொழிலாயினும், கதையெழுதும் தொழிலாயினும்—எல்லாவிதமான தொழிலுக்கும் தத்துவம் ஒன்றேயாம். அதாவது மனதில் சிரமந் தோன்றின பிறகு தான் உடம்பில் சிரமந் தோன்றுகிறது. அசைக்க முடியாத பொறுமையுடன் தொழில் செய்தால் தொழில் சிரமமுந் தோன்ருது; அது உன்னதமான வெற்றி பெறவுஞ் செய்யும். இங்ஙனம் தொழில் செய்தால் மேன்மேலும்புதிய ரத்தம் பெருகி, உடம்பில் மேன்மேலும் ஒளியும் வலியும் விருத்தியடைந்துகொண்டு வரும். இந்த வழியில் வீமசேனனுக்கு ஆயிரம் பொன் கொடுக்கலாமென்னில், கோபாலய்யங்காருக்குப் பத்துப் பொன் கொடுக்கலாம். அவ்வளவு பண்டிதர். எனவே மதுமாம்ஸப் பழக்கங்களால், வீரேசலிங்கம் பந்துலு எதிர்பார்த்தபடி, கோபாலய்யங்கார் அத்தனை விரைவாக இறந்து போவாரென்று எதிர்பார்க்க இடமில்லை. இது நிற்க.

கோபாலய்யங்கார் போஜன ப்ரியர்களிலே சிரேஷ்டர். இந்த விஷயம் பந்துலுவின் மனைவிக்கு மிகவும் நன்ருகத் தெரியும். எனவே, விசாலாக்ஷியின் விழிகளென்னும் வலைக்குள் கோபாலய்யங்காரின் ஹ்ருதயமென்ற மானை வீழ்த்துவதற்கு இரைபோடும் அம்சத்தில் கோபாலய்யங்காருடைய வயிற்றுக்கு ஸ்தூல

மாகிய விருந்து போடுவதே தக்க இரையென்று தீர்மானித்துக்கொண்டு, வீரேசலிங்கம் பந்துலுவின் மனைவி மிகவும் கோலாஹலமாகச் சமையல் பண்ணினாள். முப்பது வகைக் கறி ; முப்பதுவகை சட்டினி ; முப்பது வகை பொரியல் ;—எல்லாம் பசு நெய்யில். இலை போட்டு ஜலந் தெளித்துப் பரிமாறுதல் தொடங்கி விட்டது. நாலிலை; குழந்தைக்கொன்று ; விசாலாக்ஷிக் கொன்று ; பந்துலுவுக்கொன்று ; கோபாலய்யங்காருக் கொன்று. பந்துலுவின் மனைவி பரிமாறுகிறாள்.

பந்துலுவும் கோபாலய்யங்காரும் வந்து முதலாவது உட்கார்ந்தார்கள். சிறிது நேரத்துக்கெல்லாம் விசாலாக்ஷியும் குழந்தையும் வந்து உட்கார்ந்தனர். போஜனம் தொடங்கி நடைபெற்று வருகிறது. சிறிது நேரம் கழிந்தவுடனே கோபாலய்யங்கார் விசாலாக்ஷியை நோக்கி:—"விசாலாக்ஷி எங்கே ?" என்று கேட்டார். இவள்தான் விசாலாக்ஷி யென்பது அவருக்குத் தெரியாது. பணிப்பெண்ணையும் குழந்தையையும் ஒன்றாக நோக்கியது முதலாக அப்பணிப் பெண்ணை விசாலாக்ஷி என்ற பிராந்தியில் அவர் மயங்கியிருந்தார்.

"நான்தான் விசாலாக்ஷி" என்றாள் விசாலாக்ஷி.

"நீயா விசாலாக்ஷி?" என்றார் கோபாலய்யங்ர்ரார்.

"ஆம்" என்றாள் விசாலாக்ஷி.

"காலையில் இக் குழந்தையுடன் சோலையில் விளையாடிக் கொண்டிருந்த பெண் யார் ?" என்று கோபாலய்யங்கார் கேட்டார்.

" அவள் இக்குழந்தையுடன் விளையாடிக் கொண்டிருக்கவில்லை. இந்தக் குழந்தைக்குக் காவல் காத்துக் கொண்டிருந்தாள். அவள் பந்துலு வீட்டு வேலைக்காரி " என்று விசாலாக்ஷி சொன்னாள்.

கோபாலய்யங்காருக்கு நெஞ்சுக்குள் ஒரு பேரிடி விழுந்தது போலாயிற்று. காலையில் பூஞ்சோலையில் வேலைக்காரி சந்திரிகையை முத்தமிட்டபோது அச் செய்கையை இருவர் பார்த்ததாகவும் அவ்விருவருள் ஒருவர் அந்த வேலைக்காரியின் மீது காதல் கொண்டனரென்றும் சென்ற அத்யாயத்தின் இறுதியில் சொல்லியிருக்கிறேன். அங்ஙனம் நோக்கிய இருவர் கோபாலய்யங்காரும் பந்துலுவும். காதல் கொண்டவர் கோபாலய்யங்கார். அந்த வேலைக்காரிக்கு இருபது வயதிருக்கும். மிகவும் அழகுடைய பெண். விசாலாக்ஷியின் அழகு அறிவும் பயிற்சியும் கலந்த அழகு. பணிப்பெண்ணுடைய அழகு கிராமியமானது.

எனினும், இப்போது விசாலாக்ஷியை நோக்குமிடத்தே கோபாலய்யங்காருக்கு இவள் அதிக அழகா, அவள் அதிக அழகா என்ற ஸமுசய மேற்பட்டது. கண்களை மூடிக்கொண்டு மனவிழியால் பணிப் பெண்ணுடைய வடிவத்தை நோக்குவார். பிறகு கண்ணை விழித்து எதிரே நிற்கும் விசாலாக்ஷியின் முகத்தைப் பார்ப்பார். இப்படி இரண்டு மூன்று தரம் கண்ணை மூடி மூடி விழித்துச் சோதனை செய்து பார்த்ததில் அவருடைய புத்திக்கு இன்னார்தான் அதிக அழகென்பது நிச்சயப்படவில்லை. எனினும், விசாலாக்ஷியை மணம் புரிந்து

கொள்வதே பொருந்து மென்ற யோசனை ஒரு க்ஷணம் அவருக்குண்டாயிற்று. ஆயினும், காதல் வலியதன்றோ? காதலுக்கெதிரே எந்த சக்தி, எந்த யோசனை நிற்க வல்லது? காதல் இறுதியிலே வெற்றி பெற்றுத் தீரும். கோபாலய்யங்காரே! உம்முடைய விதி உறுதியாய் விட்டது. உமக்கு விசாலாக்ஷியை மணம்புரிந்து கொள்ளும் பாக்கியம் இனிக் கிடையாது. காதலை எதிர்த்து யாராலும் ஒன்றும் செய்யமுடியாது. அதன் போக்கு காட்டுத் தீயின் போக்கை யொத்தது. அது தானாகவே எரிந்து தணியவேண்டும். அல்லது, தெய்விகச் செயலாலாகப் பெருமழை பெய்து அதைத் தணிக்கவேண்டும். மற்றபடி, மனிதர் தண்ணீர்விட்டு அவிப்பது என்பது ஸாத்யமில்லை.

நெடுநேரம் போஜனத்தில் செலவிட்டார்கள். பல விஷயங்களைக் குறித்து ஸம்பாஷணை நடைபெற்றது. ஆனால் கோபாலய்யங்கார் நாவிலிருந்த ரஸம் போய் விட்டது. அவர் அந்த அற்புதமான பக்ஷ்வங்களை ருசியின்றி உண்டார். பந்துலுவின் மனைவியும் பந்துலுவும் எதிர்பார்த்த வண்ணம் அவர் நிறைய உண்ணவுமில்லை. ஒவ்வொரு வகையிலும் சிறிது சிறிதுண்டார். பேச்சிலும் அவருக்கு அதிக ரஸமேற்படவில்லை. ஆஹாரம் முடிவு பெற்றது. படுக்கைக்குப் போகுமுன்னர் கோபாலய்யங்காரும் பந்துலுவும் படிப்பறையில் தனியே இருந்து வெற்றிலை போட்டுக்கொண்டார்கள். அப்போது பந்துலுவை நோக்கி கோபாலய்யங்கார்—

"பந்துலுகாரு, நான் விசாலாக்ஷியை விவாகம் செய்து

கொள்ளப் போவதில்லை" என்றார். "ஏன்? அவளி டம் என்ன குறை கண்டீர்?" என்று பந்துலு கேட் டார்.

அதற்கு கோபாலய்யங்கார்—"அவளிடம் நான் என்ன குற்றம் கற்பிக்க முடியும்? விசாலாக்ஷி ஸர்வ சுப லக்ஷணங்களும் பொருந்தியவளாகவே இருக்கி றாள். எனினும், மற்றொருத்திக்கு எனது நெஞ்சை நான் காணிக்கை செலுத்திவிட்டேன். மற்றொருத்தி யின் மீது காதலுடையேன்" என்றார்.

"அதை நீங்கள் என்னிடம் காலையில் சொல்ல வில்லையே? காலையில் விசாலாக்ஷியை மணம் புரிந்து கொள்ள மிகவும் ஆவலுடனிருப்பது போல் வார்த்தை சொன்னீர்களே! இப்போது திடீரென்று தங்களுடைய மனம் மாறியிருப்பதன் காரணம் யாது?" என்று பந் துலு வினவினார்.

"எனக்குக் காலையில் தெரியாது. எனது நெஞ்சை மற்றொருத்திக்குப் பறிகொடுத்து விட்டேன் என்ற செய்தி எனக்கிப்போதுதான் தெரிந்தது" என்றார் அய்யங்கார்.

"அஃதெங்ஙனம்" என்று பந்துலு கேட்டார். அப்போது கோபாலய்யங்கார் காலையிலே பூஞ்சோலை யில் பணிப்பெண்ணும் குழந்தை சந்திரிகையுமிருப்பது கண்டு தாம் பணிப்பெண் மீது காமுற்ற செய்தியையும், அப்பால் அந்தக் குழந்தையின் அத்தை என்ற பேச்சு வரும்போதெல்லாம் தாம் அந்தப் பணிப்பெண்ணே

அக்குழந்தையின் அத்தையென்று தவறாகக் கருதிவந்த செய்தியையும், அப்பால் இராத்திரி போஜன ஸமயத்தில் தமது தவறு தமக்கு விளங்கிய செய்தியையும் பந்துலுவிடம் விரிவாகக் கூறினார். இதைக் கேட்டவுடனே பந்துலு நகைத்தார். "காதலாவது, உருளைக் கிழங்காவது! அய்யங்கார் ஸ்வாமிகளே, பணிப் பெண்ணாவது, கதையாவது! நடக்கக் கூடிய விஷயமா? பணிப் பெண்ணை எங்ஙனம் மணம்புரிந்து கொள்ளப் போகிறீர்கள்?" என்று பந்துலு கேட்டார்.

இது கேட்டு கோபாலய்யங்கார்—"அந்தக் காரியம் அவ்வளவு தூரம் சிரமமென்று என் புத்திக்குத் தோன்றவில்லை. நாளைக்குக் காலையில் பொழுது விடிந்தவுடனே அவளை யழைத்து அவளுடைய ஸம்மதத்தை அறிந்துகொள்வோம். அவள் ஸம்மதப்படுவாளாயின், அப்பால் அவளுடைய பந்துக்களைக் கண்டுபேசி வேண்டிய ஏற்பாடுகள் செய்து முடித்துவிட்டு இன்னும் ஒரு வாரத்துக்குள் விவாஹத்தை நடத்திவிடலாம். இதில் சிரமமெங்கே யிருக்கிறது?" என்றார்.

அப்போது பந்துலு—"தங்களைப்போன்ற ஸ்தானமும் மதிப்புடைய மனிதரை அந்தப் பெண் மணம் செய்துகொள்ள மிக விரைவில் ஸம்மதப்படுவாள். அவளுடைய பந்துக்களும் கேட்டமாத்திரத்தில் இணங்கிவிடுவார்கள். இதிலெல்லாம் அதிகக் கஷ்ட மில்லை. ஆனால் நீங்கள் அந்தப் பணிப்பெண்ணை மணம்புரிந்து கொண்டால் அதை உலகத்தார் கண்டு திகைப்படைந்து தங்களைப் புத்தி ஸ்வாதீனமற்றவரென்று நினைப்பார்

தங்களுக்கு மதிப்பு மிகவும் குறைந்துபோய்விடும்" என்றார்.

"ஸர்க்கார் வேலை போகாதே! அதற்கு யாதொரு ஹானியும் வராது. இங்கிலீஷ் ராஜ்யம்! தஞ்சாவூர் சரபோஜி மஹாராஜாவின் ஆட்சியில்லை! எந்த ஜாதி யார் எந்த ஜாதிப் பெண்ணை மணம் புரிந்து கொண்ட போதிலும், இங்கிலீஷ் ராஜ்யத்தில் தண்டனை கிடை யாது" என்று கோபாலய்யங்கார் சொன்னார்.

அதற்குப் பந்துலு—"அவ்விஷயம் எனக்குத் தெரி யாததன்று. தாங்கள் வேலைக்காரியை மணம் புரிந்து கொள்வதால் உங்கள்மீது ராஜாங்க அதிருப்தி ஏற் படாது. உங்கள் உத்தியோகத்துக்கு யாதொரு தீங் கும் நேராது. ஆனால், உங்களுடைய ஸ்நேகிதர்களும் உங்களுடன் ஸமபதவியுடைய பிறரும் உங்களை இகழ்ச் சியாகப் பேசுவார்கள். 'மதிப்புடன் வாழ்ந்தவனுக்கு நேரும் அபகீர்த்தி மரணத்தைக் காட்டிலும் கொடியது என்று கண்ணன் பகவத் கீதையில் சொல்லுகிறார். அந்த அபகீர்த்தியைக் குறித்தே நான் அஞ்சுகிறேன்" என்றார்.

இதுகேட்டு கோபாலய்யங்கார் — "வெறுமே விதவா விவாகம் செய்து கொண்டாலும் பந்துக்களும் ஸ்நேகிதர்களும் அபகீர்த்தி சாற்றத் தான் செய்வார் கள். அதற்குத் துணிந்த நான் இதற்குத் துணி தல் பெரிதன்று. பந்துக்களும் ஸ்நேஹிதர்களும் சிறிது காலம்வரை வாய் ஓயாமல் பழி தூற்றிக்கொண் டிருப்பார்கள். பிறகு அவர்களுக்கே சலிப்புண்டாய்

விடும். ஒரே வஸ்துவைப் பற்றி எத்தனை நாள் பேசு வது? ஒரே மனிதனை எத்தனை காலம் தூற்றிக்கொண் டிருப்பது? நாளடைவில் எல்லாம் சரிபோய்விடும். ஜாதிப்பிரஷ்டம் இருக்கிறதென் செய்வீர். சாகும் வரை அந்தக் கூட்டத்துடன் பந்தி போஜனமும் ஸம்பந்தமும் செய்ய முடியாமற் போகும். [illegible] இந்த [illegible] விசாலமாகிய [illegible] [illegible] ஏற்படக் கூடும் செய்யும். ஜாதிப் பிரஷ்டம் ஏற்படுவதுண்டு. ஆனால் அதை நான் பொருட்படுத்தவில்லை. [illegible] விசாலமானது. பிராமணர்கள் நம்மைக் கைவிட்ட போதிலும் சூத்திரர்கள் கைவிடமாட்டார்கள். பிரா மணரின் தொகை குறைவு. சூத்திரர்களின் ஜனத் தொகை இந்த நாட்டில் அதிகம். ஆகலால், ஒருவனுக்கு ஜாதிப் பிரஷ்டத்திலிருந்து நேரும் கஷ்டம் அதிக மிராது. ஸ்நேகிதர்களும் இந்த விஷயத்தின் புதுமை மாறி இது பழஞ் செய்தியாய்விட்ட மாத்திரத்தில் முன்போலவே என்னுடன் பழகத் தொடங்கி விடுவார் கள். ஊர்வாயை மூட ஒரு உலை மூடியுண்டு. அதன் பெயர் காலம். பழைய ஸ்நேஹிதர்கள் கைவிட்ட போதிலும், புதிய ஸ்நேஹிதர் ஏற்படுவார்கள். பணம் உள்ளவரை ஒருவனுக்கு ஸ்நேஹிதரில்லை யென்ற குறைவு நேரிடாது. ஸர்க்கார் உத்தியோகமுள்ளவரை ஸ்நேஹிதரில்லையென்ற குறைவு நேராது" என்றார்.

"இருந்தாலும் தாங்கள் அந்த வேலைக்காரியை மணம்புரிந்து கொள்வதில் எனக்கு ஸம்மதமில்லை. உல கத்தாரின் அபவாதத்தைப் பொருட்படுத்தாமல் நமது

மனச்சாக்ஷியின்படி நடப்பதே தகும் என்பதை நான் அங்கீகாரம் செய்து கொள்ளுகிறேன். உலகத்தின் அபவாதம் பெரிதில்லை. ஆனால், நீங்கள் விரும்புகிறபடி விவாகம் செய்துகொள்ளக் கூடாதென்பதற்கு வேறு காரணங்களு மிருக்கின்றன" என்று வீரேசலிங்கம் பந்துலு சொன்னார்.

"அந்தக் காரணங்களை யெடுத்து விளக்குங்கள்" என்றார் கோபாலய்யங்கார்.

"முதலாவது, அந்தப் பணிப்பெண் சிறிதேனும் கல்விப்பயிற்சி யில்லாதவள். கல்விப்பயிற்சி யில்லாவிடினும் மேற்குலத்துப் பெண்களிடம் பரம்பரையாக ஏற்படக் கூடிய நாகரிக ஒழுக்கங்களும் நடைகளும் தர்ம ஞானமும் கீழ்க்குலத்துப் பெண்களிடம் இரா. இதையெல்லாம் உத்தேசிக்குமிடத்தே, நீங்கள் அந்தப் பணிப் பெண்ணை மணம்புரிந்து கொள்ளுதல் மிகவும் தகாத காரியம்" என்று பந்துலு சொன்னார்.

அதற்கு கோபாலய்யங்கார்—"நல்ல படிப்பு, நல்ல பயிற்சி, சிறந்த ஒழுக்கம், நல்ல ஸங்கீத ஞானம்—இன்னும் எத்தனையோ லக்ஷணங்களுடைய பெண்ணைத் தான் மணம்புரிந்து கொள்ளவேண்டுமென்று நானும் நினைத்திருந்தேன். ஆனால் அதுவெல்லாம் என் மனதில் உண்மையான காதல் தோன்று முன்னர் நினைத்த நினைப்பு. இப்போது மன்மதன் என் நெஞ்சில் சிங்காதனமிட்டு வீற்றிருந்து வேறொரு பாடஞ் சொல்லுகிறான். படிப்புப் பெரிதில்லை. பயிற்சி பெரிதில்லை. ஒழுக்கம் பெரிதில்லை. காதல் தன்னிலேயேதான்

இனிது. மற்றவைகளெல்லாம் பகர்.காதலொன்றே பொருள். மேலும், கீழ்க்குலத்துப் பெண்கள் தக்க தர்ம ஞான மில்லாமலிருப்பார்களென்று நினைப்பது தவறு. எல்லா ஜாதியாருக்குள்ளும் தர்மமுதிர்ச்சியுடைய ஆண்களும் பெண்களும் இருப்பார்கள். அஃதற்றவரும் எல்லா ஜாதிகளிலும் இருப்பார்கள். மேற்குலத்துக்குரிய நாகரிக நடைகளைக் கீழ்க்குலத்துப் பெண்கள் மிக விரைவிலே கற்றுக்கொள்ள முடியும். அந்த நாகரிக நடைகளென்பன செல்வத்தாலும் ஸ்தானத்தாலும் ஏற்படுவன. அவை பரம்பரையாலே தான் விளைய வேண்டுமென்ற அவசியமில்லை. பழக்கத்தால் உண்டாய்விடும். என்னுடன் ஒரு வருஷம் குடியிருந்தால் போதும். அந்தப் பணிப்பெண்ணுக்கு நாகரிக நடைகளெல்லாம் வெகு ஸாதாரணமாக ஏற்பட்டுவிடும். படிப்பு முதலியனவும் நான் விரைவிலே அவளுக்குக் கற்றுக்கொடுப்பதற்குரிய ஏற்பாடுகள் செய்து விடுவேன்'' என்று அய்யங்கார் சொன்னார்.

''உலக அனுபவமில்லாத பதினாறு வயதுப் பச்சைப் பிள்ளைகள் சொல்லக்கூடிய வார்த்தை இது. முப்பது வயதாய், உயர்ந்த ஸர்க்கார் வேலையிலிருந்து ஸகலவித லௌகிக அனுபவங்களுமுடைய தாங்கள் இந்த வார்த்தை சொல்வது கேட்டு எனக்கு மிக வியப்புண்டாகிறது. காதல் மூன்று நாள் நிற்கும் பொருள். வெறுமே புதுமையை ஆதாரமாகக்கொண்டது. புதுமை மாறிப் போனவுடன் காதல் பறந்துபோய் விடும். அப்பால் கனமான அறிவுப் பயிற்சியாலும் ஒழுக்கத்

தானும் தம்பதிகளுக்குள் ஏற்படும் பற்றுதலை நிலை யுடையது" என்று வீரேசலிங்கம் பந்துலு சொன்னார்.

"மூன்று நாட்களில் மாறக்கூடிய புதுமை யுணர்ச்சிக்குக் காதலென்று பெயரில்லை. அதன் பெயர் பிராந்தி. அந்த பிராந்தி என் உள்ளத்தில் எழக்கூடிய தன்று. அவ்வித மயக்கங்கள் தோன்றாதபடி என் உள்ளத்தை நான் நன்றாகத் திருத்திப் பண்படுத்தி வைத்திருக்கிறேன். காதலென்பது தேவலோகத்து வஸ்து. இவ்வுலகத்துக்கு வாழ்க்கை மாறியபோதிலும் அது மாறாது. ஸாவித்ரியும் ஸத்யவானும்; லைலாவும் மஜ்னூவும்; ரோமியோவும் ஜூலியெத்தும் கொண்டிருந்தார்களே, அந்த வஸ்துக்குக் காதலென்று பெயர். அது அழியாத நித்ய வஸ்து. ஹிமயமலை கடலில் மிதந்தபோதிலும், காதல் பொய்த்துப் போகாது. அத்தகைய காதல் நான் அந்தப் பணிப் பெண்மீது கொண்டிருக்கிறேன்" என்று அய்யங்கார் சொன்னார்.

செவிடன் காதில் சங்கூதுவதுபோல் வீரேசலிங்கம் பந்துலு பலபல நியாயங்கள் கூறி அந்தப் பணிப் பெண்மீது கோபாலய்யங்கார் கொண்டிருக்கும் மையலை அகற்றிவிட முயற்சி செய்தார். இவர் பாதி பேசிக் கொண்டிருக்கும்போதே கோபாலய்யங்கார் கொட்டாவி விடத் தொடங்கி விட்டார். அவருக்குப் பந்துலுவின் வார்த்தைகளில் ருசியில்லை. இதனை யுணர்ந்து பந்துலு—"ஸரி, இந்த விஷயத்தைக் குறித்து' விஸ்

தாரமாக நாளைக்குக் காலையில் பேசிக் கொள்ளலாம். இப்போது நித்திரை செய்யப் போவோம்" என்றார்.

அப்போது கோபாலய்யங்கார்—"அங்ஙனமே செய்வோம். ஆனால் தூங்கப் போகுமுன் தாங்கள் தயவுசெய்து எனக்கொரு விஷயந் தெரிவிக்கவேண்டும். அந்தப் பணிப்பெண் யார்? அவளுடைய பெயர் யாது? அவளென்ன ஜாதி? அவளுடைய பெற்றோர் அல்லது சுற்றத்தார் எங்கிருக்கிறார்கள்?" என்று கேட்டார்.

அதற்கு வீரேசலிங்கம் பந்துலு—"அப்பணிப் பெண்ணுக்குப் பெயர் மீனாக்ஷி. அவள் ஜாதியில் இடைச்சி. அவளுடைய சுற்றத்தார் எங்கிருக்கிறார்களென்பது தெரியாது. ஓஹோ ஹோ! இதில் ஒரு முக்யமான விஷயத்தை யோசிக்க மறந்து விட்டீர்களே! ஒரு வேளை ஏற்கனவே அவளுக்கு விவாகம் ஆய்விட்டதோ என்னவோ?" என்றார்.

"அதைக் குறித்துத் தங்களுக்கு ஸம்சயம் வேண்டியதில்லை. நான் காலையிலேயே அவளுடைய கழுத்தை நன்றாக கவனித்தேன், அவளுடைய கழுத்தில் தாலியில்லை" என்று கோபாலய்யங்கார் சொன்னார்.

"தாலி ஒரு வேளை ரவிக்கைக்குள்ளே மறைந்து கிடந்திருக்கக் கூடும். தங்கள் கண்ணுக்கு அகப்படாமலிருந்திருக்கலாம்" என்றார் பந்துலு.

"அதைக் குறித்தும் ஸம்சயம் வேண்டியதில்லை. காதலுக்குக் கண்கிடையாதென்று சிலர் தப்பான பழ

மொழி சொல்லுகிறார்கள். காதலுக்கு மிகவும் கூர்மை யான கண்களுண்டு. நான் மிகவும் ஜாக்ரதையாகப் பார்த்தேன். தாலியில்லையென்பது எனக்குப் பரம நிச்சயம். அவளுக்கு விவாகமாகவில்லை. அவள் முகத்தைப் பார்த்ததிலேயே அவள் விவாகமாகாதவ ளென்பது எனக்குத் தெளிவாக விளங்கி விட்டது. எனக்கு இவ்விஷயத்தில் அனுபவம் அதிகம். ஒரு ஸ்த்ரீயின் முகத்தைப் பார்த்த மாத்திரத்திலேயே இவள் விவாகமானவள் அல்லது ஆகாதவள் என்பது எனக்கு ஸ்பஷ்டமாகத் தெரிந்துவிடும். இதுநிற்க. அவ ளுடைய சுற்றத்தார் எங்கிருக்கிறார்க ளென்பது தெரியாவிடினும், வேறு அவளுடைய விருத்தாந்தங் கள் அவளைப்பற்றித் தங்களுக்குத் தெரிந்திருக்கக் கூடி யனவற்றை எனக்குச் சொல்லுங்கள்" என்று கோபா லய்யங்கார் வேண்டினர்.

"எனக்கு அவளுடைய பூர்வோத்தரங்களைப்பற்றி ஒன்றுமே தெரியாது. அவள் என்னுடைய சொந்த வேலைக்காரியுமன்று. இங்கு எழும்பூரில் இதே தெருவில் நாலைந்து வீடுகளுக்கப்பால் என் நண்பர் வேங்கடாசல நாயுடு என்றொருவர் இருக்கிறார். அவர் பிரமஸமாஜத் தைச் சேர்ந்தவர். இந்த வீடும் அவருக்குச் சொந்த மானதே. இந்த வேலைக்காரி அவருடைய குடும்பத் தில் வேலை செய்பவள். இங்கு நான் தாமதிக்கும் சில தினங்களுக்கு என் மனைவிக்குத் துணையாக வீடு பெருக்கி, மாடு கறந்து, விளக்கேற்றி, இன்னும் வேறு சிறு தொழில்கள் செய்யுமாறு இவளை வேங்கடாசல

நாயுடு எங்களிடம் அனுப்பியிருக்கிறார். நாங்கள் ராஜ மஹேந்திரபுரத்துக்குப் போகும்போது அப் பெண் மறுபடி நாயுடு வீட்டில் வேலைக்குப் போய்விடுவாள்" என்று பந்துலு சொன்னார்.

"நாளைக்குக் காலையில் நான் ஷை வேங்கடாசல நாயுடுவைப் பார்க்கவேண்டும். அவர் இங்கு வருவாரா? நாம் அவருடைய வீட்டுக்குப் போகவேண்டுமா?" என்று கோபாலய்யங்கார் கேட்டார்.

"அவரையே இங்கு வரச் சொல்லலாம். நாம் போகவேண்டாம். எனினும், இந்தப் பணிப்பெண்ணை மணம்புரிந்து கொள்ளும் விஷயத்தைத் தாங்கள் மறந்து விடுவதே யுக்தமாகத் தோன்றுகிறது" என்று வீரேசலிங்கம் பந்துலு கூறினார்.

இது கேட்டு கோபாலய்யங்கார்:—"எதற்கும் நாளைக்குக் காலையில் நாயுடுவை இங்கு தருவியுங்கள். மற்ற சங்கதி பிறகு பேசிக்கொள்வோம்" என்றார்.

அப்பால் இருவரும் நித்திரை செய்யப் போய் விட்டனர். இரவிலேயே வீரேசலிங்கம் பந்துலு தமக்கும் அய்யங்காருக்கும் நடந்த ஸம்பாஷணையைத் தமது மனைவியிடம் தெரிவித்தார். அவள் மறுநாட் பொழுது விடிந்தவுடனே அச்செய்தியை யெல்லாம் விசாலாக்ஷி யிடம் கூறினாள். அது கேட்டு விசாலாக்ஷி பந்துலுவின் மனைவியுடைய பாதங்களில் ஸாஷ்டாங்கமாக விழுந்து, "இது போனால் போகட்டும். வேறு தக்க வரன் பார்த்து நீங்களே எனக்கு விவாகம் செய்துவைக்க

வேண்டும். உங்களை விட்டால் எனக்கு வேறு புகல் கிடையாது" என்றாள்.

அப்போது பந்துலுவின் மனைவி :—"பயப்படாதே, அம்மா. உனக்கு நல்ல புருஷன் கிடைப்பான். உன்னுடைய குணத்துக்கும் அழகுக்கும் ராஜாவைப் போன்ற புருஷன் அகப்படுவான். நான் உனக்கு மணஞ்செய்து வைக்கிறேன்" என்றாள்.

## ஐந்தாம் அத்தியாயம்.

### கோபாலய்யங்காருக்கு விவாகம்.

மறுநாட் காலையில் வீரேசலிங்கம் பந்துலு ஒரு ஆளனுப்பி வேங்கடாசல நாயுடுவைத் தமது வீட்டுக்கு வரவழைத்தார். நாயுடு, பந்துலு, அய்யங்கார் மூவருமிருந்து பரியாலோசனை செய்யத் தொடங்கினார்கள். நாயுடுவும் பந்துலுவும், பணிப்பெண்ணாகிய மீனாக்ஷியை அய்யங்கார் விவாகம் செய்ய நினைப்பது தகாதென்றும், விசாலாக்ஷியை மணம் புரிவதே தகுமென்றும் பல காரணங்களுடன் எடுத்துரைத்தனர். அய்யங்காரின் மனதில் அக் காரணங்கள் தைக்கவேயில்லை. சுயநலத்துக் கனுகூலமாக இருக்கும் காரணங்களை அங்கீகரிப்பதும் பிறர்க்குரைப்பதும் மனித இயற்கை. சுயநலத்துக்கு விரோதமாக நிற்கும் நியாயங்களை ஸாதாரணமாகப் புறக்கணித்து விடுதலும் அல்லது அவற்றுக்கு எதிர் நியாயங்கள் கண்டுபிடிக்க முயல்வதும் மனித இயல்

பார். நியாய சாஸ்த்ரமோ வாதி பிரதிவாதி என்ற இரண்டு வகையினரின் கொள்கைகளுக்கும் இடங் கொடுக்கத் தக்கது. திருவாங்கூரில் சிறிது காலத்துக்கு முன்பு 'தர்மஸங்கடம் சங்கரய்யர்' என்றொரு நியாயாதிபதி இருந்தாராம். அவர் தம்முன் விசாரணைக்கு வரும் வழக்குகளில் அனேகமாக ஒவ்வொன்றிலும் எந்தக் கக்ஷி சொல்வது நியாயமென்று தெரியாமல் மிகவும் ஸங்கடப்படுவாராம். 'நியாயம் எப்படி வேண்டுமானாலும் போகுக' என்றெண்ணி, சௌகர்யப்படிக்கும் மனம் போனபடிக்குந் தீர்ப்புச் செய்யுங் குணம் அவரிடம் கிடையாது. எப்படியேனும் உண்மையைக் கண்டுபிடித்து நீதி செலுத்த வேண்டுமென்பது அவருடைய கொள்கை. ஆனால், அங்ஙனம் செய்யப் புகுமிடத்தே, "வாதி சொல்வதைக் கேட்டால் வாதி கக்ஷி உண்மையென்று தோன்றுகிறது. பிரதிவாதி சொல்வதைக் கேட்டால் பிரதிவாதி கக்ஷி மெய்யென்று தோன்றுகிறது. நான் எந்தக் கக்ஷிக்குத் தீர்ப்புச் சொல்வேன்!" என்று அவர் தம்முடைய நண்பரிடங் கூறி வருத்தப்படுவாராம். இது பற்றி அவருடைய நண்பர்கள் அந்த நியாயாதிபதிக்கு 'தர்மஸங்கடம் சங்கரய்யர்' என்று பட்டப் பெயர் சூட்டினார்கள்.

இவ்வுலகத்தில் வெறுமே நீதி ஸ்தலத்து வழக்குகளின் விஷயத்தில் மாத்திரமேயன்றி, ஜன ஸமூஹ ஸம்பந்தமாகவும், மத ஸம்பந்தமாகவும், பிற விஷயங்களைப் பற்றியும் தோன்றும் எல்லா வழக்குகளிலும் இங்ஙனமே நடு உண்மை கண்டு பிடித்தல் சாலவும்

சிரமமென்று நான் நினைக்கிறேன். அளவற்ற தவமும் அதனால் விளையும் ஞானத்தெளிவு முடையோரே எதிலும் பக்ஷபாதமற்ற மயக்கமற்ற நடு உண்மை கண்டு தேரவல்லார். மற்றப்படி உலகத்து வழக்குக்கள் பெரும்பான்மையிலும், வலிமையுடைய மனிதருக்கும் வகுப்புக்களுக்கும் சார்பாகவே நியாயந் தீர்க்கப்படுகின்றது.

"பொய்யுடை யொருவன் சொல்வன்மையினால்
மெய்போலும்மே ; மெய்போலும்மே
மெய்யுடை யொருவன் சொல்லமாட்டாமையால்
பொய்போலும்மே பொய்போலும்மே."

இங்ஙனம் சொல்வலிமை மட்டுமே யன்று ; ஆள் வலிமை, தோள் வலிமை, பொருள் வலிமை—எல்லாவித வலிமைகளும் நியாயத் தராசைத் தமது சார்பாக இழுத்துக்கொள்ள வல்லன.

எனவே, அய்யங்கார் தம்முடைய உயர்ந்த கல்வியாலும், உயர்ந்த உத்தியோகத்தின் வலிமையாலும், தம்முள்ளத்திலமைந்த பேராவலின் வலியாலும் நாயுடுவையும் பந்துலுவையும் எளிதாகத் தமது சார்பில் திருப்பிக்கொண்டார். அப்பால் நாயுடுவிடம் பணிப்பெண்ணின் பூர்வோத்தரங்களைக் குறித்து விசாரித்தார். அவள் இடையர் வீட்டுப் பெண்ணென்றும், அவளுடைய பிதா பல் மாடுகள் வைத்துக்கொண்டு ஊராருக்குப் பால் விற்று ஜீவனம் செய்வாராய்ப் பக்கத்துத் தெருவில் வசிக்கிறாரென்றும், அந்தப் பெண்ணுக்கு இரண்டு மூத்த ஸஹோதரர் இருக்கிறார்க ளென்றும்,

அவர்கள் ஆலையில் வேலை செய்கிறார்களென்றும், தலைக்குப் பதினைந்து ரூபாய் சம்பளமென்றும், அவளுக்குத் தாய் இறந்து போய்விட்டாளென்றும், தமையன்மாரின் மனைவிகளே அவர்களுடைய வீட்டில் சமையல் செய்கிறார்க ளென்றும், ஆதலால் மீனாக்ஷிக்குத் தன் வீட்டில் எவ்விதமான வேலையுங் கிடையாதென்றும், நாயுடுவின் வீட்டிலும் அவளுக்குக் குழந்தைகளை மேற் பார்த்தல், ஸாமான்கள் வாங்கிக்கொண்டு வருதல் முதலிய கௌரவமான கார்யங்களே கொடுபட்டிருக்கின்றன வென்றும், வீடுவாயில் பெருக்குதல், பாத்திரங் கழுவுதல், துணி தோய்த்தல் முதலிய கீழ்க்காரியங்கள் அவள் செய்வது கிடையாதென்றும், அவள் கிறிஸ்தவப் பள்ளிக்கூடத்தில் படித்து நன்றாகத் தமிழ் எழுத வாசிக்கக் கற்றுக்கொண்டு இருக்கிறாள் என்றும், அமைதி பொறுமை இன்சொல் பணிவு முதலிய நல்ல குணங்களுடையவ ளென்றும், அவளுக்கு மாஸம் நாயுடு வீட்டில் பன்னிரண்டு ரூபாய் சம்பளமென்றும், அதை அவள் வீட்டில் கொடுக்கவில்லை யென்றும், நாட்டுக்கோட்டை ம. சி. மாணிக்கஞ் செட்டியார் கடையில் தன் பெயருக்கு வட்டிக்குக் கொடுத்துவிடுகிறாளென்றும், அந்தத் தொகை இதுவரை வட்டியுடன் ஐந்நூறு ரூபாய் இருக்குமென்றும், அவளுக்கு வயது இருபதென்றும், இன்னும் விவாகம் ஆகவில்லை யென்றும், விவாகத்துக்கு அவள் ஆவலுடன் எதிர் பார்த்திருக்கிறா ளென்றும் நாயுடு விஸ்தாரமாகத் தெரிவித்தார்.

"அவளுடைய பிதாவின் பெயரென்ன? அவர் இப்போது வீட்டிலிருப்பாரா?" என்று கோபாலய்யங்கார் கேட்டார்.

"அவளுடைய பிதாவின் பெயர் சுப்புசாமிக் கோனார். அவர் இப்போது வீட்டிலிருப்பார்" என்று நாயுடு சொன்னார். உடனே கோபாலய்யங்காரின் வேண்டுகோளுக்கிணங்கி அவருடன் நாயுடு, பந்துலு இருவரும் சேர்ந்து மூவருமாகப் பக்கத்துத் தெருவிலிருந்த சுப்புசாமிக் கோனாருடைய வீட்டுக்குப் போனார்கள். அங்கு சுப்புசாமிக் கோனார் காலையிலெழுந்து பழையது சாப்பிட்டுவிட்டு, வெற்றிலை பாக்கு புகையிலை போட்டுக்கொண்டிருந்தார். நாயுடுவையும் அவருடைய நண்பரிருவரையும் கண்டவுடன் அவர் எழுந்து நின்று, உள்ளேயிருந்து ஒரு நீளப்பலகை கொண்டு போட்டார். வந்தவர் மூவரும் அதன் மீதுட்கார்ந்து கொண்டார்கள். பிறகு, நாயுடு தாங்கள் வந்த நோக்கத்தை ஸாங்கோபாங்கமாகக் கோனாரிடம் எடுத்துரைத்தார். செக்கச்செவேறென்ற முகமும், கன்னங்கரேலென்ற சுருள் சுருளான கத்தரித்த முடிமயிரும், அகன்ற தெளிந்த அறிவுச்சுடர்கின்ற விழிகளும், துருக்க மீசையும், விரிந்த மார்பும், திரண்ட தோளும், வயிரப் பொத்தான் போட்ட பட்டுச் சட்டையும், தங்கக் கடிகாரமுமாகத் தமக்கு டிப்டி கலெக்டர் கோபாலய்யங்கார் மாப்பிள்ளையாக வருவதைக் கண்டு சுப்புசாமிக் கோனார் பரவசமாய் விட்டார். அவருள்ளத்தில் ஆனந்தக்களி ததும்பலாயிற்று. ஆயினும் பிராமணருக்குப் பெண் கொடுத்தால் பாவம் நேரு

மென்ற ஒரு விஷயம் மாத்திரம் அவர் மனதை மிகச் சஞ்சலப்படுத்திற்று.

"நான் என்ன செய்வேன், சாமி? வயதா னவன். எனக்கு இனிமேல் இவ்வுலகத்தாசை ஒன் றுமேயில்லை. எனக்கினிப் ப[illegible]ப் பற்றிய ஆசைகளை நீக்கி விருக்கின்[illegible] [illegible] ஸ்ரீமந் நாராயணனையும் ஆழ்வார்களையும் [illegible] ஸ்ரீவைஷ்ணவர்களையும் ச[illegible]. எப்போதும் இவர்களை யெல்லாம் பூஜித்துக்கொண்டு இவர் களுக்கு ஏற்ற கைங்கர்யங்கள் செய்துகொண் டும் என் வாழ்நாளைச் செலவிடுகிறேன். நான் சாஸ்த் ரங்களில் நம்பிக்கையுடையவன். பிராமணனுக்கு நான் சூத்திரப் பெண்ணைக் கன்யாதானம் செய்து கொடுப்பத னால் எனக்குப் பாவம் நேரும். ஆதலால், நான் இந்த விஷயத்துக்கு ஸம்மதப்பட வழியில்லை" என்று சுப்பு சாமிக் கோனார் சொன்னார்.

இதைக் கேட்டு கோபாலய்யங்கார்—"கோனாரே, முதலாவது, நான் பிராமணனில்லை. நான் பிராமண தர்மத்துக்குரிய ஆசாரங்களைத் துறந்து சூத்திரனாகி விட்டேன். ஆதலால் தாங்கள் என்னைத் தங்கள் ஜாதி யானாகவே பாவித்து, எனக்குத் தங்கள் மகளை மணம் புரிவிக்க வேண்டுகிறேன். மேலும் நிஜமான பிராமண னே பிராமண குலத்தில் மாத்திரமன்றி மற்ற நான்கு வர்ணங்களிலும் பெண்ணெடுக்கலாமென்று சாஸ்த்ரம் சொல்லுகிறது. இந்த விஷயத்தில் உங்களுக்கு ஸந் தேஹமிருந்தால், என்னிடம் தமிழில் மனு ஸ்ம்ருதி

இருக்கிறது; உங்களிடம் அந்த நூலைக் காட்டு கிறேன். அதை நீங்களே வாசித்துப் பாருங்கள். உங்களுக்குத் தமிழ் வாசிக்கத் தெரியுமோ, தெரியாதோ? தெரியுமா? அப்படியானால் நீங்கள் நான் சொல்வது மெய்யென்பதைக் கண்கூடாகப் பார்த்தறிந்து கொள்ளலாம். இதில் எவ்விதமான பாவத்துக்கும் இடமில்லை" என்றார்.

"அங்ஙனம் சாஸ்த்ரமிருப்பது மெய்தான்" என்று வேங்கடாசல நாயுடு சொன்னார்.

"ஆமாம்; அதுவே மனு ஸ்ம்ருதியின் கொள்கை" என்று வீரேசலிங்கம் பந்துலு கூறினார்.

"எனினும், உலக ஆசாரத்தில் அவ்விதம் வழங்குவதைக் காணோமே?" என்று சுப்புசாமிக் கோனார் ஆக்ஷேபித்தார்.

"நமது தேசத்தில் பூர்வ சாஸ்த்ரங்களுக்கும் நடைகளுக்கும் விரோதமான ஆசாரங்கள் பல பிற்காலத்தில் வழக்கமாய்விட்டன. அவற்றுள் இந்த விஷயமும் ஒன்றும். இவ் விஷயத்தில் நமக்குத் தற்கால ஆசாரம் அதிகப் பிரமாணமன்று. முற்காலத்து சாஸ்திரமே அதிகப் பிரமாணம்" என்று கோபாலய்யங்கார் சொன்னார்.

அப்போது வேங்கடாசல நாயுடு சொல்லுகிறார்:—
"கேளும், சுப்புசாமிக் கோனாரே! பாவம் என்பதெல்லாம் வீண் பேச்சு, இது சாஸ்த்ரோக்தமான விஷயம். இதில் யாதொரு பாவமும் கிடையாது. அப்படியே

பாவமிருந்தபோதிலும், அந்த மாப்பிள்ளையையும் பெண்ணையும் சாருமேயன்றி, உம்மைச் சாராது. அது தவிர, உமக்கும் சிறிது பாவம் வந்து நேரக் கூடுமென்றாலும், அதற்குத் தகுந்த பிராயச்சித்தங்கள் பண்ணிவிடலாம். பெருமாள் கோயிலுக்கு ஏதேனும் காணிக்கை செலுத்தினால் போதும். அதில் எவ்வளவு கொடிய பாவமும் வெந்து சாம்பராய்ப் போய்விடும். உமக்கு எத்தனை பணம் வேண்டுமானாலும், அய்யங்காரவர்கள் கொடுப்பார்'' என்றார்.

பணம் என்ற மாத்திரத்திலே பிணமும் வாயைத் திறக்கும் என்பது பழமொழி. சுப்புசாமிக் கோனார் ஏறக்குறையக் கொட்டாவி யளவுக்கு வாயைப் பிளந்தார்.

"எனக்குக் கொஞ்சம் கடன் பந்தங்களும் இருக்கின்றன. அவற்றையுந் தீர்த்துவைக்க ஏற்பாடு செய்தால் நல்லது'' என்று சுப்புசாமிக் கோனார் சொன்னார்.

"தங்களுக்கு எத்தனை ரூபாய்க்குக் கடன் இருக்கிறது?'' என்று கோபாலய்யங்கார் கேட்டார்.

"ஆயிரம் ரூபாய் கடன் இருக்கிறது'' என்றார் கோனார்.

"மூவாயிரம் ரூபாய் கொடுக்கிறேன்; போதுமா?'' என்று கோபாலய்யங்கார் கேட்டார்.

"ஓ! யதேஷ்டம்! இந்த வாரத்துக்குள்ளேயே விவாகத்தை முடித்துவிடலாம்'' என்று சுப்புசாமிக் கோனார் சொன்னார். அப்பால், மீனாக்ஷியை அழைத்து

அவருடைய ஸம்மதத்தையும் தெரிந்து கொண்டால் நல்லதென்று கோபாலய்யங்கார் கூறினார்.

“அவள் இப்போது வீட்டிலில்லை. நானே அவளிடம் சொல்லி விடுகிறேன்; அவள் சிறு குழந்தை. அவள் பிறந்தது முதல் இதுவரை என் வார்த்தையை ஒரு முறைகூடத் தட்டிப் பேசியது கிடையாது. இப்போது, இப்படி உயர்ந்த, இத்தனை மேன்மையான ஸம்பந்தம் கிடைக்குமிடத்தில் அவள் என் சொல்லைச் சிறிதேனும் தட்டிப்பேசமாட்டாள்” என்றார் கோனார்.

“எதற்கும் அவளை அழைத்து ஒருமுறை அவளிடமும் கேட்டால் தான் என் மனம் ஸமாதானமடையும் நாங்கள் இங்கேயே காத்துக் கொண்டிருக்கிறோம். அவளை அழைப்பியுங்கள்” என்று கோபாலய்யங்கார் சொன்னார். அங்ஙனமே கோனார் ஒரு ஆளை விட்டு மீனாக்ஷியை அழைத்து வரும்படி செய்தார். மீனாக்ஷி வந்தாள். அவளைத் தனியாக அழைத்துப் போய் சுப்புசாமிக் கோனார் விஷயங்களைத் தெரிவித்தார். மாப்பிள்ளையின் படிப்பையும், செல்வத்தையும், பதவியையும் மிகவும் உயர்வாக்கி வர்ணித்தார். மாப்பிள்ளையின் அழகை அவள் பார்க்கும்படி அவரையும் காண்பித்தார். அவள் அவருக்கு வாழ்க்கைப்பட ஸம்மதமுற்றாள். சிறிது நேரத்துக்குள் மகளையும் அழைத்துக்கொண்டு சுப்புசாமிக் கோனார் புறத்து திண்ணைக்கு வந்து சேர்ந்தார். அவளுடைய விழிகளை கோபாலய்யங்கார் நோக்கினார். அவள் எதிர் நோக்களித்தாள். ‘கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின், வாய்ச்சொற்

கள் என்ன பயனுமில்' என்றார் திருவள்ளுவ நாயனார். அவளைப் பார்த்த மாத்திரத்திலே தம்மை மணம் புரிய ஸம்மதப்பட்டு விட்டாளென்று கோபாலய்யங்காருக் குத் தெளிவாகப் புலப்பட்டு விட்டது. எனினும், பரி பூர்ண நிச்சய மேற்படுத்திக் கொள்ளுமாறு அவர் சுப்புசாமிக் கோனாரை நோக்கி, "மீனாக்ஷி என்ன சொல்லுகிறாள்?" என்று கேட்டார்.

"அவளிடத்திலேயே நேராகக் கேட்டுத் தெரிந்து கொள்ளலாமே" என்றார் கோனார்.

"என்ன மீனாக்ஷி? என்ன சொல்லுகிறாய்? என்னை மணம் புரிந்துகொள்ள ஸம்மதந்தானா?" என்று கோபாலய்யங்கார் கேட்டார்.

மீனாக்ஷி "ஸம்மதம்" என்று மெதுவாகக் கூறித் தலை கவிழ்ந்தாள். கோபாலய்யங்காருக்கு ஜீவன் மறுபடி உண்டானது போல் ஆயிற்று. அவர் முகத்தில் புன்னகை தோன்றிற்று.

அந்த வாரத்திலேயே கோபாலய்யங்காரும் மீனா க்ஷியும் பிரம ஸமாஜத்தில் சேர்ந்து கொண்டார்கள். அவ் விருவருக்கும் பிரம ஸமாஜ விதிகளின்படி, சென் னப்பட்டணத்தில் ஹை ஸமாஜக் கோயிலிலே விவாகம் நடைபெற்றது. விவாகம் முடிந்தவுடனே கோபாலய் யங்கார் தமது மனைவியை அழைத்துக்கொண்டு தஞ்சா வூருக்குப் போய் அங்கு தம் உத்தியோகத்தில் சேர்ந்து கொண்டார்.

# ஆறும் அத்யாயம்.

## விசாலாக்ஷிக்கு நேர்ந்த ஸங்கடங்கள்.

கோபாலய்யங்காருக்குத் தன்னை மணம் புரிந்து கொள்ள ஸம்மதமில்லையென்று தெரிந்த மாத்திரத்தில், விசாலாக்ஷி வீரேசலிங்கம் பந்துலுவின் மனைவியிடம் தனக்கு வேறெங்கேனும் நல்ல வரன் தேடி வாழ்க்கைப்படுத்த வேண்டுமென்று மேன்மேலும் மன்றாடிப் பிரார்த்தனை புரிந்தாள். அதற்குப் பந்துலுவின் மனைவி, "நீ எங்களுடன் இங்கேயே இன்னும் பத்துப் பதினைந்து நாள் இரு. இன்னும் சில தினங்கள் வரை பந்துலு கோபாலய்யங்காரின் விவாகத்துக்கு வேண்டிய கார்யங்களிலேயே கருத்துச் செலுத்த நேரும். உன் விஷயத்தைக் கவனிக்க அவருக்கு அவகாசம் இராது. பத்து நாள் ஆன பின்பு நாங்கள் ராஜமஹேந்திரபுரத்துக்குப் போவோம். நீயும் எங்களுடன் வா. எப்படியாவது உனக்கு நான் வரன் தேடிக் கொடுக்கிறேன். ஆனால் அவஸரப்படுவதில் யாதொரு கார்யமும் நடக்காது. சிறிது காலம் பொறுத்துத் தான் பார்க்க வேண்டும்" என்றாள்.

இதுகேட்டு விசாலாக்ஷி:—"மயிலாப்பூரில் என்னுடைய அம்மங்கார் (மாமன் மகள்) இருக்கிறாள். அவளுடைய புருஷன் ஹைகோர்ட் வக்கீல் உத்தியோகம் பார்க்கிறார். பந்துலுகாரு கோபாலய்யங்காரின் விஷயத்தை கவனித்துக் கொண்டிருக்கையில்,

நான் இங்கு சும்மா ஏன் இருக்க வேண்டும்? இந்தப் பத்து நாளும் நான் போய் மயிலாப்பூரிலே தாமஸிக்கிறேன். பத்து நாள் கழிந்தவுடன் இங்கு வருகிறேன்" என்றாள்.

பிறகு அவர்கள் இவ் விஷயத்தைக் குறித்து வீரேசலிங்கம் பந்துலுவிடம் ஆலோசனை செய்தார்கள். அவர் விசாலாக்ஷி தன் இஷ்டப்படி செய்வதைத் தடுக்கத் தாமக்கு ஸம்மதமில்லையென்றும், அவள் மயிலாப்பூரில் பத்து நாள் இருந்துவிட்டு வரலாமென்றும், இதற்கிடையில் அவஸரம் நேர்ந்தால் தாம் மயிலாப்பூருக்குக் கடிதமனுப்பி விசாலாக்ஷியைத் தருவித்துக் கொள்ளக் கூடுமென்றும் தெரிவித்தார்.

"மயிலாப்பூரில் உன் பந்துவின் விலாஸமெப்படி?" என்று பந்துலு கேட்டார்.

அதற்கு விசாலாக்ஷி:—"என் அம்மாங்காருடைய* புருஷன் மயிலாப்பூரில் லஸ் சர்ச் ரஸ்தாவிலிருக்கிறார். அவருடைய பெயர் ஸோமநாதய்யர். ஆனால் அவரும் என் அம்மங்காரும் அவர் வீட்டிலிருக்கும் அவருடைய தாயாரும் மிகவும் வைதிக நம்பிக்கைகளுடையவர்கள். நான் மறுபடி விவாகம் செய்துகொள்வதில்

* மாமன் மகளுக்கு அம்மங்கார் என்றும், அத்தை மகளுக்கு அத்தங்கார் என்றும் பிராமணர்களுக்குள்ளே பெயர்கள் வழங்கி வருகின்றன. சிலருக்கு ஒரு வேளை இச் சொற்கள் தெரியாமலிருக்கக் கூடுமாதலால் அவற்றை இங்கு விளக்கிக் கூறினேன்.

அவர்களுக்கு ஸம்மதம் இராது. விவாகம் நடந்து முடியும்வரை, நான் விவாகம் செய்துகொள்ளப் போகிறேனென்ற விஷயத்தை என் பந்துக்களுக்கு அநாவசியமாகத் தெரிவிப்பதில் எனக்கு ஸம்மதமில்லை. ஆதலால், தாங்கள் நான் இருக்குமிடத்துக்கு ஆளேனும் கடிதமேனும் அனுப்பவேண்டியதில்லை. இன்ன தேதியன்று நான் இங்கு வரவேண்டுமென்று இப்பொழுதே சொல்லிவிடுங்கள். அந்தத் தேதியில் நான் இங்கு வருகிறேன். அதற்கிடையே என்னை மறந்துபோய் விடாமல் என் கார்யத்தில் கவனம் செலுத்திக்கொண்டிருங்கள்" என்றாள்.

அப்போது பந்துலு, "நான் உன்னை மறக்கவே மாட்டேன். உன் விவாகம் நடப்பதற்குரிய யோசனை என் புத்தியில் அகலாதே நிற்கும். நீ அதைக் குறித்துக் கவலைப்பட வேண்டா. ஜனவரி மாஸம் இருபதாந் தேதி நான் இங்கிருந்து ராஜமஹேந்திரபுரத்துக்குப் புறப்படப் போகிறேன். நீ ஜனவரி மாஸம் பதினெட்டாந் தேதி இங்கு வா" என்றார்.

இது கேட்டு விசாலாக்ஷி:—"தாங்கள் இந்த ஊரிலிருக்கும்போதே எனக்கொரு வரன் தேடிக் கொடுக்க முயற்சி பண்ணுவதே உசிதமென்று நினைக்கிறேன். இது ராஜதானிப் பட்டணம். இங்கு கிடைக்காத வரன் ஒதுக்கமான கோதாவரிக் கரையில் எங்ஙனம் கிடைக்கப் போகிறான்?" என்றாள்.

அதற்குப் பந்துலு:—"அப்படி யில்லை யம்மா.

இங்கிருந்தாலும் ராஜமகேந்திரபுரத்தி லிருந்தாலும் ஒன்று போலே தான். இவ் விஷயத்தில் சிரத்தை யெடுக்கக் கூடிய நண்பர்கள் எனக்குப் பல ஊர்களிலே இருக்கிறார்கள். அவர்களுக்குக் கடிதமெழுதுவேன். அவர்கள் அவ் வவ் விடங்களில் விசாரித்து விடை யெழுதுவார்கள். பத்திரிகைகளிலும் விளம்பரம் செய்வேன்" என்றார்.

"பத்திரிகைகளில் விளம்பரம் பிரசுரிக்கும்போது என் பெயர் போடக்கூடாது" என்றாள் விசாலாக்ஷி.

"சரி, பெயர் போடாமல் பொதுப்படையாக எழுதுகிறேன். இந்த கோபாலய்யங்காரின் விவாகம் இன்னும் ஒரு வாரத்துக்குள் முடிந்துபோய் விடும். பிறகு, உன் கார்யத்தை முடிக்குமுன்பு நான் வேறெந்த வேலையையும் கவனிக்க மாட்டேன். எத்தனை சிரமப் பட்டேனும் உன் நோக்கத்தை நான் நிறைவேற்றிக் கொடுக்கிறேன். பயப்படாதே" என்று பந்துலு சொன்னார்.

"அப்படியானால், என்னை ஜனவரி பதினெட்டாந் தேதியா இங்கு வரச் சொல்லுகிறீர்கள்?" என்று விசாலாக்ஷி கேட்டாள்.

"இன்னும் எழெட்டு நாளில் கோபாலய்யங்கார் விஷயம் முடிந்து போய்விடும். எனவே ஜனவரி பத்தாந் தேதி இங்கு வந்துவிடு" என்றார் பந்துலு.

அப்பால் பந்துலுவிடமும் அவர் மனைவியிடமும் விடைபெற்றுக்கொண்டு விசாலாக்ஷி, சந்திரிகை ஸஹித

மாக, மயிலாப்பூர் லஸ் சர்சு ரஸ்தாவில் ஹைகோர்ட் வக்கீல் ஸோமநாதய்யர் வீட்டுக்கு வந்து சேர்ந்தாள்.

வக்கீல் ஸோமநாதய்யரின் மனைவிக்குப் பெயர் முத்தம்மா. நமது விசாலாக்ஷியை கண்டவுடன் இவள் மிகுந்த ஆவலுடன் நல்வரவு கூறி உபசாரம் பண்ணினாள். இவ்விருவரும் அத்தங்கார் அம்மங்கார் என்ற உறவு மாத்திரமேயன்றி பால்ய முதலாகவே மிகவும் நெருங்கிய நட்புடன் பழகி வந்தவர்கள்.

முத்தம்மா திருநெல்வேலியில் தெப்பக் குளத் தெருவில் பிறந்து வளர்ந்து வந்தவள். திருநெல்வேலியிலிருந்து வேளாண்குடி மிகவும் ஸமீப மாதலால் இவ் விருவரும் அடிக்கடி ஸந்திக்க நேர்ந்தது. சுற்றுப் பக்கங்களிலுள்ள கிராமங்களில் எங்கு எந்த பந்துக்கள் வீட்டில் என்ன விசேஷம் நடந்த போதிலும், அங்கு விசாலாக்ஷியும் வருவாள் ; முத்தம்மாளும் வந்து விடுவாள். வந்தால், இவ் விருவர் மாத்திரம் எப்போதும் இணைபிரிவதே கிடையாது. சாப்பாட்டுக்கு உட்கார்வதென்றால், இருவரும் கூடவே தொடை மேல் தொடை போட்டுக்கொண்டு உட்கார்வார்கள். விளையாட்டிலும் பிரிய மாட்டார்கள். விளையாட்டு முடிந்தால் இருவரும் கைகோத்த வண்ணமாகவே சுற்றித் திரிவார்கள். இராத்திரி, இருவரும் ஒரே பாயில் கட்டிக்கொண்டு படுத்திருப்பார்கள். மேலும், ஒரு ஸமயத்தில் முத்தம்மாளை அவளுடைய பிதா வேளாண்குடியில் தன் தமக்கை வீட்டிலேயே, அதாவது, விசாலாக்ஷியின் தாய் வீட்டிலேயே, ஆறேழு

மாஸம் இருக்கும்படி விட்டிருந்தார். அது எப்போ தென்றால், பத்தாம் வயதில் விசாலாக்ஷி தாலி யறுத்த ஸமயத்தில். அப்போது முத்தம்மா வந்து வேளாண் குடியில் சில மாதங்களிருந்தால் தான் தன் மகளுக்கு ஒருவாறு ஆறுதலேற்படு மென்று கருதி விசாலாக்ஷி யின் தாய் தன் தம்பிக்கு அவஸரமாகச் சொல்லி யனுப்பினாள்.

தமக்கையின் வார்த்தையைத் தட்ட மனமில்லா மல், அவர் அங்ஙனமே முத்தம்மாளை வேளாண்குடி யில் கொண்டு விட்டிருந்தார். ஒரே வீட்டில் ஒன்று கக் குடியிருந்தபோது அவ்விருவரின் உளங்களும் ஒட் டியே போய்விட்டன. வேளாண்குடியிலிருந்து திரும் பித் திருநெல்வேலிக்குச் சென்ற பிறகுங்கூட நெடுங் காலம் வரை இரா வேளைகளில் கனவிலெல்லாம் முத் தம்மா விசாலாக்ஷியுடன் ஸம்பாஷணை நடத்துவது போலவே பேசிக் கொண்டிருப்பாள்.

விசாலாக்ஷியோ வெனில், அப் பிரிவு நிகழ்ந்து நெடுங்காலம் வரை பகலிலேயே தன்னுடைய மற்றத் தோழிப் பெண்களைக் கூப்பிடும் போது 'முத்தம்மா, முத்தம்மா' என்று கூப்பிடுவாள். இப்படி அளவு கடந்த பால்ய ஸ்நேஹமுடைய இவ்விருவரும், முத் தம்மா புக்ககத்துக்கு வந்த பிறகு ஒருவரை யொருவர் ஸந்திக்கவேயில்லை. ஸோமநாதய்யர் கும்பகோணத்தில் பிறந்து வளர்ந்து கும்பகோணம் காலேஜிலேயே பீ.ஏ. பரீக்ஷை தேறினார். முத்தம்மாளுடைய பிதா அவ ளுடைய ஜாதகத்தை எடுத்துக்கொண்டு மதுரை, திருச்

சிறுப்பள்ளி காலேஜ்களைப் பரிசோதனை செய்து முடித்துக் கடைசியாகக் கும்பகோணம் காலேஜுக்கு வந்து ஸோமநாதய்யரைக் கண்டு தக்க மாப்பிள்ளை யென்று நிச்சயித்தார். அந்தக் காலத்தில் வரசுல்கம்—அதாவது மாப்பிள்ளையைப் பெண் வீட்டார் பணங் கொடுத்துக் கிரயத்துக்கு வாங்குதல்—என்ற வழக்கம் கிடையாது. கன்யா சுல்கம்—அதாவது பெண்ணுக்கு மாப்பிள்ளை வீட்டார் கிரயங் கொடுத்து வாங்குதல்—என்ற வழக்கமே நடைபெற்று வந்தது. எனவே, ஸோமநாதய்யர் ஏழைகளுடைய பிள்ளையாதலால், கன்யாசுல்கம் கொடுத்து விவாகம் செய்து கொள்ள வழி தெரியாமல் "என்னடா, செய்வோம்!" என்று தத்தளித்துக் கொண்டிருந்தார். அவருடைய உருவ லக்ஷணங்களையும் படிப்புத் திறமையையும் உத்தேசித்து அவருக்கே தமது மகளைக் கன்யா சுல்கம் வாங்காமல், அதாவது இனாமாக, மணம்புரிந்து கொடுத்து விடலாமென்று முத்தம்மாளின் பிதா தீர்மானித்தார்.

ஸோமநாதய்யர் திருநெல்வேலிக்கு வந்து பெண்ணுடைய அழகையும் புத்திக் கூர்மையையும் கண்டு வியந்து அவளை மணம்புரிந்து கொள்ள உடம்பட்டார். தனக்கு விவாகம் முடிந்த பின்னர் முத்தம்மா விசாலாக்ஷியை ஓரிரண்டு முறைதான் ஸந்திக்க நேர்ந்தது. முத்தம்மா ருதுவாய், அவளுக்கு ருது சாந்தியாய் அவள் புக்ககத்துக்குச் சென்ற பின்னர் அவளும் விசாலாக்ஷியும் ஒரு முறை கூட ஸந்திக்க நேரமில்லை. அவள் கும்பகோணத்துக்கு வந்துவிட்டாள். பீ.ஏ., பி.எல்.

பரிக்ஷை தேறி, ஸோமநாதய்யர், ஹைகோர்ட் வக்கீலாய் கும்பகோணத்தில் சில வருஷங்கள் உத்தியோகம் பண்ணிவிட்டு, அப்பால் பணம் ஏறிப்போய் அதினின்றும் அதிகப் பணத்தாசை கொண்டு மயிலாப்பூரில் வந்து ஒரு பெரிய பங்களா வாடகைக்கு வாங்கி அதில் குடியிருந்து சென்னை ஹைகோர்ட்டிலேயே வக்கீல் உத்தியோகம் பண்ணிக்கொண்டு வருகிறார்.

ஆதலால், இப்போது, பல வருஷங்களுக்குப் பின் புதிதாக ஸந்தித்ததில், முத்தம்மாளும் விசாலாக்ஷியும் ஸ்நேஹ பரவசராய் ஆனந்த ஸாகரத்தில் அழுந்திப் போயினர். முத்தம்மாளுக்கு இருபத்தைந்து வயது தானிருக்கும். அவளுக்கு மூன்று ஆண் குழந்தைகளிருந்தன. மூத்தவனுக்கு ஒன்பது வயதிருக்கும். அவன் பெயர் ராமநாதன். அடுத்த பிள்ளைக்கு ஆறு வயதிருக்கும், அவன் பெயர் ராமகிருஷ்ணன். அடுத்த குழந்தைக்கு மூன்று வயது. அதன் பெயர் அநந்த கிருஷ்ணன்.

முத்தம்மாளுடைய மாமியார் ஒருத்தி அந்த வீட்டிலேயே இருந்தாள். அவளுக்கு அறுபது வயதிருக்கும். அவள் விதவை. அவள் பெயர் ராமுப்பாட்டி. அவளுக்கு க்ஷயரோகம், அல்லது, காசரோகம்; அதாவது, சீக்கிரத்தில் கொல்லுகிற கொடூரமான க்ஷயமில்லை நோயாளியை நெடுங்காலம் உயிருடன் வைத்து வைத்துக் கடைசியில் கொல்லும் மாதிரி. இராத்திரி ஏழு மணியாய் விட்டால் அவள் இருமத் தொடங்கி விடுவாள். பாதி ராத்திரி, ஒரு மணி, காலை இரண்டு மணி

வரை மஹாபயங்கரமாக இருமிக்கொண்டேயிருப்பாள். அந்த இருமலைக் கேட்டால், கேட்பவருடைய பிராணன் இரண்டு நிமிஷத்துக்குள்ளே போய் விடும் போலிருக்கும். ஆனால், ராமுப்பாட்டி சென்ற முப்பது வருஷங்களாக அப்படித்தான் இருமிக்கொண்டு வருகிறாள். அவளுடைய பிராணன் அணுவளவுகூட அசையவில்லை.

இப்படி யிருக்கையில், விசாலாக்ஷி ஸோமநாதய்யர் வீட்டுக்கு வந்து சேர்ந்து சில தினங்கள் கழிந்தவுடனே, ஒருநாள் ஏகாதசி இரவு. ராமுப்பாட்டிக்கு அன்று முழுதும் போஜனம் கிடையாது. ஆகலால், அவள் அன்று வழக்கப்படி இரவில் இரும முடியவில்லை. அயர்ந்து தூங்கிப்போய் விட்டாள். அவள் கீழ்த்தளத்தில் வெளியோரக் கரையில், ஒரு கட்டில் மெத்தை போட்டுப் படுத்துக்கொண்டிருந்தாள். அவள் பக்கத்தில் ஒரு 'புயற்காற்று' விளக்கும் ஒரு தீச்சட்டியும் கட்டிலுக் கருகில் இருபுறங்களிலும் பாரிசத்துக்கொன்றாக, இரண்டு நாற்காலிகளின் மீது, அதாவது சாய்விடமில்லாத நாற்காற் பலகைகளின்மீது, வைக்கப்பட்டிருந்தன.

அதற்கு மேற்கே மூன்றறை கழித்து நான்காமறையில் விசாலாக்ஷி ஒரு கட்டில் மெத்தை போட்டுப் படுத்திருக்கிறாள். அவளுடைய கட்டிலின் அருகே கட்டிலைக் காட்டிலும் சிறிதளவு உயரமான ஒரு நாற்காற் பலகையின்மீது ஒரு புயற்காற்று விளக்கு எரிந்துகொண்டிருந்தது. அவள் கையில் வைத்து வாசித்துக் கொண்டிருந்த ஒரு நாவல் தானே

நழுவி வெள்ளை வெளேரென்ற உரையின்மீது விழுந்து கிடந்தது. அவளுடைய கரிய நீண்ட கூந்தல் அந்த தைய வெள்ளைத் தலையணையின்மீது கன்னங் கரே லென்று விழுந்து கிடந்ததை நோக்குகையில், பனிக் குன்றின் மீது கரிய மேகம் கிடப்பது போலிருந்தது. விசாலாக்ஷி விதவையாயினும் அவள் தலையை மொட்டை யடிக்கவில்லை. சாகும்பொழுது தன் தமையன் மனைவி "அடீ, விசாலாக்ஷீ! நீ எப்படியேனும் மறு விவாகம் செய்துகொள்" என்று சொல்லிவிட்டுப் போன வார்த் தையில் அவளுக்கிருந்த நம்பிக்கையாலும், திடீரென்று பூகம்பமும் புயற்காற்றும் விளைவித்த, எதிர்பார்க்கப் படாத, கோர மரணப் பெருங்கோலத்தைக் கண்டும் பின் ஆவி பிழைத்ததனால் அவளுக்கேற்பட்ட பெரிய தைர்யத்தாலும் அவள் தலை மயிர் வளர்க்கத் தொடங்கி விட்டாள்.

தலைமயிர் வளர்த்துக் கொண்டே ஓரிரண்டு வரு ஷம் நாங்கனேரி அவளுடைய தாயுடன் பிறந்த மற் றொரு மாமன் வீட்டில் சந்திரிகையுடன் வந்து குடி யிருந்தாள். அந்த ஊரில் அந்தணர்கள் அவள் மீது அபாரமான பழிதூற்றத் தொடங்கி விட்டார்கள். அந்தத் தூற்றுதல் பொறுக்க மாட்டாதபடியாலே தான் அவள் அவ்வூரை விட்டுப் புறப்பட்டு வழி நெடு கத் தீர்த்த யாத்திரை செய்துகொண்டு சென்னப் பட்டணம் வந்து சேர்ந்திருக்கிறாள். "இந்த ஊரில் எனக்குப் பழி பொறுக்க முடியவில்லை; மாமா, நான் காசிக்குப் புறப்பட்டுப் போய் கங்கைக் கரையில் தவம்

பண்ணிக் கொண்டிருந்து நாளடைவில் என் பிராணனை விட்டு விடுகிறேன். எனக்கு வழிச்செலவுக்கு ஏதேனும் பணம் கொடும்; நான் அங்கே சென்று பிச்சை யெடுத்து இந்தக் குழந்தை சந்திரிகையையும் காப்பாற்றி நானும் பிழைத்துக் கொள்கிறேன்" என்று அவள் நாங்கனேரியை விட்டுப் புறப்படுமுன் தன் மாமனிடம் பிரார்த்தனை செய்துகொண்டாள்.

"இந்தக் குழந்தைக்கு விவாகம் பண்ணவேண்டிய பருவம் நேர்ந்தால் அப்போதென் செய்வாய்?" என்று மாமா கேட்டார்.

" அங்கே நம்முடைய தமிழ்த் தேசத்துப் பிராமணர் அனேகர் குடியேறி யிருக்கிறார்கள். இனி மேன்மேலும் அதிகமாகக் குடியேறி வருவார்கள். யாத்திரைக்காக வேறு, வருஷந்தோறும் நம்மவர் அனேகர் வந்து போய்க்கொண்டிருப்பார்கள். அத்தனை ஜனங்களில் என் சந்திரிகைக்கொரு மாப்பிள்ளை கிடைக்காமலா போகிறான்?" என்று விசாலாக்ஷி கேட்டாள்.

உடனே அவர் விசாலாக்ஷியின் கையில் ஐந்நூறு ரூபாய் வெள்ளி நாணயங்களாக ஒரு பையில் கட்டிக் கொடுத்து, "இதைக் கொண்டுபோய், ரயில் செலவு போக மிஞ்சியதை அங்கு யாரேனும் ஸாஹுகார் கையில் வட்டிக்குக் கொடுத்து வட்டி வாங்கி ஜீவனம் செய்து கொண்டிரு. அடிக்கடி இங்கு வந்து போய்க் கொண்டிரு. உனக்கு அப்போதப்போது என்னாலான உதவிகளைச் செய்து கொண்டு வருகிறேன். பயப்

படாதே!'' என்று சொல்லி மாமா இவளை யனுப்பி விட்டார். ஊராருடைய தூற்றலைப் பொறுக்க மாட்டாமையால் அவருக்கும் இவளை எப்படியேனும் அந்த ஊரை விட்டனுப்பி விடுவதில் ஸம்மதமாகவே யிருந்தது. அவளுடைய இஷ்டத்துக்கு விரோதமாக அவளை மொட்டை யடித்துக் கொள்ளும்படி கட்டாயப்படுத்த அவருக்கு மனமும் இல்லை. அவர் அப்படியே கட்டாயப் படுத்தியிருந்தாலும், அவள் அதற்குக் கட்டுப்பட்டிருக்கமாட்டாள். அவள் கட்டுப்பட்டு மொட்டையிட்டுக் கொண்டாலும் அதைப் பார்க்க அவருக்கு மனமிருந்திராது. அவருக்கு விசாலாக்ஷியின்மீது அத்தனை தூரம் பிரியம். அவளைத் தன் சொந்த மகள் போலவே கருதினார்.

எனவே, அவரிடம் பணத்தை வாங்கிக்கொண்டு விசாலாக்ஷி புறப்பட்டு வழி நெடுக ஸ்தல யாத்திரை செய்த ஸமயத்தில் அவளுடைய கற்பை யழிக்கவும், அவள் கையிலிருந்த பணத்தை அபஹரித்துக்கொள்ளவும், அல்லது அவ்விரண்டு வகைப் பாதகச் செயல்களையும் கலந்து செய்யவும் பல ஆண்மக்கள் முயன்றனர். ஆனால் அவளை சாஸ்த்ரோக்தமாக விவாகம் செய்துகொண்டு அவளுடன் சதிபதியாக வாழக்கூடிய வனுகை அவளுக்கு எவனும் தென்படவில்லை. எனவே, முழுதும் ஆசாபங்கமுற்றவளாய், அதனால் ஒருவித முரட்டுத் தைரியம் அதிகப்பட்டுத் தான் இவள் ஜீ. சுப்பிரமணிய அய்யரிடத்திலும், அப்பால் வீரேசலிங்கம் பந்துலுவிடத்திலும், இத்தனை பெருந் துணிவுடன்

தனக்கு வரன்தேடிக் கொடுக்கும்படி வற்புறுத்தக் கூடியவளாயினாள். அப்பால், மேலே கதையை நடத்து வோம்.

இப்போது, அதாவது 1905ஆம் வருஷ ஆரம்பத் தில் கார்காலத்தில் ஏகாதசி இரவில், மயிலாப்பூர் வக்கீல் ஸோமநாதய்யர் வீட்டில் தரைப்பகுதியில் ஓரறையில் விசாலாக்ஷி சந்திரிகையுடன் படுத்திருந்த கதையை மேலே சொல்லுவோம்.

அவளுடைய கரிய கூந்தல் அந்த நேர்த்தியான விளக்கொளியில் மிக அழகாகப் பரந்துகிடந்தது. அவளுடைய முகம் பூர்ணசந்திரனைப் போலே ஒளி வீசிற்று. அவளுடைய மார்பு மெல்லிய பச்சைப் பட்டு ரவிக்கையின்மீது வனப்புறப் பூரித்து நின்றது. அவளுடைய மார்புத் துணி தூக்கத்திலே கழன்று போய்விட்டது. தேவ ஸ்திரீயோ, கந்தர்வ ஸ்திரீயோ என்று தேவ கந்தர்வர் கண்டாலும் மயங்கத் தக்க வாறு அத்தனை எழிலுடன் படுத்திருந்தாள்.

அவள் அறைக்கதவைத் தாழ்ப்போடவில்லை. கிழவி ராமுப்பாட்டியின் இருமல் சத்தம் காதில் விழாத படி, ஸோமநாதய்யர் தம் பத்தினியுடன் மாடிமேல் கொல்லைப்புறத்திலிருந்த அறையில்—அதாவது கிழவி யினுடைய அறையிலிருந்து எத்தனை தூரம் தள்ளி யிருக்க ஸாத்தியப்படுமோ, அத்தனை தூரத்தில்— இராத்திரிகளிலே படுத்துக்கொள்வது வழக்கம். ஆனால் அன்று அந்த ஏகாதசி இரவில் ஸோமநாதய்யரின்

மனைவி முத்தம்மா அவருடன் படுத்துக்கொள்ளவில்லை. ஏனென்றால், அவள் அன்று ஸ்நானம் பண்ணாதபடியால் வீட்டுக்கு விலக்குற்றவளாய், வெளித் திண்ணையில் ஒரு மூங்கிலறை கட்டி அதற்குள் சேர்த்தியான திரைகள் கட்டி ஒரு கட்டில் மெத்தை போட்டு அதன்மீது படுத்திருந்தாள். அவளுடைய மூன்றாங் குழந்தையாகிய அநந்தகிருஷ்ணன் மாத்திரம் அவளுடன் படுத்திருந்தான். ராமநாதனும் ராமகிருஷ்ணனும் மேலே ஸோமநாதய்யரின் கட்டிலுக்கும் அவருடைய மனைவியின் கட்டிலுக்கும் புறத்தே குழந்தைகளுக்கென்று போட்டிருந்த மூன்றாங் கட்டிலின்மீது படுத்திருந்தனர்.

நள்ளிரவு. சோவென்று மழை கொட்டுகிறது. அந்த மழையாகிய தாயின் பாட்டின் குரலில் மயங்கிப் போன குழந்தைகளைப் போல் ராமுப் பாட்டியும், தோட்டத்தில் வெளிக் குச்சிலில் படுத்திருந்த தோட்டக் காவலனும், திண்ணையில் படுத்திருந்த முத்தம்மாளும், அவளருகே அநந்த கிருஷ்ணனும், உள்ளே விசாலாக்ஷியும் சந்திரிகையும், மேலே ராமநாதனும் ராமகிருஷ்ணனும் எல்லாரும் ஆழ்ந்த நித்திரையில் மூழ்கி விட்டனர். அப்போது ஒரு ஆள் மாத்திரம் நித்திரை செய்யவில்லை. அது நம்முடைய ஸோமநாதய்யர். ஸோமநாதய்யருக்கு வயது அப்போது சுமார் முப்பதிருக்கும். ஆள் நல்ல அழகன். 'ஸாண்டோ' இரும்பு குண்டு போட்டு அவருடைய இரண்டு புஜங்களும் அழகாகப் பருத்திருந்தன. தோட்சதைகள் நன்கு திரண்டிருந்தன. முன்னங் கைகள்

செவ்வனே உருட்சி பெற்றிருந்தன. விரல்கள் உறுதி பெற்றிருந்தன. மார்பு நேர்த்தியாகப் படைத்திருந்தது. வயிறு நன்கு படிந்திருந்தது. மேலும் பலவித அப்யாஸங்களால் அவருடைய தொடைகளும் கால்களும் வலிமையும் உறுதியும் அழகு முறச் சமைந்திருந்தன. ஆனால் அவருக்குத் தலைமயிர் மாத்திரம் கொஞ்சம் நரைக்கத் தொடங்கிவிட்டது. கொஞ்சம் வழுக்கையுமுண்டு. கண் பார்வை கொஞ்சம் சொற்பம். அதற்காக ஐரோப்பியக் கண் சோதனை வைத்தியரிடமிருந்து உயர்ந்த விலையில் மூக்குக் கண்ணாடி வாங்கி அதற்குத் தங்கக் கம்பி போட்டு மாட்டிக் கொண்டிருந்தார். முகம் நன்றாக க்ஷவரம் பண்ணி மிகவும் தளதளப்பாகவும் அழகாகவு மிருந்தது. அவர் மாத்திரம் அன்றிரவு நித்திரை புரியவில்லை யென்றேன். ஏன்? என்ன செய்து கொண்டிருந்தார்? மெல்ல மாடியை விட்டுக் கீழே இறங்கினார். விசாலாக்ஷி படுத்திருந்த அறைக்குப் புறம்பே வந்து நின்றார். கதவை மெல்ல அசைத்துப் பார்த்தார். கதவு விசாலாக்ஷியின் சூதற்ற தன்மையால் திறந்து கிடந்தது. உள்ளே நுழைந்தார். விசாலாக்ஷி படுத்திருந்த கட்டிலின் பக்கத்தே போய் நின்றுகொண்டு அந்த திவ்யமான ஒளியில் அவளுடைய திவ்ய விக்ரஹத்தைக் கண்டார். தன்னை மறந்து போய் அவள் மேலே கையைப் போட்டார். அவள் திடுக்கிட்டு விழித்து இவரைப் பார்த்தவுடன் அஞ்சி மார்புத் துணியை நேரே போர்த்துக் கொண்டாள். அப்பால் இவரை நோக்கி மிகவும் கோபத்துடன் :—

"இங்கு எதன் பொருட்டாக இந்த நேரத்தில் வந்தீர்?" என்று கேட்டாள். இவர் ஏதோ வழவழ வென்று மறு மொழி சொன்னார். இவருடைய சொற்களின் ஒலியா லும் முகக் குறிகளாலும் இவருடைய ஹ்ருதயம் சுத்த மில்லை யென்பதை அவள் உணர்ந்துகொண்டு தன் இடுப்பில் சொருகியிருந்த கூரிய கத்தியொன்றை எடுத்து இவருடைய மார்புக்கு நேரே நீட்டினாள். இவர் பயந்து போய் இன்னது செய்வதென்று தெரி யாமல் திகைத்து நின்றார். இவர் இங்ஙனம் நிற்பதைக் கண்டு விசாலாக்ஷி இடிபோன்ற உரத்த குரலில் "இங் கிருந்து வெளியேறிப் போம்" என்றலறினாள்.

"குழந்தையை எழுப்பிவிடாதே" என்று ஸோம நாதய்யர் மெல்ல ஜாடைகள் பேசுவது போலே கிரு கிருத்துச் சொன்னார். முன்னைக் காட்டிலும் உரப் பாக விசாலாக்ஷி முப்பத்து மூன்று இடிகள் சேர்ந்து இடிக்கும் குரலில் "போம்; இங்கிருந்து வெளியேறு!" என்று மற்றொரு முறை கர்ஜித்தாள். ஸோமநாதய்யர் வெலவெலத்துப்போய் வெளியேறி மாடிக்குச் சென்று தன் அறைக்குள்ளே போய், அறைக் கதவைச் சார்த் தித் தாழிட்டு, விளக்கை யணைத்துவிட்டு உள்ளே கட் டில் மீது படுத்துக்கொண்டு மேலெல்லாம் போர்வை போட்டு மூடிக் கண்களை இறுக மூடிக்கொண்டு தூங்க முயன்றார். ஆனால் அவருக்குத் தூக்கம் வரவில்லை. உடம்பெல்லாம் வியர்த்தது. போர்வையைக் கழற்றி யெறிந்தார். குளிரெடுத்தது. மறுபடி போர்வையை எடுத்து மூடிக்கொண்டார். கைகால் உளைச்சல்

ஸஹிக்க முடியவில்லை. நரம்புகளைத் துண்டு துண்டாக வெட்டுவது போன்ற வேதனை யுண்டாயிற்று. அவருடைய ஹ்ருதயத்தில் ஆயிரம் பிசாசுகள் சேர்ந்து நர்த்தனம் செய்வதுபோன்ற பலவகைப்பட்ட வேதனை ஏற்பட்டது. அவருக்குத் தூக்க மெப்படி வரும்?

கீழே விசாலாக்ஷி, இவர் வெளியேறியவுடன் தன் அறைக்கதவைத் தாழிட்டுக்கொண்டு மறுபடி கட்டிலின்மேல் வந்து படுத்துச் சில க்ஷணங்களுக்கெல்லாம் ஆழ்ந்த நித்திரையில் அமிழ்ந்து விட்டாள். மழை சரசரவென்று பொழிந்துகொண்டிருக்கிறது.

---

## ஏழாம் அத்யாயம்.

### விடுதலை.

"ஒருகால் விடுதலை யுற்றான்
எப்போதும் விடுதலை யுற்றான்"

மறுநாட் பொழுது விடிந்தது. ஸோமநாதய்யர் வீட்டில் சிராத்தம், அவருடைய பிதாவுக்கு. முத்தம்மா ஸ்நானம் ரங்குளித்து வீட்டுவேலைக்கு மீண்டுவிட்டாள். முத்துஸ்வாப்பா தீக்ஷிதரும், குப்புஸாமி தீக்ஷிதரும் பிராமணார்த்த பிராமணராக அழைக்கப்பட்டிருந்தனர். அவ்விருவருள்ளே முத்துஸ்வாப்பா தீக்ஷிதரே புரோஹிதர். இவ்விருவரும் காலையில் பத்து மணிக்கே வந்துவிட்டார்கள். ஆனால் பகல் இரண்டு மணிவரை ஸோமநாதய்யர் மெத்தையைவிட்டுக் கீழே இறங்க முடியவில்லை. அவருக்குப் பலமான தலை நோவு.

இதனிடையே தீக்ஷிதரிருவரும் சும்மா பதுமைகள்போல் உட்கார்ந்திருக்க மனமில்லாமல் வேதாந்த விசாரணையில் புகுந்தனர்.

முத்துஸ்வாப்பா தீக்ஷிதர் சொன்னார்:—“ஜீவன் முக்தி இஹலோகத்தில், அதாவது, இந்த சரீரத்தில் ஸாத்யம்” என்றார்.

“ஆனால் இந்த சரீரத்தில் ஏற்படும் முக்தி எப்போதைக்கும் சாசுவதமாக நிற்பது நிச்சயமில்லை” என்று குப்புசாமி தீக்ஷிதர் சொன்னார்.

“உமக்கு விடுதலை என்றால் இன்னதென்ற விஷயமே புலப்படவில்லை யென்று தெளிவுபட விளங்குகிறது. விடுதலை யென்பது ஒருகாற் பெறப்படுமானால் மறுபடி தளையென்பதே கிடையாது. முக்திக்குப் பிறகு பந்தமில்லை. ஸர்வபந்த நிவாரணமே முக்தி. அந்த ஸர்வபந்த நிவாரணமாவது ஸர்வ துக்க நிவாரணம், ஸர்வ துக்கங்களையும் ஒரே யடியாகத் தொலைத்து விடுதல். அந்த நிலைமை பெற்ற பிறகும் ஒருவன் மறுபடி பந்தத்துக்குக் கட்டுப்பட இடமுண்டாகுமென்று சொல்லுதல் பொருந்தாது.” என்று முத்துஸ்வாப்பா தீக்ஷிதர் சொன்னார்.

“ஸ்வர்க்க லோகத்திற்குப் போன பிறகும் அங்கிருந்து வீழ்ச்சி யேற்படுவதாக நம்முடைய சாஸ்த்ரங்கள் சொல்லுகின்றனவே, அதன் தாத்பர்ய மென்ன?” என்று குப்புசாமி தீக்ஷிதர் கேட்டார்.

"அந்த விஷயமெல்லாம் எனக்குத் தெரியாது. ஜீவன்முக்திக்கு நான் சொன்னது தான் சரியான அர்த்தம். அதை எந்த சாஸ்த்ரத்திலும் பார்த்துக் கொள்ளலாம்" என்று முத்துஸாப்பா தீக்ஷிதர் சொன்னார்.

இவர்கள் இந்த விஷயத்தைக் குறித்து நெடுநேரம் வார்த்தையாடிக் கொண்டிருந்தார்கள்.

கடைசியாக ஸோமநாதய்யர் மாடியை விட்டுக் கீழே யிறங்கி வந்தார். அவர், "இந்த தர்க்கத்தின் விஷயமென்ன ?" என்று கேட்டார்.

"'ஒருமுறை ஜீவன் முக்தி பெற்றால் அது எப்போதைக்கும் சாசுவதம்தானா? மீட்டும் பந்தப் ப்ராப்தி ஏற்படுமா' என்ற விஷயத்தைக் குறித்து விசாரணை செய்கிறோம்" என்று குப்புசாமி தீக்ஷிதர் சொன்னார்.

"இந்த விஷயத்தில் தங்களுடைய அபிப்ராயமெப்படி ?" என்று ஸோமநாதய்யரை நோக்கி முத்துஸாப்பா தீக்ஷிதர் கேட்டார்.

"எனக்கு வேதாந்த விவகாரங்களில் பழக்கம் போதாது" என்று ஸோமநாதய்யர் சொன்னார்.

திடீரென்று விசாலாக்ஷி அவர்களுக்கு முன்னே தோன்றி, "ஜீவன்முக்தி இவ் வுலகில் ஸாத்ய மென்பதே பொய். நீங்கள் அதை யடைந்திருக்கிறீர்களோ? அடைந்தோர் யாரையேனும் பார்த்திருக்கிறீர்களோ ?" என்று கேட்டாள்.

"ஸ்வாமி ராமகிருஷ்ண பரமஹம்ஸர் இருந்தார்; அவர் பெரிய ஜீவன்முக்தர்" என்று ஸோமநாதய்யர் சொன்னார்.

அன்று ஸாயங்காலம் முத்தம்மாளிடம் அனுமதி பெற்றுக்கொண்டு விசாலாக்ஷி சந்திரிகையுடன் மயிலாப்பூரிலிருந்து புறப்பட்டுப் பட்டணம் தங்கசாலைத் தெருவிலிருந்த மற்றொரு பந்துவின் வீட்டில் போய் இறங்கினாள். இந்த பந்து யாரெனில் விசாலாக்ஷியின் பெரிய தாயார் மகள். அந்த அம்மாள் பெயர் பிச்சு. அவளுடைய புருஷனாகிய சங்கரய்யர் தங்கசாலைத்தெருவில் மிகவும் கீர்த்தியுடன் மிட்டாய்க் கடை வைத்துக் கொண்டிருந்தார். அதில் அவருக்குக் கன லாபம். அவர் கையில் தங்கக் காப்பு; வயிர மோதிரங்கள்; கழுத்தில் பொற்சரளி. அவருக்கு வயது முப்பதுக்கு மேலிராது. மிகவும் அழகான புருஷன். அவருக்குக் குழந்தைகள் இல்லை. அவர் வீட்டுக்கு நம்முடைய விசாலாக்ஷி போய்ச் சேர்ந்தாள்.

அங்கு இவள் போன தினத்துக்கு மறுநாள் காசியிலிருந்து ஒரு பால ஸந்யாஸி வந்திருந்தார். இவர் ஜாதியில் தென்தேசத்துப் பிராமணர். ஆனால் பார்வைக்கு வடதேசத்தார்களைப் போலவே சிவப்பாகவும் புஷ்டியாகவும் உயரமாகவும் ஆஜாநுபாஹுவாகவும் இருப்பார். மிகவும் அழகிய வடிவமுடையவர்.

இவருக்கு நாலைந்து பாஷைகள் நன்றாகத் தெரியும். இவர் ஸங்கீதத்தில் அபார வித்வான். இவர்

தம்மை ஜீவன்முக்தி அடைந்துவிட்டதாகச் சொல்லிக் கொண்டார். எனினும், ஸதா இவருடைய முகத்தில் கவலைக் குறிகள் இருந்துகொண்டே யிருந்தன. மஹா மேதாவி. உலகத்து ஸாதாரண மூடபக்திகளை யெல்லாம் போக்கிவிட்டார். ஆனால், தீய விதியின் வசத்தால் தமக்குத் தாமே மானஸிகமான பல புதிய மூடபக்திகளும் பொய்ப் பிசாசுகளும் உற்பத்தி செய்து கொண்டு ஓயாமல் அவற்றுடன் போராடிக் கொண்டிருந்தார். அதாவது, அவர் இன்னும் ஜீவன்முக்தி அடைந்துவிடவில்லை. அடைய வேண்டிய மார்க்கத்திலிருந்தார். எனினும், தாம் முக்தி அடைந்துவிட்டதாகவே அவர் பிறரிடம் சொல்லியது மட்டுமன்றித் தம்முடைய மனதுக்குள்ளும் அவ்வாறே நிச்சயப்படுத்திக்கொண்டு விட்டார்.

விசாலாக்ஷி தம் வீட்டுக்கு வந்த தினத்திற்கு மூன்று நாட்களின் பின்பு ஒரு மாலையில், நிலவு தோன்றும் பருவத்தில் மிட்டாய்க் கடை சங்கரய்யர் தமது வீட்டு மேடையில் அழகிய நிலா முற்றத்தில் நான்கு நாற்காலிகள் போட்டு நடுவே மேஜையின்மீது பக்ஷணங்கள், தேநீர், வெற்றிலை, பாக்கு, பூக்கொத்துக்கள் முதலியன தயார் செய்து வைத்தார். சங்கரய்யரும், காசியிலிருந்து வந்திருக்கும் பால ஸந்யாஸியும், சங்கரய்யருடைய மனைவி பிச்சுவும், விசாலாக்ஷியும், நால்வரும் அந்த நான்கு நாற்காலிகளின் மீதிருந்து கொண்டு சிற்றுண்டி யுண்ணத் தொடங்கினர். குழந்தை சந்திரிகை கீழே படுத்து உறங்கிவிட்டாள். அவளுக்குக்

காவலாகக் கிழ இடைச்சி, ஒரு வேலைக்காரி, படுத்திருந்தாள்.

நேர்த்தியான நிலவிலே மிட்டாய்க்கடை சங்கரய்யர் வீட்டு மேடையில், அந் நால்வரும் பல வகையான இனிய பண்டங்களை மெல்ல மெல்ல எடுத்துண்டு கொண்டிருக்கையிலே, சங்கரய்யருக்கும் காசியிலிருந்து வந்த பால ஸந்யாஸிக்கும் வேதாந்த விஷயமான ஸம்பாஷணை தொடங்கிற்று. சங்கரய்யர் வேதாந்தக் கிறுக்குடையவர். அதனாலேதான், அவர் இந்த ஸந்யாஸியைக் கண்டு பிடித்தவுடனே பரம குருவாக பாவித்துத் தம் வீட்டுக் கழைத்து வந்து தம்முடனேயே சில தினங்கள் தங்கியிருக்கும்படி கேட்டுக் கொண்டார். ஸந்யாஸியின் பெயர் நித்யானந்தர். அவருக்கு வயது இருபத்தெட்டுக்கு மேலிராது. மஹா ஸுந்தர ரூபி. வடிவெடுத்த மன்மதனைப் போன்றவர். அவரைக் கண்ட மாத்திரத்திலேயே நமது விசாலாக்ஷி அவர்மீது அடங்காத மையல் கொண்டுவிட்டாள். ஸந்யாஸியும் அங்ஙனமே விசாலாக்ஷியின் மீது பெருமையல் பூண்டார். ஸந்யாஸி மையல் கொள்ளுதல் பொருந்துமோ என்று நீங்கள் கேட்பீர்களாயின் அது சரியான கேள்வி யன்று. மன்மதனுடைய பாணங்கள் யாரைத் தான் வெல்லமாட்டா?

'காற்றையும் நீரையும் இலையையும் புஜித்து வந்த விசுவாமித்திரன் முதலிய மஹரிஷிகள் கூட மன்மதனுடைய அம்புகளை எதிர்த்து நிற்க வலிமையற்றோரா

யினர்' என்று பர்க்ருஹரி சொல்லுகிறார். எட்டயா புரம் கடிகை முத்துப் புலவர் தம்முடைய நூல்களுள் ஒன்றில் மன்மதனை எல்லாக் கடவுளரிலும் வலிமை கொண்ட பெரிய கடவுளாகக் கூறுகிறார். பார்வதியை மறந்து தவம் செய்து கொண்டிருந்த சிவபிரான் மீது மன்மதன் அம்புகள் போட்டபோது, அவர் கோபங் கொண்டு மன்மதனை எரித்தாரே யன்றி, அவன் அம்புகளின் திறமையை விழலாக்கி மறுபடி யோகம் பண்ணத் தொடங்கினாரோ? அன்று; அவர் காமனம்பு களுக்குத் தோற்று ஜகன்மாதாவை மணம் புரிந்து கொள்ளத் திருவுளங் கொண்டருளினார். மேலும், மன்மதன் மஹா விஷ்ணுவின் குமாரன், பிரமாவுக்கு ஸஹோதரன். அவனே பிரமா. அவனாலே படைப் புத் தொழில் தோன்றுதல் ப்ரத்யக்ஷமன்றோ?

நித்யானந்த பால ஸன்யாஸி ரிக்வேத முழுதை யும் ஸாயண பாஷ்யத்துடன் படித்தவர். உபநிஷத் துக்களில் முக்கியமான தசோபநிஷத்துக்களை சங்கர பாஷ்யத்துடன் கற்றுணர்ந்தவர். மற்றும் எண்ணற்ற அத்வைத நூல்களிலும் விசிஷ்டாத்வைத நூல்களிலும், தர்க்கம் மீமாம்ஸை யோகம் ஸாங்க்யம் முதலிய சாஸ் திரங்களிலும், புராண இதிஹாஸங்களிலும், காவ்யங் களிலும், நாடகங்களிலும் அபாரமான பயிற்சியுடை மையால், ஹிந்து மதத்துக்கும் ஹிந்து நாகரீகத்துக் கும் தக்க ப்ரதிநிதியாகக் கருதத் தக்கவர்.

தவிரவும், ஹிந்தி, வங்காளி, மஹாராஷ்ட்ரம், தெலுங்கு, தமிழ், இங்கிலீஷ் இந்த ஆறு பாஷைகளி

னும் மிக உயர்ந்த தேர்ச்சி கொண்டவராய், இவற்றில் எழுதப்பட்ட மிகச் சிறந்த சாஸ்த்ரங்களையும் காவ்யங்களையும் நன்கு பயின்று சிறந்த அறிவுத் தெளிவு படைத்தவர். எனவே, இவர் சொல்லும் வேதாந்தம் வெறுமே வாய்ப் பேச்சு மாத்திரமன்று. உள்ளத்தில் பலவித ஆராய்ச்சிகளாலும், உயர்ந்த கேள்விகளாலும், தெளிந்த வாதங்களாலும் நன்றாக அழுந்திக் கிடந்த கொள்கை. இவருக்கு ஜீவன்முக்தி பதம் ஏற்படுவதற்கு ஸ்திரீயில்லாத குறைதான் ஒரு பெருந் தடையாக நின்றது. ஏனெனில், பொருளில்லாவிடினும் கல்வியில்லாவிடினும் ஒருவன் ஜீவன்முக்தி பத மெய்தலாம். ஆனால் காதல் விஷயத்தில் வெற்றி பெறாதவன் முக்தியடைந்து இவ் வுலகில் வாழ்வது மிகவும் சிரமம் என்று தோன்றுகிறது.

பௌத்த மதத்தின் மேம்பாட்டினாலே தான், ஆரம்பத்தில் பெண்ணுடன் கூடிவாழும் வாழ்க்கையை விட்டு முக்தி தேடப் புகும் வழக்கம் இந் நாட்டிலும் உலகத்திலும் ஊர்ஜிதப் பட்டதென்று நினைக்க ஹேது இருக்கிறது. பூர்விக வேதரிஷிகள் எல்லோரும் பத்தினிகளுடன் வாழ்ந்ததாகவே முன்னூல்கள் சொல்லுகின்றன. பௌத்த மதத்திலிருந்துதான் ஹிந்து மதமும் பிற மதங்களும் ஒரே யடியாக உலகத்தைத் துறந்து விடுவதாகிய நித்ய ஸந்யாஸ முறையைக் கைக் கொண்டனவென்று கருதுகிறேன். வேதரிஷிகள் மோக்ஷத்துக்கு ஸாதனமாகச் செய்த வேள்விகளிலெல்லாம் அவர்களுடன் மனைவியருமிருத்தல் அவசிய

மாகக் கருதப்பட்டது. பூர்வ விஷயங்கள் எங்ஙனமாயினும் "இல்லறமல்லது நல்லறமன்று" என்னும் ஔவை வாக்கியத்தையே நான் ப்ரமாணமாகக் கொண்டிருக்கிறேன். காதல் தவறான வழிகளில் செல்லும்போதும் உண்மையினின்றும் நழுவும்போதும் மாத்திரமே, அது இவ்வுலகத்தில் பெருந்துன்பங்களுக்கு ஹேது வாகிறது. உண்மையான காதல் ஜீவன்முக்திக்குப் பெரிய ஸாதனமாகும். 'உண்மையான காதலின் பாதை மிகவும் கரடுமுரடானது' என்று ஷேக்ஸ்பியர் என்ற ஆங்கிலக் கவியரசர் சொல்லுகிறார். அந்தக் கரடுமுரடான பாதையிலே ஒருவன் சிறிது தூரம் மனத் தளர்ச்சியில்லாமலும் பாவ நெறியில் நழுவிச் செல்லாமலும் உண்மையுடன் செல்வானாயின் இன்பத்தைச் சுத்த நிலையில் காணலாம். இவ் வுலக இன்பங்கள் சாசுவதமில்லை யென்றும் க்ஷணத்திலே தோன்றி மறைவன என்றும் சொல்வோர் சித்தத்தில் உறுதியில்லாதவர்கள். இவ்வுலக இன்பங்கள் எண்ணத் தொலையாதன. இவ்வுலகத்தின் காட்சியே முதலாவது பெரும் பேரின்பம். ஸூர்யனும், வெயிலும், பக்ஷிகளும், இனிய தோற்றமுடைய மிருகங்களும், சோலைகளும், மலைகளும், நதிகளும், காடுகளும், அருவிகளும், ஊற்றுக்களும், வான வெளியும், வானமுடியும், சந்திரனும், நிலவும், நக்ஷத்திரங்களும் பார்க்கப் பார்க்கத் தெவிட்டாத ஆனந்தந் தருவன. ஏழை மானிடரே! இவையெல்லாம் சாசுவதமல்லவா? க்ஷணந்தோறும் தோன்றி மறையும் இயல்பு கொண்டனவா? தனித்

தனி மரங்கள் மறையும். ஆனால் உலகத்தில் காடுகளில்லாமல் போகாது. தனிப் பக்ஷிகளும் மிருகங்களும் மறையும். ஆனால் மிருகக் கூட்டமும் பக்ஷி ஜாதியும் எப்போதும் மறையாது. இவற்றின் நிலைமை இங்ஙனமாக, மலை, கடல், வானம், இடைவெளி, ஸூர்யன், சந்திரன், நக்ஷத்திரங்கள் இவை எப்போதும் மாறுவனவல்ல. எப்போதோ யுகாந்தரங்களில் இவையும் மாறக் கூடுமென்று சாஸ்திரிகள் ஊஹத்தாலே சொல்லுகிறார்கள். ஆனால் அந்த ஊஹவாதத்தைப் பற்றி நாம் இப்போது கவனிக்கவேண்டிய அவசியமில்லை. இன்னும் எத்தனையோ கோடி வருஷங்களுக்குப் பிறகு இவை ஒரு வேளை அழியக்கூடுமென்று அந்த சாஸ்த்ரிகள் சொல்லுமிடத்தே, நாம் அவற்றை நித்ய வஸ்துக்களாகப் போற்றுதல் தவறாகாது. இது நிற்க.

இன்னும் உலகத்தில் மனிதனுக்கு நெடுங்கால இன்பங்கள் வேறெத்தனையோ இருக்கின்றன. நேராக உண்டு வந்தால், அதாவது பசியறிந்து உண்பதென்ற விரதங் கொண்டால், மனிதருக்கு உணவின்பம் எப்போதும் தெவிட்டாது. நோயின்றி இருந்தால் ஸ்நானத்தின் இன்பம் என்றும் தெவிட்டாது. இன்னும் நட்பு, கல்வி, ஸங்கீதம் முதலிய கலைகள் முதலிய எக்காலமும் தெவிட்டாத இன்பங்கள் இவ்வுலகத்தில் மனிதருக்கு எண்ணின்றி நிறைந்து கிடக்கின்றன. இப்படியிருக்க, இவ் வுலக இன்பங்கள் க்ஷணத்தில் தோன்றி மறையும் இயல்புடையன என்றும், நீர்மேற் குமிழிக

ளொத்தன என்றும் சொல்வோர் அறிவில்லாதோர், சோம்பேறிகள், நெஞ்சுறுதி யில்லாதோர்.

இன்பமயமான இவ்வுலகத்தில் காணப்படும் எல்லா இன்பங்களைக் காட்டிலும் காதலின்பமே சாலவுஞ் சிறந்தது. அதில் உண்மையும் உறுதியுங் கொண்டு நின்றால், அது எப்போதும் தவறாததோர் இன்ப ஊற்றாகி மனித வாழ்வை அமர வாழ்வுக்கு நிகராகப் புரிந்து விடும். ஒரு மனிதன் ஒரு ஸ்த்ரீயையே, ஒரு ஸ்த்ரீ ஒரு மனிதனையே, மாறுதலின்றிக் காதல் செய்து வருதலாகிய வழக்கம் மனிதருக்குள் ஏற்படுமாயின் அவர்கள் காதலின்பம் எத்துணை சிறந்ததென்பதையும் எத்தகைய பயன்கள் தருவதென்பதையும் தாமே எளிதில் உணர்ந்துகொள்ள வல்லோராவர்.

இங்ஙனம் ஆலோசனை புரிந்து நித்யாநந்தர் என்ற பால ஸந்யாஸி தாம் விசாலாக்ஷி மீது காதல் கொண்டது தவறில்லையென்று தீர்மானித்துக் கொண்டார். ஒரு நாள் மாலையில் நித்யாநந்தரும் விசாலாக்ஷியும் மிட்டாய்க் கடை சங்கரய்யர் வீட்டு மேடையில் தனியே ஸந்தித்தார்கள். அவ்விருவருள் நெடுநேரம் ஸம்பாஷணை நடந்தது. தாம் ஸன்யாஸத்தை விட்டு நீங்கி லௌகிக வாழ்க்கையில் புகுந்து விசாலாக்ஷியை மணம் புரிந்து கொள்ள நிச்சயித்ததற்குள்ள காரணங்களையெல்லாம் அவர் விசாலாக்ஷியிடம் விரிவாக எடுத்துரைத்

தார். அவளும் அக்காரணங்கள் நியாயமானவையே யென்று மிகவும் ஸுலபமாக அங்கீகாரம் செய்து கொண்டாள். கதையை வளர்த்துப் பிரயோஜன மென்ன? அவ்விருவரும் சந்திரிகை ஸஹிதமாக உடனே புறப்பட்டு எழும்பூரில் வீரேசலிங்கப் பந்துலு இருந்த வீட்டுக்குச் சென்றார்கள். அங்கு போகுமுன் னகவே நித்யானந்தர் தம்முடைய காவியுடையைக் கழற்றி எறிந்துவிட்டு வெள்ளை வேஷ்டியும், நேர்த்தி யான சட்டையும், பஞ்சாபித் தலைப்பாகையும் அணிந்து கொண்டார். "இந்த லௌகிக ரூபத்தில் ஸ்வாமிகளைப் பார்த்தால் நேபாளத்து ராஜா மகனைப் போலிருக் கிறது" என்று சங்கரய்யர் சொன்னார். "இன்னும் என்னை ஸ்வாமிகளென்று சொல்லாதேயுங்கள். ஸந்யா ஸக் கோலத்தையும் தொலைத்தேன்; பழைய நித்தியா நந்தனென்ற பெயரைக்கூடத் தொலைத்துவிட்டேன். இனிமேல் எனது பிரிய காந்தையாகிய விசாலாக்ஷி யின் பெயருக்கேற்ப விசுவநாத சர்மா என்று பெயர் வைத்துக்கொள்வேன்" என்றார். எனவே, நானும் இக்கதையில் இனிமேல் இவருக்கு நித்யானந்தர் என்ற பெயரை நீக்கி விசுவநாத சர்மா என்ற பெயரையே வழங்கிவருதல் அவசியமாகிறது.

விசுவநாத சர்மாவை இந்த லௌகிக வேஷத்தில் பார்த்த மாத்திரத்திலே விசாலாக்ஷிக்கு ஏற்கெனவே அவர் மீதேற்பட்டிருந்த கண் தலை தெரியாத காதல் முன்னிலும் ஆயிர மடங்கு அதிகமாய், அவளை வெறி கொண்டவள் போலாக்கிவிட்டது.

இவ்விருவரும் வீரேசலிங்கம் பந்துலு விருந்து இடத்துக்கு வந்து சேர்ந்தவுடனே, விசாலாக்ஷி பந்துலுவிடத்திலும் அவர் மனைவி யிடத்திலும் தன்னை விசுவநாத சர்மா மணம் செய்துகொள்ள இணங்கிய செய்தியையும், அவ்வாறு இணங்கும்படி நேர்ந்த பூர்வ விருத்தாந்தங்களையும் எடுத்து விஸ்தாரமாகச் சொன்னாள். வீரேசலிங்கம் பந்துலுவுக்கு அளவிறந்த மகிழ்ச்சி யுண்டாய்விட்டது. ஏற்கெனவே இவ்விஷயத்தில் அவர் பல இடங்களில் முயற்சிசெய்து பார்த்து வெற்றிபெற வழியில்லாமல் திகைத்துக்கொண்டிருந்தார். இப்போது அவருடைய முயற்சி யில்லாமலே தமது விருப்பம் நிறைவேறிவிட்டமை கண்டு அவருக்கு அத்தனை பூரிப்புண்டாயிற்று.

"எல்லாம் தெய்வச் செயல். நாமொன்று நினைக்க தெய்வ மொன்று செய்கிறது" என்று சொல்லி அவர் மனமாரக் கடவுளைப் போற்றித் தொழுதார். பிறகு விசுவநாத சர்மாவையும் விசாலாக்ஷியையும் பிரம ஸமாஜத்தில் சேர்த்தார். கோபாலய்யங்காருடைய விவாகம் நடந்து இரண்டு வாரத்துக்குள் மறுபடி சென்னை பிரம ஸமாஜ ஆலயத்திலேயே, அந்த ஸமாஜ விதிகளின்படி விசாலாக்ஷிக்கும் விசுவநாத சர்மாவுக்கும் விவாகம் நடந்தேறிற்று. விவாகம் நடந்த ஒரு வாரத்துக்குள் மிட்டாய்க்கடை சங்கரய்யரின் முயற்சியாலும் வேறு சில நண்பர்களின் முயற்சியாலும் நமது விசுவநாத சர்மாவுக்கு ஒரு உத்யோகம் ஏற்பட்டது. தங்கசாலைத் தெருவிலே மூன்று, நான்கு குஜராத்தி லக்ஷப் பிரபுக்

களின் பிள்ளைகளுக்கு ஹிந்தி, ஸம்ஸ்க்ருதம், இங்கிலீஷ் மூன்றும் இராப்பாடம் சொல்லிவைக்க வேண்டியது. இதற்காக அவருக்கு அறுபது ரூபாய் மாதந்தோறும் சம்பளம் கிடைத்தது. சங்கரய்யர் வீட்டுக்கு ஸமீபத்தில் இரண்டு மனைகளுக்கப்பால் ஒரு வீடு காலியாக இருந்தது. சிறிய வீடு. கீழே இரண்டு மூன்று அறைகள். உயர்ந்த மாடி. அந்த வீட்டுக்குப் பின் அழகான தோட்டமிருந்தது. அதில் ஒரு சிறிய கூரை பங்களா புதிதாகத் தயார் பண்ணி, அதில் நாற்காலி, மேஜை, புஸ்தகங்கள், பிள்ளைகள் வந்தால் உட்காருவதற்கு நாற்காற் பலகைகள் முதலியன வாங்கி வைப்பதற்குரிய செலவெல்லாம் சங்கரய்யர் செய்தார். அந்த வீட்டில் புதிதாக விவாகமான தம்பதிகளை சங்கரய்யர் குடியேற்றினார். இவருக்கு விசுவநாத சர்மாவிடம் முன்னைக் காட்டிலும் நூறு பங்கு அதிக பக்தி ஏற்பட்டது. சில மாதங்கள் கழிந்த பிறகு, மேற்கூறிய குஜராத்திப் பிள்ளைகளுக்கு பாடம் சொல்லிக் கொடுக்கும் வரும்படி தவிரவும் விசுவநாத சர்மாவுக்கு வேறு வரும்படி கிடைக்கத் தொடங்கிற்று. ஆரம்பத்தில் அவர் சென்னையில் நடைபெற்று வரும் இங்கிலீஷ், தமிழ்ப் பத்திரிகைகளுக்கு வியாஸங்களும், கதையங்கங்களும் எழுதி சாஸ்த்ர விஷயங்களைப் போலவே லௌகிக விஷயங்களிலும் பயிற்சியால் உயர்ந்த ஞான மேற்படுத்திக்கொண்டார். எழுதும் திறமையிலோ, இங்கிலீஷிலும், தமிழிலும் அவருக்கு ஸமமான தொழிலாளி இந்த தேசத்திலேயே குறைவென்று கூறலாம். அத

ளுல் பத்திராதிபர்கள் அவரெழுதும் வ்யாஸங்களை மிக வும் ஆவலுடன் ஏற்றுக்கொண்டு தக்க சம்பளம் கொடுக்கத் தொடங்கினர்கள். இங்கு கொஞ்சம் கை தேறியவுடனே, அவர் தக்க மனிதர்களுடைய சிபார் சால் பம்பாய் கல்கத்தா முதலிய வெளி நகரங்களில் ப்ரசுரமாகும் உள்நாட்டுப் பத்திரிகைகளுக்கும், இங்கி லாந்து, அமெரிக்காவிலுள்ள பத்திரிகைகளுக்கும் விஷயதானம் செய்யும் பதவி பெற்றார். இதிலெல்லாம் அவருக்கு மாஸந்தோறும் ஐந்நூறு ரூபாய்க்குக் குறையாத வரும்படி வரத் தொடங்கிற்று. அவர் தீராத உழைப்பாளி யாய்விட்டார்.

அவருடைய முகத்தில் முன்னிருந்த கவலைக் குறிகளெல்லாம் நீங்கிப்போய் விட்டன. எப்போதும் அவர் முகத்தில் ஸந்தோஷமும் திருப்தியும் நிலவ லாயின. விசாலாக்ஷியோ முன்னிருந்த அழகைக் காட் டிலும் மூந்நூறு பங்கு அதிக அழகு படைத்து விட்டாள். அவர்கள் வீட்டிற்கு ஒரு பசு வாங்கி ஞர்கள். அந்தப் பசுவைக் கறக்கவும், குழந்தைக்குப் பொழுது போக்கவும், மற்றபடி வீடு வாயில் பெருக்கு தல், பாத்திரந் தேய்த்தல் முதலிய தொழில்கள் செய்யவும், விசாலாக்ஷி மிகவும் புத்தியும் அனுபவமும் உண்மையும் உழைப்புமுடைய வேளாளக் கிழவி யொருத்தியை நியமனம் செய்து, அவளுக்கு வீட்டி லேயே போஜனமும் மாஸம் எட்டு ரூபாய் சம்பள மும் ஏற்படுத்தினள். இவர்களுடைய வீட்டுச் செல வெல்லாம் நூறு ரூபாய்க்கு மேலாகாது. எனவே,

மாஸந்தோறும் நானூறு ரூபாய்க்குக் குறையாமல் விசுவநாதசர்மா ஒரு பெரிய நாமமுடைய குஜராத்தி வியாபாரியிடம் வட்டிக்குக் கொடுத்துவரத் தொடங்கினார். சிறிது காலத்துக்குப்பின் விசுவநாத சர்மா தமக்குப் பத்திரிகை தொழிலிலேயே ஏராளமான திரவியம் கிடைப்பதினின்றும், பிள்ளைகளுக்குப் பாடங் கற்றுக் கொடுப்பதாகிய சிரமமான தொழிலை விட்டுவிட்டார். காலையில் எழுந்து கைகால் சுத்தி செய்துகொண்டவுடனே தினந்தோறும் அவர் தங்கசாலைத் தெருவினின்றும் புறப்பட்டுச் சென்னை ஹைகோர்ட்டுக்கு எதிரே கடற்கரையில் வந்து நெடுநேரம் உலாவிவிட்டு சுமார் ஒன்பது மணிக்கு வீட்டுக்குத் திரும்புவார். வந்தவுடனே ஸ்நானம் பண்ணிவிட்டு போஜனம் செய்வார். பதினொரு மணி முதல் மாலை மூன்று மணிவரை தமது எழுத்துவேலை நடத்துவார். அப்பால் இடைப்பகல் சிற்றுண்டி யுண்டு தேயிலை நீர் குடிப்பார். அப்பால் ஒரு மணி நேரம் படிப்பிலும், மறுநாள் எழுதுவதற்கு வேண்டிய ஆலோசனைகளிலும் செலவிடுவார். அப்பால், தம்முடைய சிறு குதிரை வண்டியில் விசாலாக்ஷியையும் சந்திரிகையையும் ஏற்றிக்கொண்டு கடலோரத்தில் ஸவாரி விடுவார். இரவு ஏழுமணி நேரத்துக்கு வீட்டுக்குத் திரும்புவார்கள். எட்டு மணி நேரமாகும்போது இராத்திரி போஜனம் தொடங்கும். அப்பால் விசாலாக்ஷியும் சர்மாவும் பேச்சிலும் விளையாட்டிலும் மன்மதக் கேளிகளிலும் பொழுது கழிப்பார்கள். இரவு பன்னிரண்டு மணிக்கு

முன்பு அவர்கள் நித்திரை செய்யப் போவதே கிடையாது. என்னதான் பேசுவார்களோ, ஏதுதான் பேசுவார்களோ கடவுளுக்குத் தான் தெரியும். ஒவ்வோரிரவும் இவ்விருவரும் பேசுவதும் சிரிப்பதும் பக்கத்து வீடுகளிலிருப்போருக்கெல்லாம் பெரும்பாலும் தூக்கம் வராதபடி செய்யும். ஒருவர் பேச்சு மற்றொருவருக்குத் தேனும் திரட்டுப் பாகாய்க் கேட்கக் கேட்கத் தெவிட்டாமலிருக்கும். சில இரவுகளில் விசாலாக்ஷி ஹார்மோனியம் சுருதி போட்டுக்கொண்டு பாடுவாள். இவள் பாட்டின் அற்புதத்தில் மயங்கி வெறிகொண்டு விசுவநாத சர்மா தன்னை மறந்து எழுந்து குதிக்கத் தொடங்கிவிடுவார். சில ஸமயங்களில் இருவரும் கை கோத்துக்கொண்டு நாட்டியம் புரிவார்கள். வேலைக்கா ரக் கிழவியும் குழந்தையும் ஓரறைக்குள் படுத்துக் கொண்டு தூங்கிப்போய் விடுவார்கள். தோட்டத்திலிருந்த சிங்காரப் பரணில் இந்த தம்பதிகளின் களிகள் நடைபெறும்.

இவ்விருவரும் ஒருவர்க்கொருவர் படைத்த காதல் மானுஷிக மன்று, தெய்விகம். அது கலியுகத்துக் காதலன்று; கிருதயுகத்துக் காதல். ஒரே பெண்ணிடம் மாறாத காதல் செலுத்துவதாகிய ஏகபத்னி விரதத்தில் ஸ்ரீராமபிரான் புகழ்பெற்றவன். ஆனால் அவனும் பத்தினியிடம் ஸம்சயங்கொண்டு இலங்கையிலே அவளைத் தீப் புகச் செய்தான். பின்பு உலகப் பழிக்கு அஞ்சி, அவளைக் காட்டுக்குத் துரத்தினான். இவ்விதமான களங்கங்கள் கூட இல்லாதபடி நமது விசுவநாத

சர்மா ஸாக்ஷாத் வைகுண்ட நாராயணனே ஸ்ரீ தேவியிடம் செலுத்துவது போன்ற பரம ப்ரேமை செலுத்தினார். சிவன் பார்வதி தேவியிடஞ் செலுத்தும் பக்தி நமது விசுவநாத சர்மாவால் விசாலாக்ஷியிடம் செலுத்தப்பட்டது. அவளும், இப்படிப் பரம ஞானியாகிய கணவன் தன்னிடம் தேவதா விசுவாஸஞ் செலுத்துவது கண்டு பூரிப்படைந்து, தான் அவரை ஸாக்ஷாத் பகவானாகவே கருதி மஹத்தான பக்தி செலுத்தி வந்தாள். இப்படியிருக்கையிலே விவாகம் நடந்து ஒன்றரை வருஷமாவதற்குள் விசுவநாத சர்மாவுக்கு வைத்தியம் பிடித்துவிட்டது. அவர் மிகச் சிறந்த ஞானியாயினும் யோகாப்யாஸத்தால் முக்தி யடைவது ஸுலபமென்று கருதி மனதைப் பலவகைகளில் இடையறாமல் அடக்கி அடக்கி பலாத்காரஞ் செய்துகொண்டு வந்ததினின்றும், புத்தி கலங்கிவிட்டது. எழுத்து வேலை சரியாக நடத்த முடியவில்லை. வீட்டிலேயே ஒரு நாட்டு வைத்தியர் வந்து பார்த்துச் சிகிச்சை செய்துகொண்டிருந்தார். மந்திரவாதிகளை அழைத்துப் பார்க்கலாம் என்று சங்கரய்யர் சொன்னதற்கு விசாலாக்ஷி அது அவசியமில்லை யென்று சொல்லிவிட்டாள்.

விசாலாக்ஷியின் கதி மிகவும் பரிதாபகரமாயிற்று. திடீரென்று ஸ்வர்க்கலோகத்தில் இந்திரபதவியினின்று தள்ளுண்டு மண்மீது பாம்பாகி விழுந்த நஹுஷன் நிலைமையை இவள் ஸ்திதி ஒத்ததாயிற்று.

காதலால் மோக்ஷமே பெறலாமென்று விசுவநாத சர்மா சொல்லியதை இவள் மனம் பூர்த்தியாக நம்பித்

தனது அற்புத ஸௌந்தர்யமும் ஞானத் தெளிவு முடைய அக் கணவனை ஒருங்கே மன்மதனாகவும் விஷ்ணுவாகவும் சிவனாகவும் கருதிப் போற்றிவந்து அவனன்பினால் ஆனந்தபரவசமெய்தி யிருந்தாள். அவனுக்கு இந்தக் கொடிய நோய் நேர்ந்ததைக் கண்டு துன்பக் கடலில் அமிழ்ந்திப் போய்விட்டாள். இடையிடையே விசுவநாத சர்மாவுக்கு புத்தி தெளியும் நேரங்களும் வருவதுண்டு. அப்போது, அவர் விசாலாக்ஷியை அழைத்துத் தன் அருகில் இருத்திக் கொண்டு:—"கண்ணே, நீ எதற்கும், எதற்கும், எதற்கும் கவலைப்படாதே. கவலைப்படாதிருத்தலே முக்தி. கவலைப்படாதிருந்தால் இவ்வுலகத்தில் எந்த நோயும் வாராது. எவ்வித ஆபத்தும் நேராது. தவறி எவ்வித நோய், அல்லது எவ்வித ஆபத்து, நேர்ந்த போதிலும் ஒருவன் அவற்றுக்குக் கவலை யுறுவதை விட்டு விடுவானாயின், அவை தாமே விலகிப் போய்விடும். கவலையை வென்றால் மரணத்தை வெல்லலாம். பயமும், துயரமும், கவலையும் இல்லாதிருந்தால் இவ்வுலகத்தில் எக்காலமும் சாகாமல் வாழலாம். நான் என்னை மீறிச் சில பயங்களில் ஆழ்ந்து விட்டேன். அதனாலேதான் எனக்கு இந்த நோய் வந்திருக்கிறது. இது இன்னும் சிறிது காலத்துக்குள் நீங்கிப் போய்விடும். நமக்கோ பணத்தைப்பற்றிய விசாரமில்லை. நான் மூன்று வருஷம் எழுதாமலும், ஒரு காசுகூட ஸம்பாதிக்காமலும் இருந்த போதிலும் குஜராத்தியானிடம் போட்டிருக்கும் பணத்தை வாங்கி ஸம்பிரமமாகச் சாப்பிடலாம். என்னைப்பற்றிய விசாரங்களுக்கும் உன் மனதில் இடங் கொடாதே.

இடுக்கண் வந்துற்றகாலை, எரிகின்ற விளக்குப்போல
நடுக்க மொன்றானுமின்றி நகுக ; தாம் நக்க போதவ்
விடுக்கணையரியு மெஃகாம், இருந்தழு தியாவ ருய்ந்தார்?

என்று சீவகசிந்தாமணியில் திருத்தக்க தேவர் பாடி யிருக்கிறார். அதாவது, 'துன்பம் நேரும் போது நாம் சிறிதேனும் கலங்காமல் அதை நோக்கி நகைக்க வேண்டும். அங்ஙனம் நகைப்போமாயின் நமது நகைப்பே அத்துன்பத்தை வெட்டுதற்குரிய வாளாய்விடும். அவ்வாறின்றி வீணே உட்கார்ந்து துயரப்படுவதனால் மனிதருக்கு உய்வு நேராது (நாசமே எய்தும்)'. இந்த உபதேசத்தை நீ ஒருபோதும் மறக்காதே. என் கண்ணே, என் உயிரே, விசாலாக்ஷி, நீ என்ன நேர்ந்தாலும் மனதைத் தளரவிடாதே. நீ எக்காலமும் எவ்வித நோயுங் கவலையுமின்றி வாழவேண்டு மென்பதே என் முக்கிய விருப்பம். உன் மனம் நோக நான் பார்த்து ஸஹிக்க மாட்டேன்" என்று பலபல சொல்லி மனைவியை ஸமாதானப் படுத்த முயல்வார். ஆனால், இவர் இங்ஙனம் பேசிக்கொண்டிருக்கையிலேயே விசாலாக்ஷியின் கண்களில் ஜலம் தாரை தாரையாகக் கொட்டத் தொடங்கிவிடும். அவள் கோவென்றழுது விம்முவாள். இதைக் கேட்டு விசுவநாத சர்மாவும் ஓலமிட்டழத் தொடங்குவார். இப்படி இவர்களிருவரும் கூடிப் பெருங்குரலிட்டழுது கொண்டிருக்கையில் ஒரு ஸமயம் வைத்தியர் வந்துவிட்டார். இந்தக் கோலத்தைப் பார்த்து வைத்தியர் விசாலாக்ஷியை காண்பதினின்று நேரும் துக்கத்தால் சர்மாவின் நோய் மிகுதிப்படு

மென்றும், ஆதலால் இனிமேல் விசாலாக்ஷி தன் கணவனை அடிக்கடி தனியாக ஸந்திக்கக் கூடாதென்றும், அப்படியே ஸந்திக்க போதிலும் சில நிமிஷங்களுக்கு மேலே அவருடன் தங்கி யிருக்கக்கூடாதென்றும் எப்போதுமே அவர் தன்னிடம் அதிகமாகப் பேச இடங் கொடுக்கக் கூடாதென்றும் அவளிடம் தெரிவித்தார். அவளும் எவ்விதத்தாலும் தன்னால் தன் கணவனுக்கு அதிகக் கஷ்டம் நேரலாகாதென்ற நோக்கத்துடன், ஆஹாரம் போடும் நேரங்களைத் தவிர மற்ற நேரங்களில், சர்மாவை அடிக்கடி பார்க்காமலும், அவருடன் அதிகமாகப் பேசாமலும் ஒதுங்கியே காலங் கழித்து வந்தாள். ஆனால் இதினின்று விசுவநாத சர்மாவின் துயரமும் மனக்கலக்கமும் அதிகப் பட்டனவே யன்றிக் குறைவு படவில்லை. தம்மை விசாலாக்ஷி புறக் கணிக்கிறளென்று சர்மா எண்ணவில்லை. அவர் அப்படி எண்ணக் கூடியவருமல்லர். ஆனால் தனது தேக நிலையைக் கருதி அவள் மிகவும் மனத்தளர்ச்சியும் துக்கமுமெய்தி அதுபற்றியே கோட்டத்துப் பங்களாவுக்கு அவள் அடிக்கடி வந்து தன்னைப் பார்க்காமலும், அதிகமாகத் தன்னிடம் வார்த்தையாடாமலு மிருக்கிறள் என்று அவர் நினைத்துக் கொண்டார்.

இங்கு வியாதிகளின் ஸம்பந்தமாக ஒரு சிறு கதை சொல்லுகிறேன். வாந்தி பேதிப் பிசாசு முன்னொரு காலத்தில் இந்தியாவிலிருந்து புறப்பட்டு அரபியாவிலுள்ள மக்க நகரத்துக்குப் போய்க்கொண்டிருந்ததாம். போகும் வழியில் பாரஸீகத்தில் பெரிய தபஸ்வி

யும் ஞானியுமாகிய ஒரு மஹமதியப் பக்கிரி அந்தப் பேயைக் கண்டு "எங்கே போகிறாய்?" என்று கேட்டார். அது கேட்டு வாந்தி பேதி சொல்லுகிறது:— "மக்க நகரத்தில் இப்போது வருஷத் திருவிழா தொடங்கியிருக்கிறது. நாலு திசைகளினின்றும் எண்ணற்ற ஜனங்கள் திருவிழாவுக்காக அங்கு வந்து கூடியிருப்பார்கள். அவர்களை வேட்டையாடும் பொருட்டு மக்கத்துக்குப் போகிறேன்" என்றது.

அது கேட்டு அந்த ஸந்யாஸி:—"சிச்சீ! மூர்க்கப் பிசாசே! மக்கத்தில் அல்லாவைத் தொழும் பொருட்டு நல்ல நல்ல பக்தர்கள் வந்து திரண்டிருப்பார்கள். அவர்களை நீ போய்க் கொல்ல நான் இடங் கொடுக்க மாட்டேன்" என்றார்.

அதற்கு வாந்திபேதிப் பேய் சொல்லுகிறது:— "ஸ்வாமியாரே, என்னையும் அல்லா தான் படைத்து மனித உயிர்களை வாரிக்கொண்டு போகும் தொழிலுக்கு நியமனம் செய்திருக்கிறார். உலகத்தில் நடக்கும் எல்லாக் காரியங்களும் அல்லாவின் செயல்களே யன்றி மற்றில்லை. அவனின்றி யோர் அணுவுமசையாது. ஆதலால் எனது போக்கைத் தடுக்க உம்மால் முடியாது. முடியுமெனினும் நீர் அதனைச் செய்தல் நியாயமன்று. மேலும் மக்கத்துக்கு வந்திருப்போர் அத்தனை பேருமே புண்யாத்மாக்களென்றும் தர்மிஷ்டர்களென்றும் உண்மையான பக்தர்களென்றும் நினைத்து விடக் கூடாது. எத்தனையோ பாவிகளும், அதர்மிஷ்டரும், கொரான் விதிகளை மீறி நடப்போரும் அங்கு வந்திருப்

பார்கள் என்பதில் ஐயமில்லை. தவிரவும் புண்யாத்மாக்களுக்கு இவ்வுலகில் சாவு கிடையாதென்று அல்லா விதிக்கவில்லை. பாவிகள் மாத்திரமேயன்றி புண்யவான்களும் சாகத் தான் செய்கிறார்கள். வேறு நோய்களால் நெடுங்காலம் வருந்தி வருந்தித் துடித்துத் துடித்துச் சாவதைக் காட்டிலும் என்றால் துரிதமான மரண மெய்துதல் மனிதருக்கு நன்றே யன்றித் தீங்காகாது. ஆதலால் எப்படி யோசித்த போதிலும், நான் செல்வதை நீர் தடுக்க முயலுதல் பொருந்தாது. எனினும், மறுகிய உம்முடைய மனதுக்குச் சற்றே திருப்தி விளைவிக்கத் தக்கதாகிய வார்த்தையொன்று சொல்லுகிறேன். அதாவது, நீர் அங்கு இத்தனை பேரைத்தான் கொல்லலாமென்று தொகை குறிப்பிட்டுக் கட்டளையிடும். அந்தத் தொகைக்கு மேலே நான் ஒற்றை உயிரைக்கூடக் கொல்வதில்லை யென்று பிரதிக்கினை செய்து கொடுக்கிறேன்'' என்றது.

இங்ஙனம் வாந்தி பேதிப் பேய் சொல்லியதைக் கேட்ட முனிவர்—"சரி; போ. அங்கு அநேக லக்ஷக் கணக்கான ஜனங்கள் திரண்டிருப்பார்கள். அவர்களில் நீ ஒரே ஓராயிரம் பேரைத் தான் கொல்லலாம். அதற்கு மேல் ஓருயிரைக்கூடத் தீண்டலாகாது. ஜாக்ரதை! போய் வா '' என்றார்.

நல்லதென்று சொல்லிப் பேய் பக்கிரியிடம் விடைபெற்றுக்கொண்டு மக்கத்துக்குப் போயிற்று. அப்பால் சில தினங்கள் கழிந்தபின், அந்தத் திருவிழாவுக்கு வந்தவர்களில் லக்ஷம்பேர் வாந்தி பேதியால் இறந்து

போயினரென்ற செய்தி பக்கிரியின் செவிக் கெட்டிற்று. அவர் தம்மை வாந்தி பேதிப் பேய் வஞ்சித்து விட்டதாகக் கருதி மிகவும் கோபத்துடனும் மனவருத்தத்துடனு மிருந்தார். மறுநாள் வாந்தி பேதிப் பேய் அந்த வழியாகவே மக்கத்தினின்றும் இந்தியாவுக்கு மீள யாத்திரை செய்து கொண்டிருக்கையில் அந்தப் பக்கிரியைக் கண்டு வணங்கிற்று. பக்கிரி பெருஞ் சினத்துடன் அப் பேயை நோக்கி—"துஷ்டப் பேயே, பொய் சொல்லிய நாயே, என்னிடம் ஆயிரம் பேருக்கு மேலே கொல்வதில்லை யென்று வாக்குறுதி செய்து கொடுத்துவிட்டு அங்கு, மக்கத்திலே போய், லக்ஷம் ஜனங்களை அழித்து விட்டனையாமே? உனக்கு என்ன தண்டனை விதிக்கலாம்?" என்றார்.

இதைக் கேட்டு வாந்தி பேதிப் பேய் கலகலவென்று சிரித்தது. அது சொல்லுகிறது—"கேளீர், முனிசிரேஷ்டரே, நான் உமக்குக் கொடுத்த வாக்குறுதி தவறாதபடியே ஆயிரம் பேருக்குமேல் ஓருயிரைக்கூடத் தீண்டவில்லை. ஆயிரம் பேரே என்னால் மாண்டவர். மற்றவர்கள் தமக்குத் தாமே பயத்தால் வாந்தியும் கழிச்சலும் வருவித்துக்கொண்டு மாய்ந்தனர். அதற்கு நான் என்ன செய்வேன்? என் மீது பிழை சொல்லுதல் தகுமோ?" என்றது.

அப்போது முனிவர் பெருமூச்சு விட்டு—"ஆஹா! ஏழை மனித ஜாதியே, பயத்தாலும், ஸம்சயத்தாலும் உன்னை நீயே ஓயாமல் கொலை செய்துகொண்டிருக்கிறாயே! உன்னுடைய இந்த மஹா மூடத்தன்மை

கொண்ட மதியையும், இம் மதியை உன்னிடத்தே தூண்டிவிடும் மஹா பயங்கரமான விதியையும் நினைக்கும்போது என் நெஞ்சம் கலங்குகிறதே! நான் என் செய்வேன், நான் என் செய்வேன்! நான் என்ன செய்வேன்! சுப்! நம்மால் என்ன செய்ய முடியும்? அல்லா ஹோ அக்பர். அல்லா மஹான். அவருடைய திருவுளப்படி எல்லாம் நடைபெறுகிறது. அவர் திருவடிகள் வெல்லுக" என்று சொல்லி முழங்கால் படியிட்டு வானத்தை நோக்கியவராய் அல்லாவைக் கருதி தியானம் செய்யத் தொடங்கினர். பேயும் அவரிடம் விடை பெற்றுக்கொண்டு போய் விட்டது.

இந்த மாதிரியாக நான் ஒரு கதை வாசித்திருக்கிறேன். நோய்க்கு முக்யமான காரணம் ஜீவர்களின் மனதில் தோன்றும் பயம். கவலை, கோபம், ஸம்சயம், பொறாமை, வெறுப்பு, அதிருப்தி முதலிய விஷ குணங்களேயாமென்பது இந்தக் கதையின் பொருள். இதை நான் அங்கீகரிக்கிறேன். உள்ளத்திலே தோன்றும் அச்சம் முதலியனவே நோய்களைப் பிறப்பிக்கின்றன என்பதில் ஸந்தேகமில்லை. ஆனால் அங்ஙனம் பிறக்கும் நோய்களை நன்கு போஷணை செய்து வளர்ப்பதும், அதினின்றும் மரணத்தின் வரவை மிகவும் எளிதாக்கித் தருவதுமாகிய தொழில்கள் பெரும்பாலும் வைத்யர்களாலேயே செய்யப் படுகின்றன என்று தோன்றுகிறது. ஆயிரம் பேரைக் கொன்றவன் அரை வைத்தியன் என்ற பழமொழி முற்றிலும் உண்மை யெனவே நான் நினைக்கிறேன்.

இதினின்றும் வைத்ய சாஸ்த்ரம் பொய்யென்றுவது, வைத்யர்களெல்லாருமே தமது சாஸ்திரத்தை நன்கு கற்றுணராத போலி வேஷதாரிகளென்றுவது, மனமறிந்த அயோக்யர்க ளென்றுவது, வேண்டுமென்று மனிதனைக் கொல்லுகிறார்க ளென்றுவது நான் சொல்ல விரும்புவதாக யாரும் நினைத்து விடலாகாது.

வைத்ய சாஸ்த்ரத்தில் எத்தனையோ கண்கண்ட பயன்களிருப்பதை நான் அறிவேன். வைத்யர்களிலே பலர் தமது சாஸ்த்ரத்தில் உண்மையான உயர்ந்த தேர்ச்சியுடையோராகவும் ஜீவகாருண்யத்தில் சிறந்த மஹான்களாகவும் இருப்பதை நான் அறிவேன். ஆனலும், வியாதிகள் பல்குவதற்கும், மரணம் இங்ஙனம் மனிதரைப் பூச்சிகளிலுங் கடையாக வாரிக்கொண்டு போவதற்கும் உலகத்து வைத்தியர்கள் பெரும்பாலும் ஹேதுவாகிறார்களென்ற என் கொள்கை தவறுனதன்று. ஒன்றுக்கொன்று விரோதமாகத் தோன்றும் இவ்விரண்டு கொள்கைகளும் எங்ஙனம் ஏககாலத்தில் உண்மையாகுமென்பதைத் தெரிவிக்கிறேன்.

ஆனல், ஏற்கனவே இந்த அத்யாயம் மிக நீண்டு போய்விட்டது. நம்முடைய கதையின் போக்கோ சிறிது நேரம் விசாலாக்ஷியையும் விசுவநாத சர்மாவையும் விட்டுப் பிரிந்து வேறு சிலருடைய விருத்தாந்தங்களைக் கூறும்படி வற்புறுத்துகின்றது. ஆதலால் டாக்டர் வைத்தியர் ஸம்பந்தமான விவகாரத்தைப் பின் ஓரத்யாயத்தில் விளக்கிக் காட்டுகிறேன்.

# எட்டாம் அத்யாயம்.



## ஸோமநாதய்யர் ஞானம் பெற்ற வரலாறு.

1907-ஆம் வருஷம்—அதாவது விசாலாக்ஷியின் விவாகம் நடந்த இரண்டு வருஷங்களுக்கப்பால்—மே மாஸத்தில் ஒரு நாள் மாலை நல்ல நிலவடித்துக்கொண்டிருக்கையில் மயிலாப்பூர் லஸ் சர்ச் வீதியில் ஹைகோர்ட் வக்கீல் ஸோமநாதய்யர் தம் வீட்டு மேடையில் நிலா முற்றத்திலே இரண்டு நாற்காலிகள் போட்டுத் தாமும் தம்முடைய மனைவி முத்தம்மாளும் உட்கார்ந்து கொண்டு, அவளுடன் ஸம்பாஷணை செய்து கொண்டிருந்தார்.

"காபி போட்டுக் கொண்டு வரலாமா?" என்று முத்தம்மா கேட்டாள்.

"எனக்கு வேண்டியதில்லை. பகலிலே உண்ட ஆஹாரம் இன்னும் என் வயிற்றில் ஜீரணமாகாமல் அப்படியே கிடக்கிறது! இன்றிரவு சாப்பிடலாமா, உபவாஸம் போட்டு விடலாமா என்று யோசித்துக் கொண்டிருக்கிறேன். இப்படியிருக்கையில் காபி குடிப்பது உடம்புக்கு மிகவும் கெடுதியென்று நினைக்கிறேன். உனக்கு வேண்டுமானால் காபி போட்டுக் கொண்டு வந்து குடித்துக் கொள்" என்றார் ஸோமநாதய்யர்.

"எப்போது பார்த்தாலும் ஏதாவது நோய் சொல்லிக் கொண்டே யிருக்கிறீர்கள். அதுவும் என்னைக்-

கண்டால் போதும்; உடனே நீங்கள் நோயழுகை அழுவதற்கு ராஜா. 'இன்றைக்கு என் உடம்பு ஸௌக்ய மாக இருக்கிறது. ஒரு வியாதியுமில்லை' என்று உங் கள் வாயினாலே சொல்ல ஒரு தரங்கூடக் கேட்டதில்லை. என் உயிர் உள்ளவரை அந்த நல்ல வார்த்தையை நான் ஒருதரமேனும் காது குளிரக் கேட்கப் போகிறேனோ, அல்லது கேட்காமலே பிராணனை விடப் போகிறேனோ, தெரியாது. கை உளைச்சல், கால் உளைச்சல், அங்கு வீக்கம், இங்கு குடைச்சல், வயிற்றுவலி, தலைவலி, அஜீர்ணம், அஜீர்ணம், அஜீர்ணம்—எப்போதும் இதே அழுகை கேட்டுக் கேட்டு எனக்குக் காது புளித்துப் போய்விட்டது. இனிமேல் ஒரு வார்த்தை சொல்லு கிறேன், அதை ஜாக்கிரதையாக ஒரு பக்கத்தில் வைத் துக் கொண்டிருங்கள். அதாவது, உங்கள் உடம்பு ஸுகமாகவும் ஆரோக்யமாகவும் இருந்தால் என்னிடம் சொல்லுங்கள். வியாதி யிருந்தால் எனக்குச் சொல்ல வேண்டா. இந்த ஒரு தயவு எனக்கு நீங்கள் அவசிய மாகச் செய்யவேண்டும்" என்றாள்.

ஸோமநாதய்யருக்குக் கோபம் பளிச்சென்று வந்து விட்டது. அவருக்கு முற்கோபம் அதிகம். மனைவியை வாய்க்கு வந்தபடி யெல்லாம் திட்டத் தொடங்கிவிட்டார். "நன்றி கெட்ட நாய், முண்டாய், உன் பொருட்டாக நான் படும் பாடு 'பஞ்சு தான் படுமோ? சொல்லத்தான் படுமோ, எண்ணத்தான் படுமோ?' நாய் போலே உழைக்கிறேன். கும்பகோ ணத்தில் நல்ல வரும்படி வந்து கொண்டிருந்தது. இங்கு

வந்தது முதல், வரவு நாளுக்கு நாள் குறைவு பட்டுக் கொண்டே யிருக்கிறது. எனவே, உனக்கும் உன் குழந்தைக்கும் சோறு, துணி, மருந்துகள் ஸம்பாதித்துக் கொடுப்பதில் எனக்கு நேரும் கஷ்டங்களும் மன வருத்தங்களும் கணக்கில் அடங்க மாட்டா. நான் முன்பு சேர்த்து வைத்த சொத்தை யெல்லாம் விழுங்கி அதற்கு மேல் பதினாயிரம் ரூபாய் வரை கடன் ஏறிப் போயிருக்கிறது. எத்தனையோ பொய்கள் சொல்ல வேண்டியிருக்கிறது. ஏமாற்றவேண்டி யிருக்கிறது. நீதிஸ்தலத்திலே போய் மனமறிந்த பொய்களைச் சொல்வதே நமக்குப் பிழைப்பாய்விட்டது. இந்த வக்கீல் தொழிலும் சரி, வேசைத் தொழிலும் சரி. தர்மத்தைக் கெடுத்து இஹத்தையும் பரத்தையும் நாசம் பண்ணிக்கொண்டு உன் பொருட்டாகப் பாடுபடுகிறேன். மேலும் ஒரு வழக்கு ஜயித்தால் பத்து வழக்குக்கள் தோற்றுப் போகின்றன. அதில் என் மனதுக் கேற்படும் துக்கத்துக்கும் அவமானத்துக்கும் கணக்கில்லை. தவிரவும் இத்தொழிலோ கோர்ட்டிலேனும் கக்ஷிக்காரரிடமேனும் ஓயாமல் தொண்டைத் தண்ணீரை வற்றடிக்குந் தொழில். அதனால் உடம்பில் அடிக்கடி சூடு மிகுதிப்பட்டு மலச்சிக்கல் உண்டாக்குகிறது. மலச்சிக்கலே ஸர்வ ரோகங்களுக்கும் ஆதாரமென்று நவீன வைத்ய சாஸ்த்ர பண்டிதர்கள் சொல்லுகிறார்கள். ஆதலால், உடம்பில் எப்போதும் ஓய்வின்றி ஏதேனும் வியாதி இருந்து கொண்டே யிருக்கிறது. இதனாலும் குழந்தைகளுக்கு

உடம்புக்கேதேனும் வந்தால் அப்போது என் மனத்தி லுண்டாகும் பெருந் துயரத்தாலும், அவர்களுடம்பு நேரே இருக்கவேண்டுமே, கடவுளே, என்றெண்ணி நான் எப்போதும் ஏக்கப்படுவதனாலும், தலை மயிர் நரைத்துப் போய்விட்டது. மண்டையில் வழுக்கை விழுந்துவிட்டது. உனக்காகப் பாடு பட்டே நான் கிழவனாய் விட்டேன். உன் தொல்லையாலேயே என் பிராணன் போகப் போகிறது. அடா, தீராத நோயி ருந்தால், எப்படி ஸஹிப்பது? ஒரு நாளா, இரண்டு நாளா, ஒரு வாரமா, இரண்டு வாரமா, ஒரு மாஸமா, இரண்டு மாஸமா, ஒரு வருஷமா, இரண்டு வருஷமா, உன்னுடன் கூடி வாழத் தொடங்கிய கால முதலாக இன்றுவரை எப்போதும், ஒரு க்ஷணந் தவறாமல் என் உடம்பு ஏதேனும் ஒரு நோயினால் கஷ்டப்பட்டுக் கொண்டு தானிருக்கிறது. இத்தனை நோயையும் இத் தனை கஷ்டத்தையும் பொறுத்துக்கொண்டு என் உயிர் இதுவரை சாகாமலிருக்கிறதே, அதுதான் பெரிய ஆச் சர்யம். இவ்வளவுக்கும் நான் உன்னிடமிருந்து பெறும் கைம்மாறு யாது? பேதைச் சொற்கள், மடச் சொற்கள், பயனற்ற சொற்கள், மனதைச்சுடும் பழிச் சொற்கள், காது நரம்புகளை அறுக்கும் குரூரச் சொற் கள்—இவையே நான் பெறும் கைம்மாறு. ஓயாமல் ‘புடைவை வேண்டும்,’ ‘ரவிக்கை வேண்டும்,’ ‘நகை வேண்டும்,’ ‘குழந்தைகளுக்கு நகைகள் வேண்டும்’— வீண் செலவு! வீண் செலவு! வீண் செலவு! என்ன துன் பம், என்ன துன்பம்! என்ன துன்பமடா, ஈசா! எனக்

கிந்த உலகத்தில் சமைத்து விட்டாய்! இந்தக் கஷ்டத்தையெல்லாம் இன்னும் எத்தனை காலம் பொறுத்துக் கொண்டிருக்க வேண்டுமோ? என் பிராணன் என்று தான் நீங்கப் போகிறதோ!" என்று சொல்லி ஸோமநாதய்யர் அழத் தொடங்கி விட்டார்.

அப்போது முத்தம்மா:—"அழுகையை யெல்லாம் என்னிடம் கொண்டு வருகிறீர்கள். புன்னகை, ஸந்தோஷம், சிருங்கார ரஸம் இதற்கெல்லாம் வேறு பெண் ஏற்பாடு செய்துகொள்ளுங்கள். இல்லாவிட்டால் என்னைத் தள்ளிவிட்டு வேறு ஸ்திரீயை பஹிரங்கமாக விவாகம் செய்துகொள்ளுங்கள். அதுதான் உங்களுக்கு நல்லது.

இன்னொரு புதுப் பெண்—சிறு பெண்ணை மணம் புரிந்துகொண்டு அவளுடன் இன்புற்று வாழத் தொடங்குவீர்களாயின் உங்களுக்குள்ள மனக் கவலை யெல்லாம் நீங்கிப்போய்விடும். பிறகு புத்தியில் தெளிவும் சுறுசுறுப்பும் ஏற்படும். அப்பால் கோர்ட்டில் ஸாமர்த்யமாகப் பேசும் திறமை மிகுதிப்பட்டு, உங்களுக்கு வக்கீல் வேலையில் நல்ல லாபம் வரத் தொடங்கும். உடம்பிலுள்ள வியாதிகளெல்லாம் நீங்கிப்போய்விடும். நீங்கள் ஸந்தோஷத்துடனும் ஆரோக்யத்துடனும் வாழ்வீர்கள். மலச்சிக்கலால் எல்லா வியாதிகளும் தோன்றுவதாக வன்றோ நீங்கள் சொல்லுகிறீர்கள். எங்கள் அத்தங்கார் விசாலாக்ஷி அப்படிச் சொல்லமாட்டாள். அவளும் உங்கள் போலே பெரிய வேதாந்தியும் ஞானியுமாதலால் அவளுடைய கருத்தை உங்களுக்குச் சொல்

கிந்த உலகத்தில் சமைத்து விட்டாய்! இந்தக் கஷ்டத்தையெல்லாம் இன்னும் எத்தனை காலம் பொறுத்துக் கொண்டிருக்க வேண்டுமோ? என் பிராணன் என்று தான் நீங்கப் போகிறதோ!'' என்று சொல்லி ஸோமநாதய்யர் அழத் தொடங்கி விட்டார்.

அப்போது முத்தம்மா:—"அழுகையை யெல்லாம் என்னிடம் கொண்டு வருகிறீர்கள். புன்னகை, ஸந்தோஷம், சிருங்கார ரஸம் இதற்கெல்லாம் வேறு பெண் ஏற்பாடு செய்துகொள்ளுங்கள். இல்லாவிட்டால் என்னைத் தள்ளிவிட்டு வேறு ஸ்திரீயை பஹிரங்கமாக விவாகம் செய்துகொள்ளுங்கள். அதுதான் உங்களுக்கு நல்லது.

இன்னொரு புதுப் பெண்—சிறு பெண்ணை மணம் புரிந்துகொண்டு அவளுடன் இன்புற்று வாழத் தொடங்குவீர்களாயின் உங்களுக்குள்ள மனக் கவலை யெல்லாம் நீங்கிப்போய்விடும். பிறகு புத்தியில் தெளிவும் சுறுசுறுப்பும் ஏற்படும். அப்பால் கோர்ட்டில் ஸாமர்த்யமாகப் பேசும் திறமை மிகுதிப்பட்டு, உங்களுக்கு வக்கீல் வேலையில் நல்ல லாபம் வரத் தொடங்கும். உடம்பிலுள்ள வியாதிகளெல்லாம் நீங்கிப்போய்விடும். நீங்கள் ஸந்தோஷத்துடனும் ஆரோக்யத்துடனும் வாழ்வீர்கள். மலச்சிக்கலால் எல்லா வியாதிகளும் தோன்றுவதாக வன்றோ நீங்கள் சொல்லுகிறீர்கள். எங்கள் அத்தங்கார் விசாலாக்ஷி அப்படிச் சொல்லமாட்டாள். அவளும் உங்கள் போலே பெரிய வேதாந்தியும் ஞானியுமாதலால் அவளுடைய கருத்தை உங்களுக்குச் சொல்

தொழில் எனக்குப் பெருங் கஷ்டமாகிவிடும். ஆதலால் உன்னைத் தள்ளிவைத்துவிட்டு வேறு விவாகம் செய்து கொள்ளும்படி நீ தயவுடன் சிபார்சு செய்யும் வழக்கத்தை இன்றுடன் நிறுத்திக்கொள்ளும்படி, அதாவது, என் காது நரம்புகளையும் ஹிருதய நரம்புகளையும் அறுப்பதற்கு நீ நிஷ்கிருபையாகவும் இடைவின்றியும் மறவாமலும் மீட்டுமீட்டும் உபயோகித்துவரும் அஸ்த்ரங்களில் இந்த ஒற்றை அஸ்த்ரத்தின் ப்ரயோகத்தையேனும் இனி நிறுத்தி விடும்படி, நான் உன்னை மிகவும் தாழ்மையுடன் ப்ரார்த்தனை செய்கிறேன்" என்றார்.

"சரி. எனக்குத் தலைநோகிறது. நான் கீழே போய்க் காபிபோட்டு சாப்பிடப்போகிறேன்" என்று சொல்லி முத்தம்மா எழுந்தாள்.

"காப்பி குடித்துவிட்டு இங்கு திரும்பிவருவாயா ?" என்று ஸோமநாதய்யர் கேட்டார்.

"எதற்கு? இன்னும் ஏதேனும் அழுகைகளேனும் வசைகளேனும் மிச்சமிருக்கின்றனவோ ? நான் குரூர வார்த்தைகள் சொல்வதாக வருத்தப் படுகிறீர்களே? நீங்கள் என்னைப் பற்றி என்னிடம் சொல்லும் வார்த்தைகளெல்லாம் அமிர்வமயமாக இருக்கின்றன என்று தான் நினைத்திருக்கிறீர்களோ? சற்று நேரத்துக்கு முன் என்னுடன் கூடிவாழ்வதில் நீங்கள் அடையும் இன்பத்தை விஸ்தாரமாக வர்ணித்தீர்களே? அச்சொற்கள் என் செவிக்கு தேவாமிர்தமாகத் தான் இருந்

தனை. கேட்கக் கேட்கத் தெவிட்டவில்லை. சரி. அது வீண் பேச்சு. பனங்காட்டு நரி சலசலப்புக்கு அஞ்சிப் பயனில்லை. எத்தனை காலம் உங்களுடன் வாழும்படி பகவான் தலையில் எழுதி யிருக்கிறாரோ, அது வரை இப்படிப்பட்ட ஆசீர்வாதங்கள் தங்களுடைய திருவா யினின்று பிறந்து கொண்டேதானிருக்கும். அவற்றை நான் ஸஹித்துத் தான் தீரவேண்டும். எனக்கு நிவர்த்தி யேது? நீங்களாவது என்னை விலக்கி வைத்து விட்டு மற்றொருத்தியை விவாகம் செய்துகொண்டு ஸௌக்கியமாக வாழ்வீர்கள். நான் அப்படிச் செய்ய முடியுமா? எனக்கு வேறு புகலேது?'' என்று முத்தம்மா சொன்னாள்.

''அடியே, நாயே, நான் மறுவிவாகம் செய்து கொள்ளலாமென்ற வார்த்தையை என் காது கேட்க உச்சரிக்கக் கூடாதென்று நான் சொன்னேனோ, இல்லை யோ? இப்போதுதான் சொல்லி வாய் மூடினேன். மறுபடி அந்தப் புராணத்தை எடுத்து விட்டாயே. உனக்கு மானமில்லையா? வெட்கமில்லையா? சூடு சுரணை யில்லையா? இதென்னடா கஷ்டமாக வந்து சேர்ந்திருக்கிறது! இவள் வாயை அடக்குவதற்கு ஒரு வழி தெரியவில்லையே, பகவானே! நான் என்ன செய்வேன்? ஏதேனும் ஒரு வியாதி வந்து இவள் வாயடைத்து ஊமையாய் விடும்படி கிருபை செய்ய மாட்டாயா, ஈசா?'' என்று கூறி ஸோமநாதய்யர் பிரலாபித்தார்.

"சரி. போதும், போதும். காது குளிர்ந்துபோய் விட்டது. என்னைக் காபி குடித்துவிட்டு மறுபடி இங்கு வரும்படி சொன்னீர்களே, எதற்காக?" என்று முத்தம்மா மீண்டுமொருமுறை வினவினாள்.

"காபி குடித்துவிட்டுவா. பிறகு விஷயத்தைச் சொல்லுகிறேன். முதலிலேயே இன்ன காரணங் களுக்காகத் தான் அழைக்கிறேன் என்று உனக்கு முச்சலிக்கா எழுதி கையெழுத்துப் போட்டுக் கொடுத் தால்தான் வருவாயோ?" என்று ஸோமநாதய்யர் கர்ஜித்தார்.

"சரி; வருகிறேன். இதற்காகத் தொண்டை யைக் கிழித்துக் கொள்ளவேண்டிய அவசியமில்லை. இது ஹைகோர்ட்டில்லை; வீடு" என்று சொல்லி முத்தம்மா அந்த ஏழைப் பிராமணன்மீது ஒரு கடைசி அஸ்திரத்தை ப்ரயோகம் செய்துவிட்டுக் கீழே இறங் கிச் சென்றாள்.

அவள் போனவுடன் ஸோமநாதய்யர்:—"ஹை கோர்ட்டில் எனக்கு யாதொரு லாபமும் கிடைக்க வில்லையாம். அதற்காகக் கேலி பண்ணிவிட்டுப் போகிறாள். இந்த நாயின் வாயை அடக்க ஒரு வழி தெரியவில்லையே!" என்று நினைத்து வருந்தினார்.

"வில்லம்பு சொல்லம்பு மேதினியிலே யிரண்டாம்;
வில்லம்பிற் சொல்லம்பே மேலதிகம்."

என்று பழைய பாட்டொன்று சொல்லுகிறது. இந்தச் சொல்லம்பைப் பிரயோகிப்பதில் ஆண் மக்க

ளைக் காட்டிலும் பெண்கள் அதிகத் திறமை யுடைய வர்களென்று தோன்றுகிறது. இதற்கு முக்கியமான காரணம் ஆண்மக்கள் பெண்மக்களுக்குச் செய்யும் சரீரத் துன்பங்களும், அநீதிகளும், பலாத்காரங்களுமே போலும். வலிமையுடையோர் தம் வலிமையால் எளியாரைத் துன்பப்படுத்தும்போது எளியோர் வாயால் திரும்பத் தாக்கும் திறமை பெறுகிறார்கள். கை வலிமை குறைந்தவர்களுக்கு அநியாயம் செய்யப்படு மிடத்தே அவர்களுக்கு வாய்வலிமை மிகுதிப்படுகின்றது. மேலும், மாதர்கள் தாய்மாராகவும் ஸஹோதரிகளாகவும் மனைவியராகவும் மற்ற சுற்றத்தாராகவும் இருந்து ஆண் மக்களுக்கு சக்தியும் வலிமையும் மிகுதிப்பட வேண்டுமென்ற நோக்கத்துடன் வேலை செய்கிறார்கள். அவ் வலிவையும் சக்தியும் தமக்கு விரோதமாகவே செலுத்தப்படுமென்று நன்கு தெரிந்த இடத்திலும், மாதர்கள் தம்மைச் சேர்ந்த ஆண் மக்களிடம் தமக்குள்ள அன்பு மிகுதியாலும், தாம் ஆடவர்களின் வலிமையையே சார்ந்து வாழும்படி நேர்ந்திருக்கும் அவசியத்தைக் கருதியும், அவர்களிடத்தே மேற்கூறிய குணங்களேற்படுத்தி வளர்க்க வேண்டுமென்ற நோக்கத்துடன் இடையின்றி முயற்சி பண்ணுகிறார்கள். இவ்வுலக வாழ்க்கையில் ஒருவன் வெற்றியடைய வேண்டுமானால், அவன் ஸம்பாதித்துக் கொள்ளவேண்டிய குணங்களெல்லாவற்றிலும் மிக மிகமிக உயர்ந்த குணமாவது பொறுமை. மனிதனுடைய மனம் சிங்கம்போல் தாக்குந் திறனும், பாயுந் திற

னும்கொண்டிருப்பது மட்டுமேயன்றி ஒட்டகத்தைப் போலே பொறுக்குந் திறனும் எய்த வேண்டும். அவ்வித மான பொறுமை பலமில்லாதவர்களுக்கு வராது. மனத்திட்டமில்லாதோரின் நாடிகள் மிகவும் எளிதாகச் சிதறடிக்கக் கூடியன. ஒரு இலேசான எதிர்ச் சொல் கேட்கும்போதும், இலேசான ஸங்கடம் நேரும் போதும் அவர்களுடைய நாடிகள் பெருங் காற்றி டைப்பட்ட கொடியைப் போல் துடித்து நடுங்கத் தொடங்குகின்றன. மனத் திட்ப மில்லாதோருக்கு நாடித் திட்ப மிராது. அவர்களுக்கு உலகத்தில் புதிய எது நேர்ந்தபோதிலும், அதை அவர்களுடைய இந் திரியங்கள் ஸஹிக்குந் திறமை யற்றனவாகின்றன. மனவுறுதி யில்லாத ஒருவன் ஏதேனும் கணக்கெழு திக் கொண்டிருக்கும்போது, பக்கத்திலே ஏதேனும் குழந்தைக் குரல் கேட்டால் போதும். உடனே இவ னுடைய கணக்கு வேலை நின்றுபோய்விடும். அல்லது தவறுதல்களுடன் இயல்பெறும். அடுத்த வீட்டில் யாரேனும் புதிதாக ஹார்மோனியம் அல்லது மிருதங் கம் பழகுகிற சத்தம் கேட்டால் போதும். இவ னுடைய கணக்கு மாத்திரமே யன்றி சுவாஸமோ ஏறக்குறைய நின்றுபோகக் கூடிய நிலைமை எய்தி விடுவான். புதிதாக யாரைக் கண்டாலும் இவன் கூச்சப்படுவான்; அல்லது பயப்படுவான்; அல்லது வெறுப்பெய்துவான். மழை பெய்தால் கஷ்டப் படுவான். காற்றடித்தால் கஷ்டப்படுவான். தனக்கு ஸமான மாகியவர்களும் தனக்குக் கீழ்ப்பட்டவர்

களும் தான் சொல்லும் கொள்கையை எதிர்த்து ஏதேனும் வார்த்தை சொன்னால், இவன் செவிக்குள்ளே நாராச பாணம் புகுந்தது போலே பேரிடர்ப் படுவான்.

பொறாமையில்லாதவனுக்கு இவ்வுலகத்தில் எப்போதும் துன்பமேயன்றி, அவன் ஒரு நாளும் இன்பத்தைக் காண மாட்டான். ஒருவனுக்கு எத்தனைக் கெத்தனை பொறாமை மிகுதி படுகிறதோ, அத்தனைக் கத்தனை அவனுக்கு உலக விவகாரங்களில் வெற்றி யுண்டாகிறது. இது பற்றியேயன்றோ நம் முன்னோர் "பொறுத்தார் பூமியாள்வார், பொங்கினார் காடாள்வார்" என்று அருமையான பழமொழியேற்படுத்தினர்.

இத்தகைய பொறாமையை ஒருவனுக்குச் சமைத்துக் கொடுக்கும் பொருட்டாகவே, அவனுடைய சுற்றத்தாரகளும், விசேஷமாக அவன் மனைவியும், அவனுக்கு எதிர் மொழிகள் சொல்லிக் கொண்டேயிருக்கிறார்கள். கோபம் பிறக்கத் தக்க வார்த்தைகள் சொல்லுகிறார்கள். வீட்டுப் பழக்கந் தான் ஒருவனுக்கு நாட்டிலும் ஏற்படும். வீட்டிலே பொறாமை பழகினாலன்றி, ஒருவனுக்கு நாட்டு விவகாரங்களில் பொறாமை யேற்படாது. பொறாமை எவ்வளவுக் கெவ்வளவு குறைகிறதோ, ஒருவனுக்கு அத்தனைக்கத்தனை வியாபாரம், தொழில் முதலியவற்றில் வெற்றியுங் குறையும். அவனுடைய லாபங்களெல்லாம் குறைந்து கொண்டே

போம். பொறுமையை ஒருவனிடம் ஏற்படுத்திப் பழக்க வேண்டுமானால் அதற்கு உபாயம் யாது? சரீரத்தில் ஸஹிப்புத் திறமை யேற்படுத்தும் பொருட்டாக ஜப்பான் தேசத்தில் சிறு குழந்தையாக இருக்கும் போதே ஒருவனுடைய தாய்தந்தையார் அவனை நெடுநேரம் மிக மிகக் குளிர்ந்த பனிக் கட்டிக்குள் தன் விரலை அல்லது கையைப் புதைத்து வைத்துக் கொண்டிருக்கும்படி செய்து பழக்குகிறார்கள். மிக மிகச் சூடான வெந்நீரில் நெடும் பொழுது கையை வைத்துக் கொண்டிருக்கும்படி ஏவுகிறார்கள். இவை போன்றன உடம்பினால் சூடு குளிரைத் தாங்கும்படி பயிற்றுவதற்குரிய உபாயங்களாம். இது போலவே ஸூக துக்கங்களை ஸஹித்துக் கொள்வதாகிய மனப் பொறுமை ஏற்படுத்துவதற்கும், சூடான சொற்களும் ஸஹிக்க முடியாத பேதமைச் சொற்களும் சொல்லிச் சொல்லித்தான், ஒருவனைப் பழக்க வேண்டும். அவற்றைக் கேட்டுக் கேட்டு மனிதனுக்குக் காதும் மனமும் நன்கு திட்ப மெய்தும். இங்ஙனம் பொறுமை உண்டாக்கிக் கொடுக்கும் பொருட்டாகவும், மனிதனுடைய மனத்தில் அலைமேலே அடிக்கடி படைத்துக் கொள்ளப்படும் வீண் கவலைகளினின்றும் வீண் பயங்களினின்றும் அவன் மனத்தை வலிய மற்றொரு வழியில் திருப்பிவிடும் பொருட்டாகவும், ஒருவனுடைய மாதா அல்லது மனைவி அவனிடம் எதிர்பார்க்கப்படாத, பேதைமை மிஞ்சிய, கோபம் விளைக்கக் கூடிய சொற்கள் உரைக்கிறார்கள். அவ

னுடைய அன்பு எத்தனை ஆழமானதென்று சோதிக்கும் பொருட்டாகவும் அங்ஙனம் பேசுகிறார்கள். அன்பு பொறுக்கும். அன்பிருந்தால் கோபம் வராது. அன்றி ஒருவேளை தன்னை மீறிக் கோபம் வந்த போதிலும் மிகவும் எளிதாக அடங்கிப் போய்விடும். இத்தகைய அன்பைக் கணவன் தன் மீதுடையவனா என்பதைத் தெரிந்து கொள்ளும் பொருட்டு மாதர் பல ஸமயங்களில் கோபம் விளைக்கத் தக்க வார்த்தைகளை மனமறியப் பேசுகிறார்கள். நம்முடன் பிறந்து வளர்ந்து நம்மைத் தாயாகவும் மனைவியாகவும் ஸஹோதரியாகவும் எப்போதும் காப்பாற்றிக்கொண்டும், கவனித்துக் கொண்டும், நம்மிடம் தீராத அன்பு செலுத்திக் கொண்டும் வருகிற மாதர்கள் சில ஸமயங்களில்—அனேக ஸமயங்களில்—நமக்குப் பயனற்றனவாகவும், கழி பெரும் பேதைமையுடையன வாகவும் தோன்றக் கூடிய மொழிகளைப் பேசுவதினின்றும் ஆடவர்களாகிய நம்முட் பலர் அம் மாதர்களை மஹா மடமை பொருந்தியவர்களென்று நினைப்பது தவறு. அங்ஙனம் நினைத்தல் நமது மடமையையே விளக்குவதாம். ஆண்மக்கள் ப்ரத்யேகமாகக் கற்கும் வித்தைகளிலும், விசேஷமாகப் பயிலும் தொழில்களிலும், பொதுவாக சரீரபலத்திலும் மாதரைக் காட்டிலும் ஆண்மக்கள் உயர்ந்திருக்கக் கூடுமேயெனினும், ஸாதாரண ஞானத்திலும், யுக்தி தந்திரங்களிலும், உலகப் பொது அனுபவத்தால் விளையும் புத்திக் கூர்மையிலும் ஆண்களைக் காட்டி

லும் பெண்கள் குறைவாக இருப்பார்களென்று எதிர் பார்ப்பதே மடமை.

ஆதலால், குடும்பத்திலிருந்து பொறுமை என்பதொரு தெய்விக குணத்தையும், அதனால் விளையும் எண்ணற்ற சக்திகளையும் எய்த விரும்புவோர், தாய் மனைவி முதலிய ஸ்திரீகள் தமக்கு வெறுப்புண்டாகத் தகுந்த வார்த்தை பேசும்போது, வாயை மூடிக் கொண்டு பொறுமையுடன் கேட்டுக் கேட்டுப் பழக வேண்டும். அங்ஙனமின்றி ஒரு ஸ்திரீ வாயைத் திறந்த மாத்திரத்திலேயே, அவள் தாயாயினும், உடம்பிலும் உயிரிலும் பாதியென்று அக்நியின் முன் ஆணையிட்டுக் கொடுத்த மனைவி யாயினும், அவள் மீது புலிப் பாய்ச்சல் பாய்ந்து பெருஞ் சமர் தொடங்கும் ஆண்மக்கள் நாளுக்கு நாள் உலக விவகாரங்களில் தோல்வி எய்துவோராய்ப் பொங்கிப் பொங்கித் துயர்ப்பட்டுத் துயர்ப்பட்டு மடிவார்.

இந்த ஸங்கதிகளெல்லாம் ஸோமநாதய்யருக்கு மிகவும் இலேசாகத் தென்படலாயின. சில மாஸங்களுக்கு முன்பு அவருடைய கிழத் தாயாகிய ராமுப் பாட்டி இறந்து போய் விட்டாள். அவள் சாகு முன்பு இவரைத் தனியாக அழைப்பித்து இவருடன் சிறிது நேரம் ஸம்பாஷணை செய்து கொண்டிருந்தாள். அவள் சொன்னாள் :—" அடே, அய்யா, ஸோமூ! உன் பெண்டாட்டி முத்தம்மாளை நீ ஸாமான்யமாக நினைத்து விடாதே. அவள் மஹா பதிவிரதை. உன்னை ஸாக்ஷாத் பகவானுக்கு ஸமமாகக்

கருதிப் போற்றி வருகிறாள். உன்னுடைய ஹிதத்தைக் கருதியும் உனக்குப் பொறுமை விளைவிக்கும் பொருட்டாகவும் அவள் சில ஸமயங்களில் ஏறுமாறாக வார்த்தை சொன்னால், அதைக் கொண்டு நீ அவளிடம் அதிக அருவருப்பும் கோபமும் எய்தலாகாது. நானோ சாகப் போகிறேன். இன்னும் இரண்டு தினங்களுக்கு மேல் என் உயிர் தறுகி நிற்குமென்று தோன்றவில்லை. நான் போனபின் உனக்கு அவளைத் தவிர வேறு கதி யேது? தாய்க்குப் பின் தாரம். தாய் இருக்கும் போதே ஒருவன் அவளிடம் செலுத்தும் உண்மைக்கும் பக்திக்கும் நிகரான உண்மையையும் பக்தியையும் தன் மனைவியிடத்திலும் செலுத்தவேண்டும். இதுவரை நீ முத்தம்மாளை எத்தனையோ விதங்களில் கஷ்டப்படுத்தி வதைத்து வதைத்து வேடிக்கை பார்த்தாய் விட்டது. கொண்ட பெண்டாட்டியின் மனம் கொதிக்கும் படியாக நடப்பவன் வீட்டில் லக்ஷ்மீதேவி கால் வைக்கமாட்டாள். அந்த வீட்டில் மூதேவி தான் பரிவாரங்களுடன் வந்து குடியேறுவாள். இந்த வார்த்தையை எப்போதும் மறக்காதே. இதை ஆணி மந்திரமாக முடிச்சுப் போட்டு வைத்துக் கொள். குழந்தாய், ஸோமு, அந்தப் பராசக்தி லலிதாம்பிகை தான் உனக்கும் உன் பெண்டு பிள்ளைகளுக்கும் நீண்ட ஆயுளும் மாறாத ஆரோக்கியமும் கொடுத்து, உங்களை என்றும் ஸந்தோஷ பதவியிலிருத்திக் காப்பாற்றிக் கொண்டு வரவேண்டும்" என்றாள்.

அந்த வார்த்தை அவருக்கு அடிக்கடி நினைப்புக்கு வரலாயிற்று. "அத்தை யருமை செத்தால் தெரியும்" என்பது பழமொழி. ராமுப் பாட்டியின் முதுமைக் காலத்தில், ஸோமநாதய்யர் அவளை யாதொரு பயனு மில்லாமல் தன்னுடைய ஹிம்ஸையின் பொருட்டாக வும் நஷ்டத்தின் பொருட்டாகவும் நிகழ்ச்சி பெற்று வரும் ஒரு கிழ இருமல் யந்திரமாகப் பாவித்து நடத்தி வந்தார். அவள் ஒரே யடியாகச் செத்துத் தீர்ந்த பிறகு தான், அவருடைய மனதில் அவள் மிகவும் மஹிமை பொருந்திய தெய்வ மாகிய மாதா என்ற விஷயம் ஞாபகத்துக்கு வந்தது. "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" என்ற வசனம் அவருக்கு உண் மைப் பொருளுடன் விளங்கலாயிற்று. தாயிற் சிறந்த கோயிலில்லை. உலகத்தை யெல்லாம் படைத்துக் காப் பவளாகிய ஸாக்ஷாத் ஜகன்மாதாவே தனக்குத் தாய் வடிவமாக மண்மீது தோன்றிக் காப்பாற்றுகிறாள். "புருஷ ஏவேதம் ஸர்வம்" என்று வேதம் சொல்லு கிறது. இவ்வுலகத்திலுள்ள பொருளெல்லாம் கடவுளே யென்பது அந்த வாக்யத்தின் அர்த்தம். "ஸர்வம் விஷ்ணுமயம் ஜகத்"—உலக முழுதும் கடவுள் மயம். நம் வீட்டை நாயாக நின்று காப்பதும் கடவுள் தான் செய்கிறார். வேலையாளாக வந்து வீட்டைப் பெருக்கு வதும் கடவுள் தான் செய்கிறார். தோழனாகவும் பகை வனாகவும், ஆசானாகவும் சீடனாகவும், தாய் தந்தைய ராகவும், பெண்டு பிள்ளைகளாகவும் நம்மைக் கடவுளே சூழ்ந்து நிற்கிறார். எனினும் பிற வடிவங்களால் அவர்

நமக்குச் செய்யும் உபகாரங்களைக் காட்டிலும் தாய் தந்தையராக நின்று அவர் செலுத்தும் கருணைகள் சால மிகப் பெரியன. தாய் தந்தையரிருவருமே கடவுளின் உயர்ந்த விக்ரஹங்களாக வணங்குதற்குரியர். அவ் விருவருள் தாயே நம்மிடத்து அதிக தெய்விகமான அன்பு செலுத்துவது கொண்டும், நாம் கைம்மாறிழைக்க முடியாத பேரருட் செயல்கள் தந்தையிடமிருந்து நமக்குக் கிடைப்பதைக் காட்டிலும் தாயினிட மிருந்து அதிகமாகக் கிடைப்பது கருதியும், அவள் ஒருவனாலே தந்தையைக் காட்டிலுங்கூட உயர்வாகப் போற்றப் படத் தக்கவள். இதனைக் கருதியே "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" என்ற வசனத்தில் தந்தையின் பெயருக்கு முன்னே தாயின் பெயர் சூட்டப்பட்டிருக்கிறது.

ஸோமநாதய்யர் காமம் குரோதம் முதலிய சேஷ்டைகளை உடனே அடக்கிக் கொள்ளக் கூடிய சக்தி பெறு விடினும், கல்வி கேள்விகளால் அவருக்கு ஏற்பட்டிருந்த புத்தித் தெளிவு இடைக்கிடையே அந்தக் காம முதலிய தீயகுணங்களைக் கண்டித்து நன்கு சுடர் வீசும் ஸமயங்களும் இருந்தன. அந்தநேரங்களில் அவருடைய புத்திக்குப் பெரியபெரிய உண்மைகள் புலப்படுவதுண்டு. மேலும் தாம் சுமார் இரண்டு வருஷங்களின் முன்னே விசாலாக்ஷியிடம் அவமானப்பட்ட கால முதலாக, அவர் பரஸ்த்ரீகளின் விஷயத்தில் அதிகமாக புத்தியைச் செலுத்தும் வழக்கத்தை நாளுக்கு நாள் குறைத்துக் கொண்டே வந்தார். "பாவத்தின் கூலியே மரணம்"

என்று கிறிஸ்தவ வேதம் சொல்லுகிறது. துக்கத்தை யும் பயத்தையும் இவற்றால் விளையும் மரணத்தையும் ஒருவன் வெல்ல விரும்புவானாயின், இங்கு பயங்களுக் கும் துக்கங்களுக்கும் முக்கிய ஹேதுவாக இருக்கும் பாவங்களை விட்டு விடவேண்டும். யாதேனுமொரு பாவத்தை வெல்லும் முயற்சியில் ஒரு மனிதன் மிகவும் கஷ்டப்பட்டுக் கைதேறி விடுவானாயின், பிறகு மற்றப் பாவங்களை வெல்வதில் அவனுக்கு அத்தனை கஷ்ட மிராது. அவனுக்கு அஸுர யுத்தத்தில் தேர்ச்சியுண் டாய் விடும். அஸுரர்களென்பன பாவங்கள். தேவர் கள் ஹிதம் பண்ணும் சக்திகள்.

எப்போதுமே ஸோமநாதய்யர் பாவச் செய்கை களுக்கு அதிகமாக ஈடுபட்டவரல்லர். முக்கியமாக விய பிசார தோஷத்துக்கு அவர் அதிக வசப் பட்டவ ரல்லர். பெரும்பாலும், இப் பாவத்தை அவர் மானஸிக மாகச் செய்து வந்தவரே யல்லாமல் கார்யாம்சத்தில் அதிகமாக அனுஸரித்தது கிடையாது. ஆனால் யேசு கிறிஸ்து நாதர் சொல்லுகிறார்:—அன்ய ஸ்த்ரீகளுடன் ஸம்பந்தப் படுவோர் மாத்திரமே வியபிசாரமாகிய பாத கத்துக்கு ஆட்பட்டோர் என்று கருதுதல் வேண்டா. வெறுமே மனத்தால் ஒருவன் தன் மனைவி யொழிய மற் றொரு ஸ்த்ரீயை விரும்புவானாயின், அவனும் வியபிசார பாவத்துக்குட் பட்டவனே யாவான்" என்கிறார். இந்த விஷயத்தை உலகத்தார் ஸாதாரணமாக கவனிப்பது கிடையாது. பிறனுடைய சொத்தைத் திருடி, ஊர்க் காவலாளிகளின் விசாரணைகளில் அகப்பட்டு, தன்

டணை யடைந்து சிறை புகுந்து வாழ்வோன் மாத்திரமே கள்வனென்று பாமரர்கள் நினைக்கிறார்கள். பிறனுடைய சொத்தை அபஹரிக்க வேண்டுமென்று மனதில் எண்ணினால் போதும். அங்ஙனம் எண்ணிய மாத்திரத்தாலேயே ஒருவன் கள்வனாகி விடுகிறான். கள்வனுக்குரிய தண்டனை அவனுக்கு மனிதர்களால் விதிக்கப்படாவிடினும், கடவுளால் அவசியம் விதிக்கப் படுகிறது.

ஆனால், இள மூங்கிலை வளைத்து விடுதல் ஸுலபம், முற்றிப் போன மூங்கிலை வளைக்க முடியாது. அதை வளைக்கப் போகுமிடத்தே அது முறிந்து போய்விடும். மனித ஹ்ருதயத்தை இளமைப் பிராயத்தில் சீர்திருத்துதல் ஸுலபம். பின்னிட்டு முதிர்ந்த வயதில் மனித ஹ்ருதயத்தை வளைத்தல் மூங்கிலை வளைப்பது போல் ஒரேயடியாக அஸாத்யமன்று; ஆனால் மிகவும் சிரமமான வேலை. இது பற்றியே முன்னோரும் “இளமையிற் கல்” என்று உபதேசம் புரிந்தனர்.

எனினும், வருந்தினால் வாராத தொன்று மில்லை. மனித ஹ்ருதயம் எப்போதுமே முற்றிப் போன மூங்கிலாகும் வழக்கமில்லை. இளமையிலிருப்பதைக் காட்டிலும் வயதேறிய பிறகு தவம் முதலியவற்றைப் பயிலுதல் மிகவும் சிரமமென்பது கருதி எவனும் நெஞ்சந் தளர்தல் வேண்டா. கல்வியையும் தவமும் எந்தப் பிராயத்திலும் தொடங்கலாம். இதைப் பற்றியே ஸோமநாதய்யர் அடிக்கடி யோசித்துக் கடைசியாகத் தவம் பயிலுதல் அவசியமென்று நிச்சயித்துக் கொண்

டார். தவமென்றால் காட்டிலே போய், மரவுரியுடுத்து கந்த மூலங்களை புஜித்துக்கொண்டு செய்யும் தவத்தை இங்கு பேசவில்லை. ஆளுதலாகிய உண்மைத் தவத்தையே இங்கு குறிப்பிடுகிறோம். ஆத்ம ஞானத்தை—அதாவது, எல்லாம் ஒன்று; எல்லாம் கடவுள்; எல்லாம் இன்பம் என்ற ஞானத்தை—ஒருவன் தனது நித்திய அனுபவத்தில் பயன்படுத்தி நன்மை யெய்த வேண்டு மாயின் அதற்காக அவன் கைக் கொண்டொழுக வேண்டிய ஸாதனங்களில் மிக உயர்ந்தது தவம்.

அதாவது, இந்திரியங்களை அதர்ம நெறிகளில் இன்புற வேண்டு மென்ற விருப்பத்தினின்றும் தடுத்தல். இந்திரியங்களைத் தடுத்தலாவது மனதைத் தடுத்தல். மனமே ஐந்து இந்திரிய வாயில்களாலும் தொழில் புரியும் கருவி. சஞ்சலம் பயம் முதலிய படுகுழிகளில் வீழ்ந்து தவிக்காதபடி மனத்தைக் காத்தலும் தவமென்றே கூறப்படும். எல்லாப் பாவங்களைக் காட்டிலும் வலியது, மற்றெல்லாப் பாவங்களுக்கும் காரணமாவது, பயம். எனவே, பயத்தை வென்றால் மற்றப் பாவங்களை வெல்லுதல் எளிதாய் விடும். மற்றப் பாவங்களை வென்றால், தாய்ப் பாவமாகிய பயத்தை வெல்லுதல் பின் எளிதாம். இவ் விரண்டு நெறியாலும் தவத்தை ஏக காலத்தில் முயன்று பழகுதல் வேண்டும்.

இவ்வகைத் தவத்தையே ஸோமநாதய்யர் விரும்புவராயினர். மேலும் தவங்களில் உயர்ந்தது பூஜை. மனத்தைத் தீய நெறியில் செல்ல விடாமல் தடுப்பதற்கு மிகவும் சுருக்கமான உபாயம் அதனை நன்

னெறியிலே செலுத்துதல். மனத்தைச் செலுத்துதற்குரிய நன்னெறிகள் அனைத்திலும் உயர்ந்தது பூஜை. அன்பால் செய்யப்படும் உபசாரங்களே பூஜைகள் எனப்படும். எல்லாமாகிய கடவுளிடத்திலும், கடவுளாகிய எல்லாப் பொருள்கள், விசேஷமாக எல்லா உயிர்களிடத்திலும், இடையறாத நல்லன்பு செலுத்துவதும், அந்த அன்பின் கிரியைகளாகிய வழிபாடுகள் புரிவதுமே மிகச் சிறந்த தவம்: அதுவே அறங்களனைத்திலும் பேரறம். அஃதே மோக்ஷ வீட்டின் கதவு. அன்பே மோக்ஷம். அன்பே சிவம். இதனையே பகவான் புத்தரும் நிர்வாணமாகிய மஹா முக்திக்குக் கருவியாகக் கூறினர். 'கடவுளிடத்தும் மற்றெல்லா உயிர்களிடத்திலும் அன்பு செலுத்துவதே மோக்ஷத்துக்கு வழி'யென்று யேசு கிறிஸ்துவும் சொல்லியிருக்கிறார். மேலும், மற்ற மனிதர்களைத் தொழுதலும் வழிபடுதலும்—அவர்களிடத்துத் தீராத அன்பு செலுத்தி அவர்களுக்குத் தொண்டு புரிதலும்—இல்லாதோன் கடவுளுக்குச் செய்யும் ஜபம் முதலிய கிரியைகளால் கடவுளிடத்தே அன்புடையவன் என்று தன்னைக் கூறிக் கொள்ளுதல், வெறும் வேஷமாத்திரமேயன்றி உண்மையான தெய்வ பக்தியைக் காட்டுவதாகாது என்று கிறிஸ்து நாதர் உபதேசித்தருளினர். கண்ணுக்குத் தெரியும் கடவுளராகிய மனிதரிடத்தே அன்பு செய்யாதவன் கண்ணுக்குத் தெரியாத ஜகத்தின் மூல ஒளியாகிய ஆதிக் கடவுளிடத்தே அன்பு செய்ய வல்லன் ஆகமாட்டான் என்று கிறிஸ்துநாதர் சொல்லுகிறார்.

இதனை யெல்லாம் ஸோமநாதய்யர் நன்றாக அறிந் தவராதலால், மற்ற ஜீவர்களிடத்தில் அன்புசெலுத்திப் பழகுவதை முக்கிய விரதமாக எடுத்துக் கொண்டார். மற்ற உயிர்களிடத்திலும், விசேஷமாக மற்ற மனித ரிடத்திலும் உண்மையான அன்பு செலுத்திப் பழகுதல் ஸாமான்யமான கார்யமன்று. அதி சிரமமான கார்யம் ஜன்ம முதலாக நமக்கு ஏற்பட்ட விசேஷ ஸம்ஸ்காரங் களாலும் கணக்கில்லாத அனந்த கோடி சிருஷ்டிகளில் அனந்த கோடிகளாகத் தோன்றி மறையும் ஜீவ குலத் துக்குப் பொதுவாக ஏற்பட்டிருக்கும் பூர்வ ஸம்ஸ் காரங்களாலும் மனிதருக்கு இயல்பாகவே மற்ற உயிர் களிடமும், மற்ற மனிதரிடமும் பெரும்பாலும் பயம், வெறுப்பு, பகைமை முதலிய த்வேஷ குணங்கள் ஜனிக்கின்றன. பல உயிர்களிடம் அன்பும் நட்பும் ஜனிப்பது முண்டு. ஆனால், பொதுவாக ஜீவர்கள் இயற்கையிலேயே ஒருவருக் கொருவர் ஸஹிப்பில் லாமை, அஸூயை முதலிய குணங்களுடையோ ராகின்றனர்.

இந்த அநாதியான ஜீவ விரோதம் என்ற குணத்தை நீக்கி ஸர்வ ஜீவ காருண்யமும் ஸர்வ ஜீவ பக்தியும் ஏற்படுத்திக் கொள்ள வேண்டு மென்ற இச்சை ஸோமநாதய்யருக்கு உன்டாயிற்று. எனவே, அவர் ஆடு மாடுகளைக்கண்டால் முன்போல் இகழ்ச் சிக் கொள்கை கொள்வதில்லை. ஏழைகளைக் கண்டால், கொடிய நோயாளிகளைக் கண்டால், குரூபிகளையும் மிகுந்த முதுமையால் உருச் சிதைந்து விகார ரூப

மடைந்திருப்போரையுங் கண்டால், அருவருப்பு எய்தி முகஞ் சுளிப்பதை நிறுத்தி, அவர்களை மானஸிகமாக வந்தனை செய்யவும், ஆசீர்வாதம் பண்ணவும், இயன்ற வரை புறக் கிரியைகளாலும் அவர்களுக்கு இனியன செய்யவும் முயன்றார்.

இதுவரை தமக்குத் கோபமும் அருவருப்பும் விளைவித்துத் தம்மால் இகழ்ச்சியுடனும் எரிச்சலுடனும் புறக்கணிக்கப்படும் மனிதர்களைக் காணும் போது முகமலர்ச்சி கொள்ளவும், அவர்களிடம் தாழ்மை யுரையும் இன்சொற்களும் பேசவும் பழக்கப் படுத்திக்கொள்ளத் தொடங்கினர்.

இஃதெல்லாம் ஆரம்பத்தில் அவருக்கு மிகவும் சிரமமாக இருந்தது. இஃதனைத்திலும் சிரமம் யாதென்றால், அவருக்கு முத்தம்மாளிடம் ஸௌமுக மாக இருந்து அவளிடம் அன்பு காட்டுதல். அவளைக் கண்டவுடனே முகத்தைச் சுளிக்காமலிருக்க அவருக்கு ஸாத்யப்படவில்லை. பரஸ்த்ரீகளிடம் காம முறாமலிருப்பது அவருக்கு நாளடைவில் ஒருவாறு எளிதாயிற்று. ஆனல், முத்தம்மாளிடம் ப்ரேமை செலுத்துவதெப்படி ? விவாகம் செய்து, ருதுசாந்தி முடிந்து சில மாஸங்கள் வரை அவருக்கு முத்தம்மாளுடைய உறவும் ஊடாடுதலும் இன்பம் பயந்து கொண்டிருந்தன. அப்பால் அவை அவருக்கு ஸௌக ஹேதுக்களாகாமல் மாறிப்போய்விட்டன. பதினைந் தாம் வயதில் அந்த பாக்யவதி அவருடைய சயன

வீட்டுக்கு ஒரு ஆண் குழந்தையையும் கொண்டு வரத் தொடங்கினாள். அவர் அவளை முத்தமிடப் போகும் சமயத்தில் அந்தக் குழந்தை வீறிட்டழத் தொடங்கிற்று. அல்லது மல மூத்ர விஸர்ஜனம் செய்து அவளுடைய மடியையும் இவருடைய வேஷ்டியையும் அசுத்தப்படுத்தலாயிற்று. அன்றைக்குத் தொடங்கிற்று பெருங் கஷ்டம். பிறகு புதிய குழந்தைகள் இரண்டு பிறந்தன. தமக்கும் தம்முடைய மனைவிக்கும் இளமைப்பிராயம் தவறி விட்டன என்ற எண்ணம் அக் குழந்தைகளைப் பார்க்குந்தோறும் அவருள்ளத்தில் எழலாயின. இதினின்றும் அவர் குழந்தைகளிடம் அருவருப்படைதல் என்ற பரம மூடத்தனத்துக்குத் தம்மை ஆளாக்கிக் கொள்ளாமல் தப்பினார். ஆனால், அதைக் காட்டிலும் ஆயிரம் பங்கு அதிக மூடத்தனமாகத் தமது பத்தினியை நோக்கும் பொழுதெல்லாம் அவனிடத்தில் வெறுப்பெய்துவதும் முகத்தைச் சுளிப்பதுமாகிய தீயவழக்கத்தில் தம்மை யறியாது விழுந்து, நாளுக்கு நாள் அந்தப் படுகுழியில் தமது சித்தத்தை அதிக ஆழமாக அமிழ்ந்துபோக இடங் கொடுத்தார். இத்தனை காலத்துக்கு அப்பால் இவருக்குண்டாகிய புதிய தெளிவின் பயனாக, இப்போது அந்த மனைவியிடம் அன்பு செலுத்த முயற்சி பண்ணினார். அந்த முயற்சி இவருக்கு ஆரம்பத்தில் வேப்பெண்ணெய் குடிப்பதுபோல் மிகவும் கசப்பாக இருந்தது. அவளோ, இவரிடத்திலே தோன்றிய மாறுதலைக்

கண்டு உள்ளத்தில் மகிழ்ச்சி கொண்டாளாயினும், இவருடைய புதிய அன்பை உறுதிப் படுத்தவேண்டு மென்ற எண்ணத்துடன் இவரைப் பல கடினமான சோதனைகளுக்கு உட்படுத்தத் தொடங்கினாள். எனவே இவர் நம்பிக்கையையும் ஞானத்தையுந் துணைக் கொண்டு வேப்பெண்ணெய் குடிக்கப்போன இடத்தில் இவருடைய முதுகில் சவுக்கடிகள் வேறு விழலாயின. மஹா பதிவ்ரதையாகிய முத்தம்மா தன்னுடைய கணவன் இங்ஙனம் வேப்பெண்ணெய் குடிக்க வந்த ஸமயங்களில், அவருக்குச் சர்க்கரை முதலியன கொடுத்து அவருடைய கஷ்டத்துக்குப் பரிஹாரங்கள் செய்யாதபடி இங்ஙனம் சவுக்கடிகள் கொடுத்து அவருடைய முதுகைக் காயப்படுத்தியது அவளுடைய விரத மஹிமைக்குப் பொருந்துமோ என்று சிலர் ஐயுறலாம். ஆனால், அவள் உயர்ந்த பதிவிரதையாகிய காரணம் பற்றியே, எத்தனைக்கு எத்தனை விரைவாக நடத்துதல் ஸாத்தியமோ அத்தனைக் கத்தனை விரைவாக அவரை அஞ்ஞான விஷத்திலிருந்து பரிபூர்ணமாக விடுவித்து அவருக்கு ஞானாமிர்தத்தைப் புகட்டவேண்டுமென்ற கருத்துடையவளாயினாள்.

ஜீவாமிர்தமாகிய தர்ம பத்நியின் காதலை ஒரு பரம மூடன் வேப்பெண்ணெய்க்கு ஒப்பாகக் கருதி வருமிடத்தே, கூடிய அளவு விரைவில் அவனுக்கு என்ன கஷ்டம் விளைவித்தேனும் அவனை அந்த மஹா நரகமாகிய அஞ்ஞானத்தினின்றும் வெளியேற்ற

முயலுவதே தனது முக்கியக் கடமையென்று அவள் நியாயமாக நிச்சயித்தாள். அவனுக்கு சாசுவத மான ஞானமும் நித்ய இன்பமும் ஏற்படுத்திக் கொடுத்து அவனைக் காப்பாற்ற வேண்டுமென்று கருதி, அதனால் அவனுக்குச் சிறிதுகாலம் வரை அதிக சிரமங்கள் ஏற்பட்டபோதிலும் தீங்கில்லை யென்று தீர்மானம் செய்தாள். ஒருவன் காலில் ஆழமாக விஷமுள் பதிந்திருக்கையில் அதை ஊசி கொண்டெடுக்கும்போது அவன் அந்த ஊசி குத்தும் வேதனையைப் பொறுக்கமாட்டாமல் முள்ளை யெடுக்க முயலாதபடி மிட்டாய் தின்று தன் மனதை அந்த நோயினின்றும் புறத்தே செலுத்த வேண்டு மென்று விரும்புவானாயின், அவனுக்கு ஹிதத்தை நாடுவோர் அப்போது செய்யத் தக்கது யாது? அவனுக்கு ஊசி குத்துவதனால் வேதனையைப் பொருட்டாக்கக் கூடா தென்று அவனிடம் நிஷ்கருணையாகத் தெரிவித்து விட்டு ஊசியை ஆழமாகப் பதித்து விஷ முள்ளை எடுத் துக் களைதல் நன்றா? அல்லது, ஊசியைப் புறத்தே போட்டுவிட்டு அவனுக்கு ஜிலேபி காபியால் விஷ முள்ளின்செயலை நிறுத்திவிடலாம் என்று அவன் நினைப் பது மடமை யன்றோ? அதற்கு நாம் இடங்கொடுக்க லாமோ? அவன் அழ அழ, ஊசியை அழுத்தி விஷ முள்ளை எடுத்தெறிந்தாலன்றி அவனுக்கு விஷமுள் ளின் செய்கையால் மரண மேற்படு மென்பதை அவ னுக்கு வற்புறுத்திக் கூறி எங்ஙனமேனும் ஊசியை உபயோகித்தலன்றோ உண்மையான அன்புக்கும் கருணைக்கும் அடையாளமாவது?

இங்ஙனம் ஆலோசனை புரிந்தே, முத்தம்மா நமது ஸோமநாதய்யருக்கு அடிக்கடி விளாற்றுப் பூஜைகள் நடத்தி வந்தாள். இங்ஙனம் நல்லெண்ணங் கொண்டே அவள் தம்மிடம் கடுஞ் சொற்களும், கடுநடைகளும் வழங்குகிறாளென்ற விஷயம் நாட்பட ஸோமநாதய்யருக்கும் சிறிது சிறிது அர்த்தமாகத் தொடங்கி விட்டது. இருந்தபோதிலும் அவரால் ஸஹிக்க முடியவில்லை.

காதற்கோயில் மிகத் தூய்மைகொண்ட கோயில். ஒரு முறை அங்கு போய்ப் பாவஞ் செய்து வெளியே துரத்துண்டவன் மீளவும் அதனுள்ளே புகுமுன்னர் அவன் படவேண்டிய துன்பங்கள் எண்ணிறந்தன.

கண்ணைக் குத்திப் பார்வையை அழித்துக் கொள்ளுதல் ஸுலபம். ஆனால் இழந்த பார்வையை மீட்டும் ஏற்படுத்திக்கொள்ளுதல் எளிதில் இயல்வதொரு கார்யமா? ஸோமநாதய்யருக்குக் குருட்டுக் கண்ணை மாற்றி மறுபடி நல்ல கண் கொடுக்கவேண்டுமென்ற விருப்பத்துடன் முத்தம்மா வேலை செய்தாள். அதில் அவள் செய்த சிகிச்சைகள் அவருக்கு ஸஹிக்க முடியாதனவாகவே யிருந்தன.

ஆனால் எப்படியேனும் தான் இழந்த பார்வையை மீட்டும் பெறவேண்டுமென்ற பேராவல் அவருக்கும் இருந்தபடியால், சிகிச்சையிலுண்டாகிய சிரமங்கள் பொறுக்க முடியாதனவாகத் தோன்றினும், பல்லைக்

கடித்துக் கொண்டு, தம்முடைய முழு சக்தியையும் செலுத்தி ஒருவாறு ஸஹித்துப் பழகினார்.

எனவே முத்தம்மாளை ஓயாமல் தம்முடன் இருக்கும்படிக்கும் பேசும்படிக்கும் வற்புறுத்தத் தொடங்கினார். இவர் எத்தனைக் கெத்தனை அவளுறவையும் ஊடாட்டத்தையும் விரும்பத் தொடங்கினாரோ, அத்தனைக்கு அத்தனை அவள் இவரிடமிருந்து ஒதுங்கவும் மறையவும் தொடங்கினாள். "இவளை நாம் காதலுக்கு யோக்யதையில்லாத மனையடிமைப் புழுக்கச்சியாகவும் குழந்தை வளர்க்கும் செவிலியாகவும் நடத்தி வந்தோம். அப்போதெல்லாம் இவள் நமக்கு மிகவும் பணிவுடன் அடிமையினும் அடிமையாய் நடந்து வந்தாள். இப்போது நாம் பரமார்த்தமாக இவளுடைய அன்பைக் கருதி அதனை வேண்டிச் சருவப் புகுந்த போது, இவள் பண்ணுகிற மோடியும் இவள் செய்யும் புறக்கணிப்புக்களும் பொறுக்க முடியவில்லையே! இதென்னடா கேலி! சொந்தப் பெண்டாட்டியைக் காதலிராணியாகக் கொண்டாடப் போனவிடத்தே அவள் நம்மை உதாஸீனம் பண்ணினாள். என்ன செய்வது? பதிவிரதையாவது, வெங்காயமாவது! நாம் இளமை தவறிவிட்டோமென்பது கருதி இவள் நமது காதலை உண்மையாகவே அருவருக்கிறாளோ, என்னவோ? எவன் கண்டான்? ஸ்த்ரீகளுடைய ஹ்ருதயத்துக்கு ஆழங் கண்டோன் யார்? கடலாழங் காணுதல் எளிது; மாதர் மனத்தை ஆழங்காணுதல் அரிது. ஆண்மக்களைக் காட்டிலும் பெண்களுக்கு

எட்டு மடங்கு அதிகம் காமமென்று நீதி சாஸ்த்ரம் சொல்லுகிறது. எனவே, தலை வழுக்கையாய், நரை தொடங்கிக் கிழப்பருவத்திலே புகத் தொடங்கிய என்னிடம் இவள் உண்மையாகவே அவமதிப்புக் கொண்டாளெனின் அஃதோர் வியப்பாகமாட்டாது. என்னே உலக விசித்திரம்! என் குடும்பத்தில் மாத்திரமா, உலக முழுமையிலும் மனிதரெல்லாரும் வீட்டுப்பெண்டாட்டி யென்றால் அவள் தன் விருப்பத்துக்குக் கடமைப்பட்ட அடிமைச்சியாகவே கருதுகிறார்கள். புதியதொரு சித்திரத் தெய்வத்தின்மீது காதல் கொள்வது போல் நான் சொந்தப் பெண்டாட்டியிடம் காதல் செய்யப் புகுமிடத்தே, அவள் என்னை இப்படிக் கேலி பண்ணுகிறாள். எனினும் இவள் பதிவிரதை யல்லளென்று கருதவும் நியாயமில்லை. எனது பெற்ற தாய் இறக்கப் போகுந் தருணத்தில் இவள் மஹா சுத்தமான பதிவிரதை யென்று சொல்லி விட்டு மடிந்தாளே. அவள் தீர ஆராய்ச்சி செய்து நிச்சயப் படுத்தாத வார்த்தையை மரண காலத்தில் சொந்த மகனிடம் சொல்லக் கூடுமென்று நினைக்க இடமில்லையே. தாய் நம்மிடம் பொய் சொல்லிவிட்டா போவாள்? மேலும், அவள் இந்த வார்த்தை என்னிடம் சொல்லிய காலத்தில், அவளுடைய முகத்தை நான் நன்றாக உற்று கவனித்தேனன்றோ? அவள் அச் சொல்லைப் பரிசுத்தமான ஹ்ருதயத்துடனும் உண்மையான நம்பிக்கையுடனும் கூறினாளென்பது அவள் முகத்தில் மிகத் தெளிவாக விளங்கிற்றன்றோ? மேலும், அவள் தீர ஆழ்ந்து பாராமல்

வஞ்சிக்கப்பட்டவளாய் அங்ஙனம் தவறுது நம்பிக்கை கொண்டிருக்கக் கூடுமென்று நினைக்கப் புகுவோமா யின், அது பெரு மடமைக்கு லக்ஷணமாகும். பாம்பின் கால் பாம்புக்குத் தெரியும். எத்தனை மறைந்த போதி லும் பெண் மர்மம் பெண்ணுக்குத் தெரிந்து விடுமன் ருே? ஒரு வருஷமா, இரண்டு வருஷமா? இவளுடைய நடையை என் மாதா பத்து வருஷகாலமாக, இரவு பகல் கூடவே யிருந்து மிகவும் ஜாக்கிரதையுடன் கவ னித்து வந்தவளன்ருே? மேலும் என் மாதா புத்திக் கூர்மை யில்லாத மந்தமா? இருபது கம்பிளியை போட்டு ஒரு ரஹஸ்யத்தை மூடி வைத்தாலும், அது அவளுடைய கண்களுக்குத் தெரிந்து விடுமன்ருே? தாய் சொல்லியதை மறுப்பதில் பயனில்லை. அதில் ஐயப்படுவது மூடத்தனம். 'ஐய முற்றுன் அழி வுறு வான்' என்று பகவத் கீதையில் கண்ணபிரான் அருளிச் செய்திருக்கிருனன்ருே? நிச்சயமாக நம்முடைய புத் திக்குப் புலப்படும் உண்மை யொன்றைப் பற்றி வீண் ஸம்சயம் படும் அதிகாரம் மனத்துக்குக் கொடுப்போ மாயின், அது நம்மை நரகத்தில் கொண்டு சேர்க்கும். நம்முடைய முத்தம்மா பதிவிரதைதான். நம்முடைய உண்மையைச் சோதித்தறியும் பொருட்டாகவே, நம்மை இந்த வலிய சோதனைகளுக்கு உட்படுத்து கிருள். இதனல் நாம் அவளிடம் கொண்டிருக்கும் பிரேமைத் தழல் அவிந்து போக இடங் கொடுக்கக் கூடாது. இதனுல் நாம் அவளிடம் விரஸப்பட லாகாது. அவள் தான் நமக்குத் தாரகம். வேறு

புகல் நமக்கில்லை. எக் காலத்திலும் நம்முடைய வழிகளை இருள் மூடாத வண்ணம் நம் மாதா கருணையுடன் நிறுத்தி விட்டுப்போன நித்ய விளக்கன்றோ இந்தக் கண்மணி முத்தம்மா? மேலும், மூட நெஞ்சமே! பாவியாகிய புழு நெஞ்சமே! முத்தம்மா நம்மை என்ன சோதனைகள் செய்கிறாள்? ஊடல் தானே பண்ணுகிறாள்? ஊடலன்றோ காதலின் மிக இனிய பகுதியாவது?

உணலினும் உண்ட தறலினிது காமம்
புணர்தலின் ஊட லினிது

என்றன்றோ ஸாக்ஷாத் பிரமதேவனுடைய அம்ச பூதரும் மஹாகவியுமாகிய திருவள்ளுவ தேவர் அருளியிருக்கின்றார். நாய் மனமே! உனக்கு என் காதற் கிளியிட மிருந்த இகழ்ச்சி யெண்ணம் இன்னும் உன்னை முற்றிலும் விட்டு விலகவில்லை. 'இவளாவது? நம்மிடத்தில் ஊடல் காட்டுவதாவது?' என்ற கர்வ சிந்தனையால், இந்த விஷயத்தில் மனதுக்குக் கஷ்ட மேற்படுகிறதேயன்றி வேறில்லை. இவள் என்ன காரணத்தால் உனக்கு இத்தனை துச்சமாய்விட்டாள்? துச்ச மனமே? இவளைக் காதலிராணி யென்று கொண்ட இடத்தில், உணர்வு, உயிர், உடம்பு என்ற மூன்றும் அவளுக்கே ஸமர்ப்பணமாகி விட்டன வன்றோ? அவள் ஊடினால் அதுவும் ஓரின்பம். அவள் கூடினால் அதுவும் ஓரின்பம். மேலும், காதலி சொல்லும் வசை மொழிகளெல்லாம் நம்முடைய செவிகளில் அமிர்தம் போல் விழுவதன்றோ? ஆண்மைக்கு லக்ஷண

மாம்? காதலிப் பெண் உண்மையாகவே சினங் கொண்டோ அல்லது பொழுதுபோக்கின் பொருட்டாகவோ, நம்மைத் திட்டினால், நாம் அந்தத் திட்டுக்களை யெல்லாம் மிட்டாயென்று நினைப்பதன்றோ புருஷலக்ஷணம்? அங்ஙனமின்றி அவளிடம் எதிர்த்துச் சினங் கொள்ளுதல் பேடித்தன்மை யன்றோ? அவள் ஏது செய்தாலும் அவளே நமக்குத் தெய்வம், அவளே நமக்கு இன்பம். அவள் வலிய வந்து நம்மை முத்தமிட்டபோதிலும், அவளருளே கதி. அவள் நமது தசையை வாளைக் கொண்டு அறுத்தபோதிலும், அதுவே நமக்கு ஸ்வர்க்க போகம்."

என்று இங்ஙனம் நிலாமுற்றத்தில் நாற்காலியின் மீதுட்கார்ந்து நிலவை நோக்கி ஆலோசனை செய்து கொண்டிருந்த ஸோமநாதய்யர் அப்படியே நித்திரையில் ஆழ்ந்து விட்டார். பிறகு அவர் கண்ணை விழித்துப் பார்க்கையிலே, சந்திரன் உதித்த இடத்தினின்றும் நெடுந்தூரம் விலகிவந்திருப்பது கண்டார். மாலையில் சுமார் ஏழுமணிக்கு முத்தம்மா காபி போட்டுக் குடித்துவிட்டு வருவதாகச் சொல்லி விட்டுக் கீழே போனாள். இப்போது மணி எத்தனையிருக்குமென்று அவர் தம்முடைய சட்டைப் பையிலிருந்த கைக் கடிகாரத்தை எடுத்து நோக்கினார். நடுநிசி, பன்னிரண்டு மணி யாய்விட்டது. படுக்கை யறைக்குள்ளே போய்ப் பார்த்தார். அங்கு திமிதிமியென்று மண் எண்ணெய் மேஜை விளக்கு எரிந்து கொண்டிருந்தது. இன்னும் ஒரு க்ஷணம் இவர்

தாமஸப் பட்டு வந்திருப்பாரானால் கண்ணாடிக் குழாய் வெடித்துப்போயிருக்கும். அதனிலும் பெரிய ஆபத்துக்கள் விளைந்தாலும் விளைந்திருக்கும். இவர் விளக்கின் ஸ்திதியைப் பார்த்தவுடனே பளிச் சென்று பாய்ந்து திரியைக் குறைத்தார். விளக்கு நேரே எரிந்தது. அவர்களுடைய படுக்கையறையில் மூன்று கட்டில்களுண்டென்று முன்னமேயே சொல்லியிருக்கிறேன். அவற்றுள் ஒரு கட்டிலின் மீது அனந்த கிருஷ்ணனைத் தழுவிக்கொண்டு முத்தம்மா படுத்திருந்தாள். மற்றொரு கட்டிலில் மூத்த குழந்தைகள் இரண்டும் படுத்திருந்தன. ஸோமநாதய்யருடைய கட்டில் சும்மா கிடந்தது. முத்தம்மாளை எழுப்பிக் கீழே அழைத்துப் போய் போஜனத்துக்கு ஏற்பாடு பண்ணலாமா என்று ஒரு க்ஷணம் ஸோமநாதய்யர் யோசனை பண்ணினார். அப்பால், "அறிவுடனே கண்ணை விழித்து நன்றாகப் பார்த்துக் கொண்டே படுகுழியிற் போய் வீழ்வதொப்பப் பசியில்லாமல் உண்பதிலிருந்தே நோய்களும், சாவும் ஏற்படுதல் ப்ரத்யக்ஷமாகத் தெரிந்திருந்தும் நாம் தினந்தோறும் பசியின்றி உண்டு மரணத்துக்கு வழிதேடுதல் பேதைமையினும் பெரிய பெரும் பேதைமை யாகுமன்றோ?" என்றொரு நினைப்பு அவருக்குண்டாயிற்று. "இன்றைக்கு நல்ல நாள். பசியில்லாத ஸமயங்களில் உபவாஸம் போடுவதாகிய நல்ல வழக்கத்தை இன்றிரவே தொடங்கி விடுவோம். பிரிய ரத்தினமாகிய முத்தம்மாளும் ஆழ்ந்து

நித்திரை செய்கிறாள். இவளை இப்போது எழுப்பிச் சோறுபோடச் சொல்லித் தொல்லைப்படுத்துதல் பாவமாகும். ஆதலால் 'உபவாஸமே கிடப்போம்' என்று தீர்மானம் பண்ணி, ஸோமநாதய்யர் விளக்குத் திரியை மிகவும் சிறிதாக்கிக் குறைத்து மேஜையினின்றும் விளக்கை யெடுத்துப் படுக்கையறையின் மூலை யொன்றில் தரைமீது வைத்தார். மெல்லவந்து முத்தம்மா துயிலெழாதபடி மெதுவாக அவளைத் தழுவி அவளுடைய கன்னத்தில் ஒரு முத்தமிட்டார். பிறகு தம்முடைய கட்டிலின் மீதேறிப் படுத்துக்கொண்டார். விரைவில் நித்திரைபோய் விட்டார். அன்றிரவு முழுதும் ஸோமநாதய்யர் மிகவும் ஆச்சர்யமான இன்பக் கனவுகள் கண்டார்.

## ஒன்பதாம் அத்யாயம்.

### பெண்டாட்டிக்கு ஜயம்

மறுநாட் காலை முதல் முத்தம்மா பாடு கொண்டாட்டந் தான். வீட்டில் அவளிட்டது சட்டம், அவள் சொன்னது வேதம். ஸோமநாதய்யர் ஏதேனுமொரு கார்யம் நடத்த வேண்டுமென்று சொல்லி, அவள் கூடாதென்றால் அந்தக் கார்யம் நிறுத்தி விடப்படும். அவர் ஏதேனும் செய்யக் கூடாதென்று சொல்லி அவள் அதைச் செய்து தான் தீரவேண்டு.

மென்பளாயின் அது நடந்தே தீரும். இங்ஙனம் முத்தம்மா தன் மீது கொடுங்கோன்மை செலுத்துவது பற்றி அவருக்கு அடிக்கடி மனவருத்த மேற்படுவதுண்டு. ஆனால், அந்த வருத்தத்தை அப்போதப்போதே அடக்கி விடுவார். "தெய்வத்தினிடம் ஒருவன் உண்மையான பக்தி செலுத்தப் போனால், அது அவனை எத்தனையோ சோதனைகளுக்குட் படுத்தும் என்கிறார்கள். அதினின்றும் ஒருவன் தனது பக்தியைச் சோர விடுவானாயின், அவன் உண்மையான பக்தனாவானோ? உண்மையான பக்தியால் கடைசியில் எய்தப்படும் பயன்கள் அவனுக்குக் கிடைக்குமோ? நாம் இவளை ப்ரத்யக்ஷ தெய்வமாக வன்றோ பாவித்து நடத்துகிறோம். எனவே, இவள் ஏது செய்தாலும் பொறுத்துக் கொண்டு தான் இருக்க வேண்டும். நாம் மனவருத்தப் படலாகாது" என்று தீர்மானித்துத் தம்மைத் தாமே தேற்றிக் கொள்வார். இப்படி யிருக்கையில் ஒரு நாள் முத்தம்மா தன் கணவனை நோக்கி:—"நாளை ஞாயிற்றுக் கிழமை தானே? உங்களுக்கோ கோர்ட்டு வேலை கிடையாது. ஆதலால் நாமிருவரும் குழந்தைகளையும் வேலைக்காரனையும் *

---

* ஆசிரியர் இக்கதையைப் பூர்த்தி செய்வதற்குள் காலஞ் சென்று விட்டார். இதுவரை விசாலாக்ஷி அம்மாளுடைய சரித்திரம் விரித்துக் கூறப்பட்டது. இரண்டாவது பாகத்திலே தான் சந்திரிகையின் வரலாற்றைச் சொல்வதாக உத்தேசித்திருந்தார். சுமார்

பத்துப் பக்கங்கள் மாத்திரமே இரண்டாம் பாகத்தில் எழுதப்பட்டிருந்தன. ஸோமநாதய்யரும் முத்தம்மாளும் ஸமுத்ரக்கரைக்குப் போதல்—ஸமுத்ர வர்ணனை, விசுவநாத சர்மாவுக்கு பைத்தியம் தெளிதல், சர்மா விசாலாக்ஷி சந்திரிகை முதலியவருடன் வசித்துக் கொண்டிருத்தல் ஆகிய இவையே ஷை பத்துப் பக்கங்களின் கதை. ஷை பக்கங்கள் சுதேசமித்திரன் பிராஞ்சு பிரஸ் மானேஜர் அவர்களிடம் கொடுத்திருப்பதாகக் குறிக்கப்பட்டிருக்கிறது. அங்கு பல தடவை விசாரித்தும் கிடைப்பதற் கிடமில்லாமற் போய்விட்ட படியால் "சந்திரிகையின் கதை" யை இப்படியே நிறுத்தவேண்டியதாயிற்று.

பாரதி பிரசுராலயத்தார்.

# நவதந்திரக் கதைகள்

## முன்னுரை.

வேதாரண்யம் என்ற ஊரில் விவேக சாஸ்திரி என்றொரு பிராமணன் இருந்தார். அவருக்கு மூன்று பிள்ளைகள். அந்த மூன்று பிள்ளைகளையும், மனைவியையும் வைத்துக் காப்பாற்றுவதற்குப் போதுமான நன்செய் நிலம் அவருக் கிருந்தது. ஆனால் பிள்ளைகள், மூவருக்கும் விவாகமாய்த் தலைக்கு ஓரிரண்டு குழந்தைகளும் பிறக்கவே, குடும்பம் மிகப் பெரிதாகிவிட்டது. ஆதலால், அவருடைய முதுமைப் பிராயத்தில் ஜீவனத்துக்கு சிரமமுண்டாய்விட்டது. பிள்ளைகளுக்கு ஸம்ஸ்க்ருதப் படிப்புச் சொல்லிவைத்து ஒருவனை வேதாந்த சாஸ்திரத்திலும், மற்றொருவனை வியாகரணத்திலும், மூன்றாமவனைத் தர்க்க சாஸ்திரத்திலும் தேர்ச்சியோங்கும்படி செய்து வைத்திருந்தார். கால நிலைமையால், அந்த வித்தைகள் வயிற்றுப் பிழைப்புக்குப் பயன்படவில்லை. பிறரிடம் பிச்சை கேட்க ஸம்மத மில்லாத மானமுள்ள குடும்பத்தா ராதலால், அரை வயிற்றுக்கு ஆஹாரம் செய்துகொண்டு கஷ்டத்தி லிருந்தார்கள். இப்படியிருக்கையில், ஒரு நாள் விவேக சாஸ்திரி தமது கையில் தாதுவைப் பார்த்து இன்னும் ஒரு வருஷத்

துக்கு மேலே தம்மால் ஜீவிக்க முடியாதென்று தெரிந்தவராகித் தம்முடைய மக்களை அழைத்துப் பின்வருமாறு சொல்ல லானார் :—

"வாரீர், மக்களே, நான் சொல்லப் போவதை ஸாவதானமாகக் கேளுங்கள். என்னுடைய ஜீவன் இவ்வுலகத்திலே இன்னும் ஒரு வருஷத்துக்கு மேலே நில்லாது. நான் உங்களுக்கு அதிகச் செல்வம் வைத்துவிட்டுப்போக வழியில்லாமற் போய்விட்டது. விதிவசமாக ஏற்பட்ட மதிமயக்கத்தால், உங்களுக்கு லௌகிக லாபங்கள் உண்டாகக்கூடிய வித்தைகள் கற்றுக்கொடுக்கத் தவறிவிட்டேன். உங்களுக்கோ குடும்ப பாரம் ஏற்கெனவே மிகுதியாய்விட்டது; இன்னும் காலம் போகப் போக இதனிலும் அதிகப் படக்கூடும். நீங்கள் எப்படி இந்தச் சுமையைப் பொறுக்கப் போகிறீர்களென்பதை நினைக்கும்போது எனக்குக் கவலை யுண்டாகிறது. ஆயினும், லௌகிக தந்திரங்களை நீங்கள் தெரிந்து கொள்ளும் பொருட்டுச் சில கதைகள் சொல்லிவிட்டுப் போகிறேன். தினந்தோறும் விளக்கு வைத்தவுடனே என்னிடம் சிறிது நேரம் கதை கேட்க வாருங்கள். எனது காலத்துக்குப் பிறகு உங்களுக்கு இந்தக் கதைகள் பயன்படும்" என்றார். அப்படியே, பிள்ளைகள் சரியென்று அங்கீகாரம் செய்து கொண்டனர். பிள்ளைகளிலே மூத்தவன் பெயர் வாஸுதேவன், இரண்டாமவன் பெயர் காளிதாஸன், மூன்றாவது பிள்ளைக்கு ஆஞ்சநேயன் என்று பெயர்.

# முதற் பகுதி.

## (பயனறிதல்)

அன்று மாலை மூன்று பிள்ளைகளும் ஸந்தி ஜபங்களை முடித்துக்கொண்டு, பிதாவிடம் வந்து நமஸ்காரம் செய்துவிட்டுக் 'கதை' கேட்க வந்திருக்கிறோம் என்றார்கள். விவேக சாஸ்திரி தம் பிள்ளைகளை அன்புடன் உட்காரச் சொல்லி "குழந்தைகளே! நமது குல தேவதையாகிய காசி-விசாலாக்ஷியை ஸ்மரித்துக் கொள்ளுங்கள்" என்றார். அப்படியே மூவரும் கண்ணை மூடிக்கொண்டு சிறிது நேரம் தியானம் செய்து முடித்தார்கள். பிறகு பிதா கதை சொல்லத் தொடங்கினார்:—

"கேளீர், மக்களே! ஒரு காரியம் தொடங்கும்போது அதன் பயன் இன்னதென்று நிச்சயமாகத் தெரிந்துகொள்ள வேண்டும். அந்தப் பயன் நமக்கு வேண்டியதுதானா என்பதையும் ஆராய்ந்து செய்ய வேண்டும். பயன்படாத காரியத்திலே உழைப்பவன் ஸங்கீதம் படிக்கப்போன கழுதை போலே தொல்லைப் படுவான்" என்றார். அதெப்படி? என்று பிள்ளைகள் கேட்டார்கள்.

---

## ஸங்கீதம் படிக்கப்போன கழுதையின் கதை

பிதா சொல்லுகிறார்:—

பொதிய மலைக் காட்டிலே, ரஸிகசிரோமணி என்

மேய்ந்து நன்றாகக் கொழுப்படைந்து வருகையில் வசந்த காலத்தில், ஒரு நாள் மாலை, ஒரு மாமரத்தின் பக்கமாகப் போகும்போது, கிளையின்மேல் மதுகண்டிகை என்றதோர் குயில் பாடிக்கொண்டிருந்தது. அதை ரஸிகசிரோமணி சிறிது நேரம் நின்று கேட்டது. குயிலின் பாட்டு மனோகரமாக இருந்தது. அந்தப் பாட்டிலே கழுதை மயங்கிப்போய் மதுகண்டிகையை நோக்கிச் சொல்லுகிறது :—“பெண்ணே, உன் பாட்டு எனக்குப் பரவச முண்டாக்குகிறது. ஆஹா! ஸங்கீதத்தின் இன்பமே இன்பம்! உனது குரல் ஸன்னமானது. நமக்குக் கனத்த சாரீரம். உனக்குள்ள பயிற்சியும் திறமையும் நமக்கிருந்தால் மிகவும் நன்றாக இருக்கும். காட்டிலுள்ள மிருகங்களெல்லாம் கேட்டு வியப்படையும். சிங்கராஜா நம்மை ஸம்ஸ்தானத்து வித்வானாக நியமனம் செய்வார். ‘இந்தக் காட்டிலுள்ள புல்லாந்தரைகளிலே ரஸிகசிரோமணி ஒருவன்தான் மேயலாம். மற்ற எந்த மிருகமும் மேயக் கூடாது’ என்று கட்டளை பிறப்பித்துவிடுவார். பிறகு நமக்கு யாதொரு வேலையு மேற்படாது. நமது நிலைமை மிகவும் கொண்டாட்டமாய் விடும்.”

இவ்வாறு ரஸிகசிரோமணி மேன்மேலும் சொல்லிக்கொண்டு போவதைக் கேட்டுக் குயில் சிரிப்புடன் :—“கேளாய், ரஸிகமாமா, உனக்கு இந்தத் தொழில் வரமாட்டாது. வீணாக மனோராஜ்யம் பண்ணுவதிலே பயனில்லை” என்றது.

கழுதைக்குக் கோபமுண்டாய் விட்டது. கழுதை சொல்லுகிறது:—

"செல்வமும், அழகும், கல்வியும், வலிமையும் ஐந்துக்களுக்கு அதிக கர்வத்தை யுண்டாக்குகின்றன. தன்னைக் காட்டிலும் இந்த நிமிஷம் ஒரு விஷயத்திலே தணிந்திருப்பவன் எப்போதும் தணிவாகவே யிருப்பானென்று மூடன் நினைக்கிறான். எந்தத் தொழிலும் யாருக்கும் வரும். வருந்தினால் வாராத தொன்றுமில்லை. பார்ப்பாரப் பிள்ளைக்கு வியாபாரத் தொழில் வாராதென்று சொல்லி நகைத்த செட்டி அவமானமடைந்த கதை உனக்குத் தெரியாதோ?"

"அதென்ன கதை?" என்று மதுகண்டிகை கேட்டது.

---

## மாணிக்கஞ் செட்டி மானி அய்யனை நகைத்தது.

*அப்போது ரஸிகசிரோமணி சொல்லுகிறது:—*

கேளாய், கர்வம்பிடித்த மதுகண்டிகை யென்ற குயிற் பெண்ணே! பல வருஷங்களின் முன்பு மதுரை மாசி வீதி மளிகை மாணிக்கஞ் செட்டி என்றொருவனிருந்தான். அவனுடைய தந்தை மளிகை வியாபாரஞ் செய்து கடன்பட்டு வீடுவாசலை யிழந்து ஏழ்மையிலே இறந்துபோனான். பின்பு மாணிக்கஞ் செட்டியின் தாய் கடலைச் சுண்டலும், தோசையும் விற்றுச் செட்டாகக் குடித்தனம் பண்ணித் தன் பிள்ளையை வளர்த்து வந்தாள். மாணிக்கஞ் செட்டிக்குப் பத்து வயதான

வுடன் அவனை ஒரு பெரிய வியாபாரி தனது கடையிலே மாதம் அரை ரூபாய் சம்பளத்துக்கு வைத்துக் கொண்டான். இவன் தாயாரிடத்திலிருந்து செட்டு கருத்து முதலிய நல்ல குணங்களைப் பயின்றவனாதலால், பெரிய வியாபாரிக்கு இவன் மேலே தயவும், நம்பிக்கையும் உண்டாயின. பெரிய வியாபாரிக்குப் பிள்ளை யில்லை. ஒரே பெண். அவள் பெயர் மரகதவல்லி. நாளடைவில் மாணிக்கஞ் செட்டியை வியாபாரி தன் கடையில் பங்காளியாகச் செய்துகொண்டான். தன் மகளை இவனுக்கே விவாகம் செய்து வைத்தான். அவன் இறந்த பிறகு உடைமை யெல்லாம் மருமகனுக்கே வந்துவிட்டது. மதுரை மாசி வீதி மளிகைக் கடை மாணிக்கஞ் செட்டி என்று ப்ரக்யாதி ஏற்பட்டு விட்டது. இந்த மாணிக்கஞ் செட்டியினிடம், பதினாறு வயதுள்ள மானி அய்யன் என்ற பார்ப்பாரப் பிள்ளை ஒருவன் வந்தான்.

"ஐயரே, என்ன வேண்டும்?" என்று செட்டி கேட்டான்.

"தங்களுடைய கடையிலே எனக்கொரு வேலை போட்டுக் கொடுக்க வேண்டும்" என்று சிறுவன் சொன்னான்.

"உனக்கென்ன தெரியும்?"

"எனக்கு எண்சுவடி முழுதும் நன்றாகத் தெரியும். கணக்குப் பதிவு தெரியும். கூடிய வரை எழுதப் படிக்கத் தெரியும்."

இதைக் கேட்டவுடனே செட்டி நகைத்தான்.

"பார்ப்பாரப் பிள்ளைகள் வந்தால் அவர்களுக்கு ஒரு விஷயம் தெரியாதென்று சொல்லும் வழக்கமே கிடையாது. எதுவும் தெரியும். ஐயரே, போய் வாரும். இவ்வளவு தெரிந்த பிள்ளைகள் நம்மிடம் வேலைக்கு வேண்டாம்" என்று சொன்னான்.

"சரி" என்று மாணி அய்யன் வெளியிற் போனான். "இங்கே வாரும் ஐயரே" என்று மாணிக்கஞ் செட்டி திரும்பவும் அவனைக் கூப்பிட்டான். சிறுவன் திரும்பி வந்தான்.

"ஐயரே! நீர் முந்திச் சித்திரை வீதியில் முருகச் செட்டியார் கடையில் இருக்கவில்லையா?" என்று செட்டி கேட்டான்.

மானி—"ஆம்" என்றான்.

செட்டி—"அங்கிருந்து ஏன் வெளியேறி விட்டீர்?"

மானி—"எனக்கும் முருகச் செட்டியாருக்கும் குணம் ஒத்து வரவில்லை."

செட்டி—"அதென்ன விஷயம் காணும்?"

மானி—"நம்முடைய குணம் அவருக்குப் பிடிக்கவில்லை. அவருடைய குணம் எனக்குப் பிடிக்கவில்லை. அவ்வளவுதான்."

செட்டி, "அதுதான் என்ன விஷயம்?" என்று கேட்டான்.

மாணி—"அதை இவ்விடத்தில் விளங்கச் சொல்வதில் ப்ரயோஜனம் இல்லை."

செட்டி—"ஏன்? குற்றம் உம்முடையதுதானோ?"

மாணி—"என்மேல் ஒரு குற்றமும் இல்லை. ஒரு நாள் என்னைக் கடையில் வைத்துவிட்டு வெளியே போனார். அவருடைய மகனும் அன்று கடைக்கு வரவில்லை. கடையில் என்னைத் தவிர வேறு யாருமே கிடையாது. இப்படியிருக்கையில், சங்குத் தேவன் என்ற மறவன் வந்து, "செட்டியார் எங்கள் வீட்டிலேயிருக்கிறார். ஐந்து துலாம் சர்க்கரை வாங்கிக்கொண்டு வரச்சொன்னார். அவருடைய சொந்தச் செலவுக்கு வேண்டுமாம். தனது பற்றென்று எழுதச் சொன்னார்" என்றான். அந்தச் சங்குத்தேவன் அந்தச் செட்டியாருடன், உயிருக் குயிரான ஸ்நேகம் என்பதும் எனக்குத் தெரியும். நான் எப்படிக் கொடுக்காமலிருப்பது? செட்டியாரிடம் நேரிலே போய் கேட்டுக்கொண்டு செய்யலாமென்றால், கடையை யாரிடம் ஒப்புவித்து விட்டுப் போவது? மறவனிடம் ஒப்புவித்து விட்டு வரலாமென்றாலோ ஐந்து துலாம் சர்க்கரைக்கு நம்பக் கூடாத மனிதனிடம் கடையை விட்டு விட்டு வரலாமா? நான் சர்க்கரையைக் கொடுத்துவிட்டேன். செட்டியார் வந்தார். சங்குத் தேவனுக்குச் சர்க்கரை கொடுத்தாயா? என்று கேட்டார். ஆமென்றேன். எவ்வளவு கொடுத்தாய் என்றார். ஐந்து துலாமென்றேன். யாருடைய உத்தரவின் மேலே கொடுத்தாய்? என்றார். உங்க

ஞடைய உத்தரவின் மேலே என்றேன். நான் எப்போது உன்னிடம் உத்தரவு கொடுத்தேன் என்றார். சங்குத்தேவனிடம் உத்தரவு கொடுத்ததாக அவன் சொன்னு னென்றேன். அவன் சொன்னல் உனக்குப் புத்தி எங்கே போச்சுது என்ருர். எனக்குக் கொஞ்சம் கோபம் வந்துவிட்டது. 'என் புத்தியைப் பற்றிப் பேச்சில்லே. உம்முடைய ஸ்நேகிதன் தானே அவன்? பொய் சொல்லமாட்டா னென்று நினைத்துக் கொடுத்து விட்டேன். குற்றமாக இருந்தால் என்மேல் பற்று எழுதி விடலாம்' என்று சொன்னேன். முருகச் செட்டிக்கு என்மேலே நெடுநாளாகக் கோபம். சிதம்பரத்திலிருந்து வந்திருக்கும் அவருடைய மைத்துனனை என்னுடைய ஸ்தானத்துக்கு வைத்து விட வேண்டுமென்று அவருக்கு வீட்டிலே போதனை ஏறிவிட்டது. என்னை வெளியே போகச் சொல்வதற்கு என்ன உபாயம் செய்யலாமென்று பல நாளாக யோசனை செய்து வந்தார். இதனுல் நான் மரியாதையாகச் சொல்லிய வார்த்தையை அவர் அதிகப்ரசங்கித்தன மென்று பாராட்டி 'ஐயரே! நாளை முதல் வேறு கடையிலே வேலை பார்த்துக் கொள்ளும். இன்று மாலை வீட்டுக்குப் போகும் போது சம்பளம் கணக்குத் தீர்த்து வாங்கிக்கொண்டு போகலாம்' என்று சொன்னர். நான் சரியென்று விலகிவிட்டேன். இவ்வளவுதான் நடந்த சங்கதி."

அப்போது மாணிக்கஞ் செட்டி கேட்கிறுன் :—

"உம்முடைய பெயரென்ன?"

மானி—"என்னுடைய பெயர் மானி அய்யன்."

செட்டி—"உமது பிதாவின் பெயரென்ன?"

மானி—"அவர் பெயர் ஸீதாராமையர்."

செட்டி—"அவர் உயிரோடிருக்கிறாரா?"

மானி—"இல்லை; இறந்து போய்விட்டார்."

செட்டி—"வீட்டிலே தாயார் இருக்கிறார்களா?"

மானி—"ஆமாம்."

செட்டி—"இன்னும் எத்தனை பேருண்டு, குடும்பத்திலே?"

மானி—"வேறு யாரும் கிடையாது. எனக்குக் கூடக் கலியாணம் ஆகவில்லை."

இதைக் கேட்டுச் செட்டி நகைத்தான்.

"ஏன் ஐயரே! கலியாணம் ஆகவில்லையென்று வருத்தந் தானோ? பார்ப்பாரப் பிள்ளைகளுக்கு வயிற்றுச் சோறு தேடு முன்பாகவே பெண்டாட்டி பிள்ளைகள் இல்லாவிட்டால் சுகப்படாது. குடும்பத்தை முதலாவது பெரிதாகச் செய்து வைத்துக் கொண்டால் பிறகு பிச்சை யெடுப்பது சுலபம். ஆள் கூட்டம் அதிகமாகத் திரட்டிக்கொண்டு மேளதாளத்துடன் பிச்சைக்குப் போகலாம்" என்றான்.

மானி—"செட்டியாரே! எனக்கு விவாகத்திற்குப் பணவுதவி செய்யும்படி உங்களிடம் யாசகத்துக்கு வரவில்லை. வேலை செய்தால் சம்பள முண்டோ என்று கேட்க வந்தேன். இல்லையென்றீர்கள்-

நான் திரும்பிப் போனேன். போனவனை மறுபடியும் அழைத்துப் புண் படுத்த வேண்டாம்."

செட்டி—"எத்தனை வயதிலே விவாகஞ் செய்து கொள்வீர்?"

மானி—"அதைப்பற்றி நான் இப்போது யோசிக்கவில்லை."

செட்டி—"உம்முடைய தாயார் யோசிக்கவில்லையா?"

மானி—"எனக்குத் தெரியாது."

செட்டி—"கலியாண விஷயத்திலே தாயார் வார்த்தைதானே கேட்பீர்?"

மானி—"நிச்சயமில்லை."

செட்டி—"பின், என்ன செய்வீர்?"

மானி—"நான் குடும்ப ஸம்ரக்ஷணைக்கு முயற்சி வேண்டி அலைகிறேன். தாங்கள் ஸம்பத்தி லிருக்கிறீர்கள். உங்களுக்கு ஸந்தோஷமாக வார்த்தை சொல்லிக்கொண்டிருக்க நேர மிருக்கிறது. என்னை பகவான் அந்த நிலையில் வைக்கவில்லை."

செட்டி—"ஐயரே! வீட்டுக்குப் போகவேண்டுமா? அவஸரமா? இன்று போஜனச் செலவுகளுக்கு ஒன்றும் வேண்டாமோ?" என்றான்.

இதைக் கேட்டவுடன் மானிக்குக் கோப முண்டாய் விட்டது.

மானி அய்யன் சொல்லுகிறான் :—

"செட்டியாரே, மீனாக்ஷியம்மையின் கிருபையால் நமது வீட்டிலே, இன்னும் அநேக மாதங்களு

க்கு வேண்டிய உணவு சேர்த்திருக்கிறேன். என்னுடைய தாயார் பேருக்குக் கொஞ்சம் நிலமும் உண்டு. இவ்விடத்தில் நமது முயற்சி நிறைவேற வழியில்லாவிட்டால் வேறிடத்துக்குப் போகலாமே, இங்கிருந்து வீண் வார்த்தை சொல்வது நியாயமில்லையென்ற கருத்தின்மேல் நான் அவசரப்பட்டேன். அதைத் தவிர வேறொன்றுமில்லை. இப்போது, தாங்கள் கேள்வி கேட்டு வரும் மாதிரியைப் பார்க்கும்போது, இன்னும் சற்று நேரம் இங்கிருந்து தங்களுக்குச் சில விஷயங்கள் சொல்லி விட்டுப் போகலாமென்ற எண்ணமுண்டாகிறது. நம்மூர் வியாபாரிகள் விஷயமாக, எனக்குள்ள சில கருத்துக்களைத் தங்களைப்போன்ற மனிதரிடம் சொல்லித் தீர்த்தாலொழிய என் மனம் ஆறுதலடைய மாட்டாது. வேலைக்குக் கேட்க வந்த இடத்திலே அதிகப் பேச்சு வைத்துக்கொள்ளக்கூடாதென்று நினைத்தேன். தாங்கள் தொளைத்துத் தொளைத்துக் கேட்பதைப் பார்த்தால், தங்களுக்கு இப்போது உல்லாஸ நேரம் போலே தோன்றுகிறது. ஆகையால் உங்களிடமே சொல்லலாமென்று தீர்மானம் செய்கிறேன்."

அதற்கு மாணிக்கஞ் செட்டி—"சொல்லும் ஐயரே, மனதுக்குள் வைத்துக்கொண்டு குமைய வேண்டாம். பணம் தேடி வைத்தவர்களைத் தேடத் திறமில்லாதவர் எப்படிக் கெல்லாம் சீர்திருத்த உத்தேசங் கொண்டிருக்கிறார்களென்பதைக் கண்டு பிடிப்பதிலே எனக்கும் ருசியுண்டு. சொல்லும், உம்முடைய கொள்கைகளைக் கேட்போம்" என்றான்.

மாணி அய்யன்—“வடக்குத் தேசத்திலிருந்து சில வியாபாரிகள் இங்கே அடிக்கடி வருகிறார்கள். அவர்களுடன் நான் கொஞ்சம் வழக்கப்பட்டிருக்கிறேன். அவர்களுக்குள்ள வியாபாரத் திறமையும் புத்தி நுட்பமும் நம்மூர் வியாபாரிகளிடமில்லை. இது முதலாவது சொல்லவேண்டிய விஷயம். இவ்விடத்து வியாபாரிகளிடம் இருக்கிற கருவத்துக்குத் தகுந்தபடி. புத்திசாலித்தன மில்லை. இனி, இரண்டாவது விஷயம் சொல்லுகிறேன். க்ஷேமத்துடனும், செழிப்புடனும் ஊர் இருந்தாலொழிய வியாபாரம் செழிக்காது. வியாபாரத்துக்கு மஹிமை வரவேண்டுமானால் ஊருக்கே ஒரு மஹிமை வரவேண்டும். இந்த விஷயம் இதுவரை தங்களிடம் எவனும் சொல்லி யிருக்கமாட்டான்.”

மாணிக்கஞ் செட்டி—“எனக்கே தெரியும். இந்த ரஹஸ்யம் யாரும் சொல்லவேண்டியதில்லை. சரி, மேலே கதையை நடத்தும்.”

மாணி அய்யன்—“கதையில்லை, செட்டியாரே, காரியம். இனி மூன்றாவது விஷயம் யாதெனில் இந்த வியாபாரிகளுக்குக் குமாஸ்தாக்களிடம் சரியாக வேலை வாங்கத் தெரியவில்லை. ஏனென்றால், முதற் காரணம், சம்பளம் நேரே கொடுக்க மனம் வருவதில்லை. ஒரு மனிதனால் நாம் லாபமடைய விரும்பினால் அவனுக்கு வயிறு நிறையச் சோறு போடவேண்டும். வெளியிலிருந்து வரும் புத்திசாலியைக் காட்டிலும் குடும்பத்தைச் சேர்ந்த மூடனே விசேஷமென்று நினைக்கக்

கூடாது. மூடனிடம் உன்னுடைய காரியத்தை ஒப்புவித்தால் அவன் அதைக் குட்டிச்சுவராக்கிப் போடுவான். தவிரவும், முகஸ்துதி செய்பவனையும், பொய்ந் நடிப்புக் காட்டுவோனையும், தலையிலே வைத்து ஸாமர்த்திய முள்ளவனையும், யோக்கியனையும் கீழே போடக் கூடாது. ஒரு நாளில் இத்தனை நாழிகைதான் வேலை யுண்டென்ற கட்டுப்பா டிருக்கவேண்டும். அதிக நேரம் வேலை வாங்குவதும், நினைத்தபொழுதெல்லாம் ஆள் விட்டழைப்பதும் குற்றம். இன்னும் சொல்லவா?"

மாணிக்கஞ் செட்டி—"ஐயரே, கொஞ்சம் இலேசாக அடக்கும். குமாஸ்தாக்களிடமுள்ள குற்றத்தைச் சொன்னால், உமக்கு விஷயம் பூராவாகத் தெரியும். குமாஸ்தாக்களிடம் நாணய மில்லை. பணக்காரப் பிள்ளைகள் வெளியே ஒரு கடையில் சிறிய சம்பளம் வாங்கி வேலை பழகப் போவது கௌரவக் குறை வென்ற மூட எண்ணத்தால் கிடைப்பதில்லை. வருவோனெல்லாம் கோவணாண்டி; பணப் பொறுப்பையும் காரியப் பொறுப்பையும் அவர்களிடம் அதிகமாக ஒப்புவிக்க இடமில்லை. அவர்களுக்கு குற்றேவல் செய்து நயவு சம்பாதிப்பதிலே தான் உற்சாக முண்டாகிறது. உழைப்பிலும் கருத்திலும் உற்சாக மில்லை. எப்படியிருந்தாலும், ஏழைக்கு ஏழைப்புத்திதானே ஏற்படுங் காணும்? நமது பந்துவாக இருந்தால் மூடனானாலும் அதிகவஞ்சனை பண்ண மாட்டானென்று நினைக்கலாம்."

மாணி அய்யன்—"அதுதான் நினைக்கக் கூடாது. 'உடன் பிறந்தார் சுற்றத்தாரென் றிருக்க வேண்டாம்'

உடன் பிறந்தே கொல்லும் வியாதி' என்ற வசனம் கேட்டதில்லையோ?"

மாணிக்கஞ் செட்டி—"தெரியுங்காணும்! ஆகவே இரண்டும் கஷ்டமாகிறது. மடத்தாண்டி கையிலே பணத்தைக் கொடுப்பது புத்திசாலித்தனமா? ஊரான் கெடுத்துக் கெடுவதைக் காட்டிலும் நம்மவனால் கெடுவோமே!"

மாணி—"செட்டியாரே, கெடவா வியாபாரம் பண்ணுகிறோம். ஜயிக்க வியாபாரம் செய்கிறோம். ஓரிடத்திலே தக்க கார்யஸ்தன் கிடைக்காவிட்டால் மற்றோரிடத்திலிருந்து தருவித்துக் கொள்ளவேண்டும். எந்தக் கணக்குக்கும் ஒரு தீர்வை யுண்டு; எந்தச் சிக்கலுக்கும் அவிழ்ப்புண்டு."

இவ்வாறு மாணி அய்யன் சொல்லியதைக் கேட்டு, மாணிக்கஞ் செட்டி சிறிது நேரம் யோசனை செய்யலானான்.

மாணிக்கஞ் செட்டி யோசிக்கிறான்:—

"பார்ப்பான் கெட்டிக்காரன். நாம் எடுத்திருக்கும் ஆலோசனைக்கு இவனை உதவியாக வைத்துக் கொள்ளலாம். ஆனால் நமது நோக்கத்தை இவன் தெரிந்து கொள்ளக்கூடாது. தெய்வம் விட்டது வழி. ஒரு கை பார்ப்போம்."

இப்படி யோசித்து மாணிக்கஞ் செட்டி சொன்னான்:—

"ஐயரே, ஒரு மூன்று மாஸத்துக்கு உம்மை ஒரு சோதனைக்காகக் கடையிலே அமர்த்திக் கொள்ளுகிறேன். மூன்று மாஸத்துக் கப்பால் என் மன துக்குப் பிடித்தால் வேலை உறுதிதான். பிடிக்கா விட்டால், விலகிக் கொள்ள வேண்டும். முதல் மூன்று மாஸத்துக்குச் சம்பளம் கிடையாது. உம், ஸம்மதமா?"

பார்ப்பாரப் பிள்ளை தன் மனதுக்குள்ளே "அட லோபிப்பயலே" என்று வைதுகொண்டான்; சொல் லுகிறான்:—"செட்டியாரே, மூன்று மாஸம் வேலை பார்க்கிறேன். பிறகு திருப்தியானால் வேலை உறுதி, இல்லாவிட்டால் அவசியமில்லை. அது உங்களுடைய இஷ்டம்போலே. ஆனால் உழைக்கிற நாள் சம்ப ளம் கையிலே கொடுத்து விடவேண்டும். ஸம்மதமா?" என்றான்.

"என்ன ஐயரே, விறைப்பிலே கேட்கிறீரே?" என்றான் செட்டி.

"ஸாதாரணமாகத்தான் கேட்டேன்" என்றான் பார்ப்பான்.

செட்டி சொல்லுகிறான்—"ஐயரே, போய் ஒரு வாரங் கழித்துத் திரும்பி வாரும். அப்போது அவ சியமானால் சொல்லுகிறேன்."

அதற்குப் பார்ப்பான்—"செட்டியாரே, அவ சியமாக இருந்தால் தாங்கள் சொல்லியனுப்பவேண் டும். நானாக வர ஸௌகர்யப் படாது." என்றான்.

செட்டி கடகடவென்று நகைத்தான். பிறகு சொல்லுகிறான்—"ஐயரே, கொஞ்சம் இலேசாக அடக்கும். நமக்குப் பார்ப்பார் கிடைப்பது கஷ்டமில்லை காணும். உமக்குச் செட்டி கிடைப்பது கஷ்டம்" என்றான்.

"ஐயரே, போய் வாரும்" என்று செட்டி சொன்னான். இவன் சரியென்று வீட்டுக்கு வந்து விட்டான். நாள் இரண்டாயின. மாணிக்கஞ் செட்டிக்கு ஒரு பெரிய ஸங்கடம் வந்து சேர்ந்தது. அவனுக்கு ஒரு மைத்துனன். அந்த மைத்துனன் பெயர் தட்டிக்கொண்டான் செட்டி. இவனை மாணிக்கஞ் செட்டி தனது கார்யஸ்தனாகத் தஞ்சாவூரிலே வைத்திருந்தான். தஞ்சாவூரில் மாணிக்கஞ் செட்டிக்கு ஒரு கடையும் கொஞ்சம் கொடுக்கல் வாங்கலும் உண்டு. தட்டிக்கொண்டான் செட்டி நஷ்டக் கணக்குக் காட்டுவதிலே புலி. ஒரே அடியாகப் பெரிய தொகையை அழுத்திக்கொண்டு கணக்குக் காட்டிவிட்டான். அந்த நஷ்டக் கணக்கு மாணிக்கஞ் செட்டிக்கு வந்தது. ஓலையை விரித்து வாசித்துப் பார்த்தான். வயிறு பகீரென்றது.

"கெடுத்தானே பாவி! கெடுத்துப்போட்டானே! இனி என்ன செய்யப் போகிறோம்" என்று மிகவும் துன்பப்பட்டான். ஆனாலும், ஒருவாறு மனத்தைத் தேற்றிக்கொண்டு, மேலே நடக்க வேண்டிய காரியத்தைப் பார்ப்போமென்று சொல்லி, "இப்போது தஞ்சாவூருக்கு அனுப்ப ஒரு தகுதியான மனுஷன்

வேண்டுமே, யாரை அனுப்புவோம்" என்று யோசித்தான். மானி அய்யருடைய ஞாபகம் வந்தது. 'அவனைக் கூப்பிடுவோம்' என்று தீர்மானம் செய்து கொண்டு ஒரு ஆள் அனுப்பினான். மானி அய்யன் வந்து சேர்ந்தான்.

"வாரும், அய்யரே" என்றான் செட்டி.

"தங்களுடைய உத்தரவுக்குக் காத்துக் கொண்டிருக்கிறேன்" என்று மானி அய்யன் வணக்கத்துடன் சொன்னான்.

"பார்ப்பான் கெட்டிக்காரன்" என்று செட்டி தன் மனதிலே நினைத்துக்கொண்டான்.

ரஸிகசிரோமணி என்னும் கழுதை சொல்லிற்று:—

"மேற்படி மாணிக்கஞ் செட்டி பார்ப்பானை நகைத்ததுபோல் நீயும் என்னை இப்போது நகைக்கிறாய், பின்னிட்டு என்னை நீயே மெச்சுவாய்."

அதற்குக் குயில் சொல்லிற்று :—

"ரஸிக மாமா, உனக்கு ஸங்கீதமும் வராது. கதை சொல்லவும் தெரியவில்லை" என்றது. கழுதைக்குக் கோபம் வந்துவிட்டது. "எனக்கா வராது? எனக்கா? என்னையா சொல்லுகிறாய்? என்னைத்தானா?" என்றது.

"ஆம், ஆம், ஆம், ஆம்" என்று குயில் நான்கு தரம் சொல்லிற்று.

"உனக்கு இத்தனை மதமா?" என்றது கழுதை.

“அட, உண்மையைச் சொல்லக் கூடாதா?” என்றது குயில்.

“சொல்லக்கூடாது” என்றது கழுதை. “சொல்லலாம்” என்றது குயில்.

“நீ அந்த மரத்திலிருந்து கொஞ்சம் இறங்கிக் கீழே வா” என்றது கழுதை.

“நீ தான் தயவு செய்து இங்கே கொம்பின்மேலே ஏறி வா” என்று சொல்லிக் குயில் நகைத்தது.

கழுதை மஹா கோபத்துடன் அங்கிருந்து புறப்பட்டது. குயில், “மாமா, மாமா, கோபித்துக் கொண்டு போகாதே. இங்கே வா. ஒரு பேச்சுக் கேள்” என்று கூப்பிட்டது.

கழுதை திரும்பி வந்தது.

குயில் கேட்கிறது—‘அந்த மாணிக்கஞ் செட்டி கதையை எடுத்தாயே, அதை முழுதும் சொல்லவேண்டாமா?”

கழுதை—“உனக்குத் தெரிய வேண்டிய அளவு சொல்லியாய் விட்டது. மிச்சம் உனக்குத் தெரிய வேண்டிய அவசியமில்லை” என்றது.

குயில்—“பாதிக் கதையிலே நிறுத்தினால் அடுத்த ஜன்மம் பேயாகப் பிறப்பாய். ஸங்கீதம் இதைவிட இன்னும் துர்லபமாகப் போய்விடும்” என்றது.

அப்போது கழுதை பயந்து போய், “பாதிக் கதையிலே நிறுத்தினால் பேய்ப் பிறவியா? உண்மை

தானே? என்று கேட்டது. கழுதைக்கு மறு ஜன்ம நம்பிக்கை மிகவும் தீவிரம்.

குயில் சொல்லிற்று—“ஆமாம். உண்மைதான். எங்கள் தாத்தா சொன்னார்.”

குயிலுடைய தாத்தா சொன்னால் உண்மையாகத் தான் இருக்குமென்று கழுதைக்குச் சரியான நம்பிக்கை ஏற்பட்டது.

“அப்படியானால் கதை முழுதையும் சொல்லி விடலாமா?” என்று கழுதை கேட்டது.

“சொல்லு. அதற்கு நடுவிலே நான் ஒரு சின்னக் கதை சொல்லி முடித்துவிடுகிறேன்.”

“உன் கதைக்குப் பெயரென்ன?” என்று கழுதை கேட்டது.

குயில்—“ரோஜாப் பூக் கதை”

“சொல், சொல்” என்று கழுதை துரிதப்படுத்திற்று. குயில் சொல்லலாயிற்று.

---

## ரோஜாப் பூ என்ற பாம்பின் கதை.

மதுகண்டிகை என்ற குயில் சொல்லுகிறது:—

பழைய காலத்திலே, வஞ்சி நகரத்தில், ஒரு தோட்டத்து வேலியிலே, ஒரு பாம்பு தனது பெண் குட்டியுடன் வாசம் செய்தது. அந்தக் குட்டி மிகவும் அழகாக இருந்ததனால் அதற்கு ‘ரோஜாப் பூ’ என்று பெயர்.

ஒரு நாள் இரவிலே தாய்ப் பாம்பும், குட்டியும் புதரிலிருந்து வெளிப்பட்டுக் காற்று வாங்கிக்கொண் டிருக்கையில், குட்டி தாயை நோக்கிக் கேட்கிறது :—

"அம்மா! நம்மை எல்லாரும் ஏன் பகைக்கிறார் கள்? நம்மை வீதியிலே எந்த மனிதன் கண்டாலும் கல்லால் எறிகிறானே, காரண மென்ன?"

தாய் சொல்லுகிறது :—

"குழந்தாய், நமது ஜாதிக்குப் பல்லிலே விஷம். நாம் யாரையேனும் கடித்தால் உடனே இறந்துபோய் விடுவார்கள். இதனால் நம்மிடத்திலே எல்லாருக்கும் பய முண்டாகிறது. பயத்திலிருந்து பகை யேற்படும். அதுதான் காரணம்."

இங்ஙனம் தாய்ப் பாம்பும் குட்டியும் வார்த்தை சொல்லிக் கொண்டிருக்கையில் பக்கத்திலே ஒரு முனிவர் நடந்து சென்றார். அவர் இந்தப் பாம்பு களைப் பார்த்துப் பயப்படவில்லை. ஒதுங்கவில்லை. திரும் பிக்கூடப் பார்க்கவில்லை. அவர் பாட்டிலே போனார். இதைப் பார்த்து ரோஜாப் பூ மிகவும் ஆச்சரியப்பட் டுத் தனது தாயிடம் கேட்கிறது :—

"ஏனம்மா, இவர் மாத்திரம் பயப்படாமல் போகிறாரே, அதென்ன?"

தாய் சொல்லுகிறது :—"இவர் சித்தர். நாம் கடித்தால் சாகமாட்டார். இவருக்கு நம்மிடத்திலே பயமில்லை. ஆகையால் பகை யில்லை. இவர் பெரிய

ஞானி. இவர் வரங் கொடுத்தாலும் பலிக்கும்; சாப மிட்டாலும் பலிக்கும்." இவ்வாறு தாய் சொல்லியதைக் கேட்டவுடனே குட்டி சிறிதுநேரம் ஏதோ யோசனை செய்து பார்த்துப் பிறகு "அம்மா, இவர் எங்கே குடி யிருக்கிறார்?" என்று கேட்டது.

"அதோ தெரிகிறது பார், தூரத்திலே ஒரு கிராமம். அதற்குக் கிழக்கே ஒரு சுனையும் பக்கத்திலே ஒரு தோப்பும் இருக்கின்றன. அந்தத் தோப்பிலே இவர் குடியிருக்கிறார்" என்று தாய் சொல்லிற்று.

சில நாளுக்கப்பால் இந்த ரோஜாப் பூ என்ற பாம்புக் குட்டி தனியே முனிவர் இருக்கும் இடத்துக்கு வந்து சேர்ந்தது. அவர் ஒரு மரத்தடியிலே உட்கார்ந் திருந்தார். காலிலே போய் விழுந்தது. "என்ன வேண்டும்?" என்று கேட்டார்.

"ஒரு வரம்" என்றது.

"என்ன வரம்?" என்று கேட்டார்.

"நான் நினைத்தபோது மிகவும் அழகான தொரு மனிதப் பெண்ணாக மாறவேண்டும்" என்று பாம்புக் குட்டி சொல்லிற்று.

"எதன் பொருட்டு?" என்றார்.

"இந்த ஜன்மத்தை எல்லாரும் பகைக்கிறார்கள். ராஜகுமாரர் பார்த்தாலும் பிரியப்படத் தக்க ரூபம் எனக்கு வேண்டும்" என்றது.

பாம்பின் நோக்கத்தைத் தெரிந்துகொண்டு முனிவர் சொல்லுகிறார் :—"சரி, உனக்கு அப்படியே நினைத்தபோது மனுஷரூபம் வரும். ஆனால் எவனிடத்தில் வார்த்தை சொல்லும்போது உனக்குப் பயமேற்படுகிறதோ அவனுடன் அதிக நேரம் தங்கக் கூடாது. தங்கினால் அவனாலே உனக்கு மரணம் நேரிடும்" என்று விடை கொடுத்தனுப்பினார். பின்னொரு நாள் இரவில் ரோஜாப் பூ மனிதப்பெண் வேஷந்தரித்துக்கொண்டு, வஞ்சி ராஜாவின் அரமனையைச் சார்ந்த சோலையிலே ராஜகுமாரன் விளையாடும் நிலா முற்றத்துக் கருகே போய் நின்றுகொண்டிருந்தது. அங்கு ராஜகுமாரன் வந்தான். இந்தப் பெண்ணை நோக்கி இவள் அழகை வியந்து "நீ யார்?" என்று கேட்டான்.

"சிங்கள ராஜன் மகள்" என்று ரோஜாப் பூ சொன்னாள். ராஜகுமாரன் திகைத்துப் போய் "என்னது! சிங்கள ராஜ்யமா? இந்த நேரத்திலே இங்கு தனியே எப்படி வந்தாய்? யாருடன் வந்தாய்?" என்றான்.

அதற்கு ரோஜாப் பூ :—"எனக்கொரு முனிவர் ஒரு மந்திரங் கற்றுக் கொடுத்திருக்கிறார். அதைக் கொண்டு நினைத்த வேளையில் நினைத்த இடத்திற்கு வான் வழியாகப் பறந்து செல்வது வழக்கம். இந்த வழியே பறந்து வருகையில் நிலாவொளியிலே இந்தச் சோலையும் நிலாமுற்றமும் கண்ணைக் கவர்ந்தன. இங்கு சற்றே நின்று பார்த்துவிட்டுப் போவோமென்று வந்தேன்" என்றாள்.

இதற்குள் ராஜகுமாரன் இவளுடைய அழகிலே மோஹித்துப்போய் "உன்னைப் பார்த்தால் தேவ ரம்பை அல்லது நாககன்னிகை போலே தோன்று கிறது" என்றான். "நாககன்னிகை" என்ற வார்த் தையைக் கேட்டவுடனே ரோஜாவுக்கு உடம்பெல் லாம் படபடவென்று நடுக்கங் கண்டது.

"என் பயப்படுகிறாய்?" என்று ராஜகுமாரன் கேட்டான். ரோஜாவுக்கு முனிவர் சொன்னவார்த்தை ஞாபகம் வந்தது. இனி இங்கே நின்றால் அபாயம் நேரிடுமென்று பயந்து மிக வேகத்துடன் ஓடி மறைந்து போய்விட்டது பாம்புக்குட்டி. பின்னொருநாள், மாலை வேளையில் மரஞ்செடியில்லாத பொட்டல் வெளியிலே காட்டுப் பாதைக்கு ஸமீபத்தில் ஆழ்ந்த கிணறொன் றின் அருகேயுள்ள புதரில் ரோஜாப்பூ தனியாக இருக்கும்போது, அவ்வழியே யௌவனமும் அழகு முடைய ஒரு புரோஹிதப் பிராமணன் போய்க்கொண் டிருந்தான். தூரத்தில் வரும்போதே அவனைக் கண்டு ரோஜாப் பூ பெண் வடிவமாக மாறி நின்றது. பார்ப் பான் பார்த்தான். நடுக்காடு; தனியிடம்; மாலைநேரம்; இவளழகோ சொல்லி முடியாது. 'இவள் யாரடா இவள்?' என்று யோசனையுடன் சற்றே நின்றான். ரோஜாப்பூ அவனைக் கூப்பிட்டு, "ஐயரே, தாகம் பொறுக்க முடியவில்லை. கிணற்றில் இறங்கப் பயமாக இருக்கிறது. நீர் இறங்கி உமது கையிலுள்ள செம் பிலே சிறிது தண்ணீர் கொண்டுவந்து கொடுத்தால் புண்ணியமுண்டு" என்றாள். பார்ப்பான் ஸந்தோ

ஷத்துடன் கிணற்றிலே யிறங்கப் போனான். தண்ணீருக்கு மேலே ஒரு நீர்ப்பாம்பு தென்பட்டது. உடனே அவன் ரோஜாவை நோக்கித் திரும்பி, "ஆஹா! பாம்பைப் பார்த்தாயோ?" என்றான்.

ரோஜாவுக்கு உடம்பெல்லாம் வெயர்த்துப் போய்க் கையும் காலும் நடுங்கலாயின.

"ஏன் நடுங்குகிறாய்?" என்று பார்ப்பான் கேட்டான். ரோஜாப்பூ அங்கிருந்து விரைவாக மறைந்தோடிவிட்டது. இவ்விதமாக ரோஜாப்பூ யாரை மயக்கி வசப்படுத்திக்கொள்ள விரும்பினாலும் ஒரு பயம் நேரிட்டுக்கொண்டே யிருந்தது. கடைசியாக அவளுக்கு (அந்தப் பாம்புப் பெண்ணுக்கு) 'கர்த்தப ஸ்வாமிகள்' என்றொரு ஸந்நியாசி வசப்பட்டான்.

இவ்வாறு மதுகண்டிகை என்னும் குயில் சொல்லி வருகையில் ரஸிகசிரோமணி, 'அந்த ஸந்நியாஸி யார்?' என்று கேட்டது.

---

## கர்த்தப ஸ்வாமிகள் என்ற ஆண்டி கதை.

குயில் சொல்லுகிறது:—

"கேளாய் ரஸிகமாமா, கங்காதீரத்தில் ராமநகரம் என்ற ஊரில் ஒரு வண்ணான் வீட்டிலே 'பக்திவிஸ்தாரன்' என்றொரு கழுதை இருந்தது. தாய் சொன்ன வார்த்தை தட்டாது. யார் சொன்ன வார்த்தையும் தட்டாது. சிறு பிள்ளைகள் கல்லெறிந்தால் கனைத்துக்

கொண்டு ஓடவேண்டாமோ? அதுகூடச் செய்யாது. பொறுமையே அவதாரம் செய்தாற்போன்ற கழுதை. இந்தக் கழுதை ஒருநாள் நதிக் கரையிலே புல் மேய்ந்துகொண்டிருக்கையிலே பக்கத்திலிருந்த ஒரு மரத்தின்மேல் இரண்டு காக்கைகள் பின்வருமாறு சம்பாஷணை செய்துகொண்டிருந்தன. அந்த வார்த்தைகளை யெல்லாம் கழுதை கவனத்துடன் கேட்டது. ஒரு காகம் சொல்லுகிறது :—

"பிரயாகையில், கங்கையும் யமுனையும் வந்து சேரும் இடத்தில் ஒருவன் போய் விழுந்து பிராணனை விடும்போது அடுத்த ஜன்மத்தில் என்ன பிறவி வேண்டுமென்று நினைத்துக்கொள்ளுகிறானோ, அதே பிறவி அவனுக்கு நிச்சயமாகக் கிடைக்கும். இந்த விஷயம் உனக்கு இதுவரை கேள்வியுண்டா?"

இதற்கு இரண்டாங் காகம் :—"உனக்கு யார் சொன்னார்கள்?" என்று கேட்டது.

முதற் காகம் :—"இன்னார் சொன்னார்களென்பதை உன்னிடம் சொல்லக்கூடாது. அது ரஹஸ்யம். ஆனால் உண்மைதான், எனக்கு நிச்சயமாகத் தெரியும்."

இரண்டாங் காகம் :—"உன்னிடம் சொல்லியது யார்?" என்று மறுபடியும் வற்புறுத்திக் கேட்டது.

முதற் காகம் :—"அட நம்பிக்கையில்லாத ஜந்துவே! உனக்கு நல்ல கதி ஒரு நாளும் ஏற்படாது! யார் சொன்னதென்று கேட்கிறாய்? என்னுடைய குரு

சொன்னார். அவரைப் போன்ற ஞானி பிரம லோகத்திலே கூடக் கிடையாது. ஒரு காலத்தில் பிரம தேவனுக்குப் படைப்புத் தொழில் சம்பந்தமாக ஒரு சந்தேக மேற்பட்டது. உடனே பிரம்மா நாரதரை அனுப்பி என் குருவை அழைத்து வரச் சொல்லித் தமது சந்தேகத்தை நிவர்த்தி செய்துகொண்டார்." இந்த வார்த்தையைக் கேட்டவுடனே இரண்டாங் காகம் கலகல வென்று சிரித்து, அங்கிருந்து பறந்தோடிப் போய்விட்டது. சம்பாஷணை முழுதையும் மிகுந்த சிரத்தையுடன் கேட்டுக்கொண் டிருந்த கழுதை உடனே அவ்விடத்திலிருந்து புறப்பட்டு, இராப் பகலாக நடந்து "திரிவேணி சங்கம்" (அதாவது, பிரயாகையில் கங்கையும் யமுனையும் கூடுமிடம்) வந்து சேர்ந்தது.

அந்த இடத்திலே போய்க் கழுதை பின்வருமாறு நினைத்துக்கொண்டு முழுகிப் பிராணனை விட்டது:—

"இந்த வடதேசத்திலே எனக்கு ஸந்தோஷமில்லை. அடுத்த ஜன்மம் தென்னாட்டிலே பிறக்க வேண்டும். ஒருவிதமான குடும்பத் தொல்லையு மில்லாமல், எல்லா இடங்களிலும் இஷ்டப்படி ஸஞ்சாரம் செய்து கொண்டு, எல்லா ஜனங்களும் இனாமாகப் போடும் போஜனத்தைத் தின்றுகொண்டு, சந்தோஷத்துடன் வாழும் ஒரு மனித ஸந்யாஸியாகப் பிறக்க வேண்டும். ஆனால் இந்தக் கழுதைப் புத்தி மாறாதபடி இருக்கவேண்டும். வெளிக்கு ஸந்யாஸிபோலிருந்து எல்லாரும் உபசாரங்கள் செய்தபோதிலும், என் மனதிற்

குள்ளே 'நாம் கழுதை' யென்ற ஞாபகம் நிலைபெற்றிருக்க வேண்டும்."

இவ்விதமான தியானத்துடன் இறந்துபோன கழுதை மறுஜன்மத்திலே தென்னாட்டில் ஒரு ஊரில் ஒரு நல்ல குடும்பத்திலே ஆண் குழந்தையாகப் பிறந்து வளர்ந்தது. தாய் தந்தையர் இந்தப் பிள்ளைக்கு "முத்துசாமி" என்று பெயர் வைத்தார்கள். முத்துசாமி மனத்திலே தான் கழுதையென்ற ஞாபகம் பரிபூர்ணமாக இருந்தது. பூர்வ ஜன்மத்தைப்பற்றி வேறு யாதொரு நினைவுமில்லை. ஆனாலும், தான் மற்ற மனிதர்களைப்போலில்லை யென்பதும், உள்ளுக்குள்ளே கழுதை யென்பதும் அவன் சித்தத்தை விட்டு நீங்கவில்லை. பதினாறு வயதாகு முன்பாகவே இவன் ஸந்யாஸியாகிக் காவி வஸ்திரம் தரித்துக்கொண்டு ஊரூராகப் பிச்சை வாங்கியுண்ணும் துறையிலே இறங்கிவிட்டான். முத்துசாமி என்ற பெயரைத் துறந்து கர்த்தப ஸ்வாமிகள் என்று பெயர் வைத்துக்கொண்டான். கர்த்தபமென்றால் ஸம்ஸ்க்ருத பாஷையில் கழுதைக்குப் பெயர். இவனுக்குத் தமிழ், ஸம்ஸ்க்ருதம் இரண்டு பாஷையும் தெரியும். வயிரவர் உபாஸனை யுண்டு. உலகத்திலுள்ள பாஷைகளெல்லாம் ஸம்ஸ்க்ருதத்திலிருந்து வந்ததாகவும், அது தமிழிலிருந்து முளைத்ததாகவும் ருஜூப்படுத்தி ஒரு புஸ்தக மெழுதினான். இப்போது பரத கண்டத்திலே நாலாயிரம் ஜாதிகளாகக் குறைந்து போய்விட்டது நியாயமில்லை யென்றும், ஆதியிலே நாற்பதினாயிரம் ஜாதிப் பிரிவுகள்

இருந்தன வென்றும், அந்த ஏற்பாட்டை மறுபடி ஸ்தாபனம் செய்ய வேண்டுமென்றும், ருஜுப்படுத்தி மற்றொரு நூல் செய்யுளாக எழுதினான். நிகண்டைப் பார்த்து அதிலுள்ள தெய்வப் பெயர்களை யெல்லாம் ஒன்று சேர்த்து, இவை யெல்லாம் தன்னுடைய இஷ்ட தேவதையாகிய வயிரவ மூர்த்தியின் திரு நாமங்களென்று சொல்லி ஒரு நாமாவளி ஏற்படுத்தினான். பூணூல் போடும் வரை, பிராம்மணப் பிள்ளை சூத்திரனாகவே யிருப்பதால், அவன் பார்க்க மற்ற பந்துக்கள் ஆஹாரம் பண்ணுவது கொடிய அநாசார மென்று ஒரு கக்ஷி கொண்டுவந்தான். பூணூல் போடாத பிராமணக் குழந்தைக்குத் தாய் பால் கொடுக்கும்படி நேரிட்டால், பின்பு ஸ்நானஞ் செய்யாமல் வீட்டுப் பாத்திரங்களைத் தொடக்கூடாது. அப்படித் தொட்டால் அவள் ரௌரவாதி நரகங்களுக்குப் போவதுடன், அந்தக் குடும்ப முழுமைக்கும் அதோகதி நேரிடுமென்று ஸ்தாபனம் செய்தான். இவனுக்கு வேண்டிய மட்டும் சிஷ்யர்கள் சேர்ந்து விட்டார்கள். பணமும் சேர்ந்தது. ஒரு மடம் கட்டினான். "நாற்பதினாயிர-ஜாதிபேத-பூர்வதிராவிட-வயிரவ-கர்த்தப - பிராமண - சிசு - பஹிஷ்கார - மஹா - மடம்" என்று அந்த மடத்துக்குப் பெயர் வைத்தான்............இந்த மடத்துக்கு ரோஜாப்பூ என்ற பாம்புப் பெண் வந்து சேர்ந்தாள்.

## கர்த்தப ஸ்வாமியைப் பாம்புப் பெண் வசப்படுத்தியது.

தென்னாட்டிலே சாலிவாடி புரத்தில் கர்த்தப ஸ்வாமி மடங் கட்டித் தனது சீடர்களுடன் வாழ்ந்து கொண்டிருக்கையில் அங்கே ரோஜா என்ற பாம்புப் பெண் வந்தாள். எலுமிச்சம் பழத்தைப் போலே நிறம்; மானைப்போலே விழி; பூர்ண சந்திரன்போலே முகம்; உடம்பிலே லாகவமும், கட்டும், பெண் புலி யைப் போலே.

ஒரு நாள் மாலை நேரம்; சாமியார் பகற் சோறு தின்று, அந்த சிரமத்தினால் நாலைந்து மணி நேரம் தூங்கி விழித்த பிறகு, அந்த ஆயாஸம் தீரும்பொருட்டு நாலைந்து தோசைகளைத் தின்று, அரைப்படி பாலைக் குடித்துவிட்டு, வாயிலே வாஸனைப் பாக்குப் போட்டு மென்றுகொண்டு, இரண்டு சீடர்களிடம் பிரசங்கம் செய்துகொண்டிருக்கிறார்.

சாமியார் சொல்லுகிறார்:—

"கேளீர், சீடரே,

'ஜன்மனா ஜாயதே சூத்ர:
கர்மணா ஜாயதே த்விஜ:'

பிறக்கும்போது சூத்திரன்; பூணூல் போட்ட பிறகுதான் பிராமணன். இந்த விதிக்கு விலக்கே கிடையாது. உபநயனம் செய்த பிறகுதான் பிரா மணப் பிள்ளைக்கு பிராமணத்துவம் உண்டாகிறது. இதில் சந்தேகமில்லை. உபநயனம் செய்யும்வரை அவ

னுக்கு எச்சில், தீண்டல் ஒன்றுமேயில்லை. சண்டாளனைப் போல் வளருகிறான். அப்படிப்பட்ட குழந்தையை அவனுடைய தாயார் தீண்டிவிட்டுப் பிறகு ஸ்நானம் செய்யாமல், மடைப்பள்ளியைத் தொட்டுச் சமையல் செய்தால், அந்த அன்னம் ஸ்வாமி நைவேத்தியத்துக்கு உதவாது. அவ்விதமான அன்னத்தை ஸ்வாமிக்கு நைவேத்தியம் செய்வோர் குளிக்கப் போய்ச் சேறு பூசிக்கொள்வது போலே, பூஜை பண்ணப்போய்ப் பாவத்தைத் தேடிக்கொள்ளுகிறார்கள்."

என்றிவ்வாறு, பல நியாயங்களைக் காட்டிச் சாமியார் தான் எடுத்த கக்ஷியை ஸ்தாபனம் செய்து கொண்டிருந்தான். சீடர்கள் மிகவும் பக்தி சிரத்தையுடன் தலையை அசைத்தசைத்துக் கேட்டுக்கொண்டிருந்தார்கள். இந்தத் தருணத்திலே பாம்புப் பெண் வந்து சாமியாருக்கு நமஸ்காரம் பண்ணினாள்.

"உட்காரம்மா" என்று சாமியார் மெதுவான குரலிலே சொன்னார். உட்கார்ந்தாள். "நீ யார்?" என்று சாமியார் கேட்டான். பாம்புப் பெண் சொல்லுகிறாள்:—

"தாமரைப் பூ சேற்றிலே பிறக்கிறது. வண்டு காட்டிலே பிறக்கிறது. தாமரையைத் தேடி வண்டு வருகிறது. நான் சிங்கள தேசத்து ராஜன் மகள். பரதகண்டத்திலே, பற்பல இடங்களில் யாத்திரை செய்துகொண்டு, இந்த நகரத்துக்கு வந்து சேர்ந்தேன். அம்மன் சன்னிதித் தெருவிலே இறங்கியிருக்

கிறேன். இந்த ஊரில் தாங்கள் பெரிய பக்திமா னென்றும், யோகி யென்றும், ஞானி யென்றும் கேள் விப்பட்டேன். தங்களிடம் வந்து ஆத்மா கடைத் தேறும்படியான மந்திரோபதேசம் பெற்றுக்கொண்டு போகலாமென்ற கருத்துடன் வந்தேன்" என்றாள். சாமியாருக்கு உச்சந் தலையிலே பூமாரி பொழிந்தது போல், உடம்பெல்லாம் புளகமாய்விட்டது. சிங்கள தேசத்து ராஜன் மகள் சீடப்பெண்ணாக வந்தால் யாருக்குத்தான் ஆனந்தமேற்படாது ?

"இப்போதே மந்திரோபதேசம் பண்ணட்டுமா?" என்று சாமியார் கேட்டார். அவசரம் வாரிக்கொண்டு போகிறது, அவனுக்கு !

அதற்கு ரோஜா சொல்லுகிறாள்:—

"நல்ல நாள், நல்ல லக்னம் பார்த்துச் செய்ய வேண்டும். மேலும், குருவுக்குப் பாதகாணிக்கை வைக்க ஏற்பாடுகள் செய்யவேண்டும்; நாள் பார்த்துச் சொல்லுங்கள்" என்றாள். சாமியாருடைய சந்தோஷம் கரை கடந்து விட்டது. சாமியார் சோதிடம் பார்க் கிறார்:—

"இன்றைக்கு என்ன கிழமை ? ஞாயிற்றுக்கிழ மை. நாளைக்குத் திங்கட்கிழமை, ஸோமவாரம், நல்ல நாள். காலையிலே ஏழரை மணி முதல் ஒன்பது மணி வரைக்கும் ராகுகாலம்; அது முடிந்தவுடனே நல்ல லக்னம் வருகிறது. செவ்வாய் மிதுன ராசியிலே பிர வேசிக்கிறான். அவனைக் குரு பார்க்கிறான். அப்போது

மந்திரம் கூறுவதற்குப் பொருத்தமான வேளை. 'சுப யோக - சுபகரண - ஏவங்குண - விசேஷண - விசிஷ்டா யாம்' என்று சாஸ்திரம் முறையிடுகிறது. நம்முடைய மந்திரமோ வைரவ மந்திரம். எல்லா விதமான தேவ நாமங்களும் வைரவ நாமத்துக்குள் அடங்குமென்பதற்குச் சூடாமணி நிகண்டிலே தக்க ஆதார மிருக்கிறது. 'முத்தனே, குமாரன், பிள்ளை' என்று நிகண்டுக்காரர் சொல்லுகிறார். இந்த மந்திரோபதேசம் பெற்றவருக்கு இந்த ஜன்மத்திலே முத்தி" என்று சாமியார் சொல்லி நிறுத்தினார். ரோஜா ஒரு புன்சிரிப்புக் காட்டினாள். சாமியாருடைய ஆனந்தம் ஏறக்குறைய ஜன்னி நிலையிலே வந்து நின்றது. சாமியார் பின்னும் சொல்லுகிறான்.

"கேளாய், சிங்கள தேசத்து ராஜகுமாரியே! உன் பெயரென்ன? ரோஜாவா? ஆ ஹா ஹா! குலத்துக்கும் ரூபத்துக்கும் பொருத்தமான பெயர். கேளாய், ரோஜாவே, ஜன்மங்கள் கோடானு கோடி.

'புல்லாகிப் பூடாய்ப் புழுவாய், மரமாகிப்
பல்விருக்க மாகிப் பறவையாய் பாம்பாகிக்
கல்லாய், மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுரராகி முனிவராய்த் தேவராய்
செல்லாஅ நின்றவித் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன், எம்பெருமான்'

என்று திருவாசகம் சொல்லுகிறது."

றட்டி உன்னை அவளிடம் போசனை கேட்கும்படி தூண்டி விடும் பொருட்டாக அந்த வார்த்தை சொன்னேனே யல்லாது வேறொன்றுமில்லை. ஆனாலும் உன் வார்த்தைகளில் இருந்த சில அபிப்பிராயங்களை நீக்க விரும்புகிறேன். கீழ் ஜாதி ஸ்திரீயை சிங்காரித்துப் புருஷன் மணம் செய்வது கூடாதென்று சொல்லுகிறாய்? வேசி மூலம் நதிமூலம் விசாரணை செய்யக்கூடாதென்று கேள்விப்பட்டிருக்கிறாயா? மேற்குல ஜாதிகள் கீழ்க்குல ஸ்திரீகளை மணந்து பல ஜாதி வம்சங்கள் பெருகியிருக்கின்றன. பகவான் ஸ்ரீமந் நாராயணன், அகண்டாரிதன், ஸர்வஜ்ஞாத்மா, பூர்ணைச்வர்யன், உலகத்துக்கு மூதாதை அவனே ஸ்ரீ வில்லிபுத்தூர் பட்டர் மகளையும், டில்லி பாதுஷா மகளையும் மணஞ் செய்து கொண்டு ஸ்ரீரங்கத்தில் துயில்கிறான். ஹே, உத்தண்டிராஜனே, ஜாதி பேதமா கற்பிக்கிறாய்? சிங்கம் மேல் ஜாதியென்றும், நரி கீழ் ஜாதியென்றும் நீ நினைக்கிறாயா? அப்படித்தான் அந்த மூடனாகிய வீரவர்மன் நினைத்தான். அது நிற்க.

“ஹே, உத்தண்டிராஜனே, வயதில் மூத்த பெண்ணை இளைய பிள்ளை மணம் செய்து கொள்ளத் தகாதென்று சொன்னாய்! அது மஹா மூடத்தனமான வார்த்தை! புதிதாக வருகிற ஒவ்வொரு இந்திரனுக்கும் ஆதிமுதல் பழைய இந்திராணிதான் மாறாமல் இருந்து வருகிறாள். கூரிச்சி என்று சொல்லி என்னை நகைத்தாய், உடம்புக்கா பிரேமை செய்கிறோம். அரசனே, உயிருக்கு அன்பு செலுத்துகிறோம். இதுவெல்லாம் நீ அறியாத விஷயம். இது நிற்க.

"உத்தண்டிராஜனே, இவ்வளவுக்கு மேலும் உனக்கு வெற்றி பெற உபாயங் கற்றுக்கொடுத்தால் நீ எனக்கு வேறே என்ன கைம்மாறு தருவாய்?" என்று கேட்டது.

அப்போது உத்தண்டி ராஜன் சொல்லுகிறது:— "நீ விவாஹத்தைத் தவிர வேறென்ன தானம் கேட்ட போதிலும் கொடுப்பேன்" என்றது. அதற்கு நரிச்சி நல்லதங்கை சொல்லுகிறது.—"நீ முதல் தடவையும் இப்படித்தான் எது கேட்டாலும் கொடுப்பேன் என்றாய். பிறகு வாக்குத் தவறினாய். நீ மறுபடியும் வாக்குத் தவறலாம் என்ற ஸந்தேஹம் எனக்கு ஜனிக்கிறது" என்றது. அப்போது உத்தண்டி—"பயப்படாதே! வேறென்ன கேட்டாலும் தருகிறேன்." என்றது.

"உன்னுடைய ராஜ்யத்தில் பாதி கொடுப்பாயா?" என்று நரிச்சி நல்லதங்கை கேட்டாள். உத்தண்டியும் இதைக் கேட்டு மனவருத்த மடைந்தான். ராஜ்யத்தில் பாதி கொடுக்க அவனுக்குப் பெரும்பாலும் ஸம்மதமில்லை. ஆனாலும் என்ன செய்யலாம்? தனது சேனாதிபதிகள் இனியேனும் போரில் வெல்வார்களென்ற நம்பிக்கை அவனுக்குக் கிடையாது. எப்படியேனும் நரிச்சி நல்லதங்கை ஒரு வழி கண்டுபிடித்துச் சொல்வாளென்றும் அதனால் தனக்கு வெற்றி யேற்படலாமென்றும், அவனுக்கு நம்பிக்கை யிருந்தது. மேலும் இரண்டாம் முறை வாக்குத் தவற வெட்கப்பட்டான். ஆதலால் அவளிடம் நீ சொல்லுகிற உபா

யத்தை அநுஸரித்து அதனால் எனக்கு வெற்றி கிடைத்தால் உனக்குக் கட்டாயம் என் ராஜ்யத்தில் பாதி தருவேனென்று வாக்குக் கொடுக்கிறான்.

அப்போது சரிச்சி சொல்லுகிறாள்:—

"கொலம்பஸ் கோழி முட்டையை உடைத்துக் காட்டின மாதிரி வந்து சேரும்" என்றாள்.

"அதென்ன வர்த்தமானம்?" என்று உத்தண்டி என்ற சிங்கராஜன் கர்ஜனை செய்தது.

நல்லதங்கை சொல்லுகிறாள்:—

"ஒரு கோழி முட்டையை, அட போ, கொலம்பஸ் என்கிற பூகோளப் பெரியாரும் அவனோடு சுமார் முப்பத்தேழு ஸ்நேஹிதர்களும் ஒரு நாள் போஜனம் செய்துகொண்டிருந்தார்களாம். அப்போது கொலம்பஸ் கேட்டான்:—" இங்கே யாராவது ஒரு கோழி முட்டையை மேஜையின் மேல் யாதொரு ஆதாரமுமில்லாமல், அசைவில்லாமல் நட்டமாக நிறுத்திவைக்கக் கூடுமா? நான் செய்வேன். வேறு யார் செய்வார்?" என்றான். அப்போது கொலம்பஸ் உடன் இருந்த நண்பர் பலவிதங்களில் முயற்சி பண்ணியும் கோழி முட்டையை மேஜைமேல் ஆதாரமில்லாமல் நட்டமாக நிறுத்த ஸாத்யப்படவில்லை. கடைசியாக, அவர்களெல்லாம் தோல்வியை ஒப்புக்கொண்டார்கள். அப்போது கொலம்பஸ் எழுந்து நின்றான். கோழி முட்டையைக் கையில் எடுத்தான். ஒரு ஓரத்தை சிவிவிட்டு, மேஜைமேல் நட்டமாக நிறுத்திவிட்டான்.

நண்பர்களிலே பலர் அவனுடைய சமத்காரத்தைப் பார்த்து ஆச்சர்யப்பட்டார்கள். ஆனால் சில மூடர்கள் மாத்திரம் 'ஓஹோ இதென்ன ஏமாற்றுகிற மாதிரி. கோழி முட்டையில் ஓரத்தைத் துளிகூட உடைக்காமல் நிறுத்தவேண்டுமாக்கும் என்று நாங்கள் நினைத்திருந்தோம். உடைத்து நிறுத்தலாம் என்று முதலிலேயே சொல்லியிருந்தால் நாங்கள் அப்போதே செய்திருக்க மாட்டோமா?' என்று சொல்லி முணுமுணுத்தார்களாம்" என்று நரிச்சி சொன்னாள். "இவ்வளவு தானா?" என்று உத்தண்டி கேட்டான். "ஆமாம்? இவ்வளவுதான்" என்று நரிச்சி சொன்னாள். அப்போது உத்தண்டி சொல்லுகிறான்:—"அப்படியானால் கொலம்பஸ் சுத்த அயோக்யன்! அவனுடைய கெட்டிக்காரத்தனத்தைப் பார்த்து ஆச்சர்யப்பட்ட ஸ்நேஹிதர்கள் பரம மூடர்கள்" என்றான். அதற்கு நரிச்சி நல்லதங்கை சொல்லுகிறாள்:—

"அந்த மாதிரிதான் எனக்கும் சொல்லிப் பாதி ராஜ்யங் கொடுப்பதாக வாக்களித்ததை அழித்துப் போடுவாயோ?" என்றான்.

உத்தண்டிராஜன்:— "மாட்டேன்! நீ யோசனை சொல்லு. அது எத்தனை ஸாமான்யமாகப் பின்பு புலப்பட்டபோதிலும் அதனால் வெற்றி கிடைப்பது மெய்யானால் உன்னிடம் நன்றி மறக்காமல் உனக்குப் பாதி ராஜ்யம் கொடுத்து விடுவேன்" என்றது.

அப்போது நரிச்சி நல்லதங்கை சொல்லுகிறாள்:—

"உத்தண்டி மஹாராஜனே, தங்களுடைய மாமனர் குண்டோதர ராஜனுக்கு ஒரு காயிதம் எழுதிக்கொடுங்கள். அதில் வேறொன்றும் எழுதக்கூடாது. ஆபத்து ஸமயம், சைந்நியம் வேண்டும், நரிச்சி நல்லதங்கையை நம்பு என்று மூன்று வரி மாத்திரம் எழுதினல் போதும். இப்போதே எழுதிக்கொடு. நான் அப்பால் உனக்கு ஸைந்யம் கொண்டுவந்து வீரவர்மனுடைய மமதையையும், அஹங்காரத்தையும் தொலைக்கிறேன். உன் பெயரை, சிங்க சரித்திரத்தில் எக்காலத்திலும் அழியாமல் நிறுத்திவைக்கிறேன்" என்றாள்.

அப்படியே உத்தண்டி ஓலை எழுதி நரிச்சி கையிலே கொடுத்தான். அதை வாங்கிக்கொண்டு கூனிச்சியாகிய நரிச்சி நல்லதங்கை பல்லக்குப் பரிவாரங்களுடன் உத்தண்டி ராஜனுடைய ஸ்தானாதிபதி என்ற பதவியில் மாமனர் குண்டோதர ராயசிங்க மஹா சிங்கருடைய ராஜதானிக்கு வந்து சேர்ந்தாள்.

இது நிற்க.

பேய்க்காட்டில் உத்தண்டி தன் மனைவியாகிற சிங்கச்சி காமாக்ஷியினிடம் போய் நடந்த வர்த்தமானத்தையெல்லாம் சொன்னன். அவள் மிகவும் கோபத்துடன்:—"என்னுடைய பிதாவினிடமிருந்து ஸைந்ய பலம் தருவிக்க வேண்டுமானல், அதற்கு என் அனுமதியில்லாமல் நரிச்சி நல்லதங்கையை அனுப்பினல் நடந்துவிடுமென்று நீ நினைக்கிருயா?" என்றாள்.

அப்போது உத்தண்டி சொல்லுகிறன்.— "உனக்கு ராஜநீதியே தெரியவில்லை; காமாக்ஷி, ராஜ்ய

அவசரத்தைக் கருதி இரண்டாம் பேரிடம் சொல்லாமல் எத்தனையோ காரியம் செய்ய நேரிடும்'' என்றான்.

''ராஜ்ய அவஸரத்தைக் கருதிச் சரியான மந்த்ராலோசனை யில்லாமல் எடுத்த காரியங்கள் எல்லாவற்றிலும் தோற்றுப் போவதே வாடிக்கையாக நீங்கள் நடத்திவருகிறீர்கள்'' என்று காமாக்ஷி சொன்னாள்.

''ஆபத்து ஸமயத்திலே ஏசிக் காட்டுவது பாவிகளான ஸ்திரீகளுடைய வழக்கம்!'' என்று உத்தண்டி சொன்னான்.

''நாலு சாஸ்திரம் படிக்கப்போன பிராமணப் பிள்ளையின் கதை தெரியுமா?'' என்று சிங்கச்சி காமாக்ஷி கேட்டாள்.

''நான் ஆபத்தான நிலைமையில் இருக்கும்போது நீ கதை சொல்ல வருகிறாயே! அதென்ன?'' என்று உத்தண்டி கர்ஜனை புரிந்தான்.

''வீரவர்மன் தன்னுடைய பத்தினியிடத்தில் தேவதா விசுவாசம் வைத்திருப்பதாகவும் அவளை எப்போதும் சிடுசிடுப்பதே கிடையாதென்றும், தனது ப்ரதான ராஜ்ய கார்யங்களில் எதையும் தனது பத்தினியாகிய மாகாளியிடம் கேட்காமல் செய்வதில்லையென்றும், முன் அந்த ஸமஸ்தானத்திலிருந்து வந்த கரடி ஸந்யாசி யொருவர் சொன்னாரே; ஞாபகமிருக்கிறதா?'' என்று காமாக்ஷி கேட்டாள்.

"நான் ஸங்கடக் குழியில் விழுந்து வெளியேற வழி யறியாமல் பெருமூச்சு விட்டுக்கொண்டிருக்கையில் நீ சத்துருவின் புகழ்ச்சியை என் செவியில் பேசுகிறாயே, உனக்கிது தகுமா?" என்று உத்தண்டி வினவினான்.

"ஸ்திரீகளை அவமரியாதை பண்ணுவோர் மனிதரில் மிருகங்கள் என்று சண்டி நீதி சொல்லுகிறதே, அது ஞாபக முண்டா?" என்று காமாக்ஷி கேட்டாள்.

"நான் இப்போது எவ்விதமாகவும் அவமதிப்புச் செய்யவில்லை" என்றான் உத்தண்டி.

"என்னிடம் ஒரு வார்த்தை கூடக் கேளாமல் நீ என் பிதாவுக்கு ஸைந்யம் வேண்டுமென்று பிரார்த்தனை அனுப்பினாயே! அது என்னை அவமதித்ததாக மாட்டாதா?" என்றாள் காமாக்ஷி.

"அது போனால் போகிறது. இனிமேல் நடக்க வேண்டிய காரியத்தைப் பேசுவோம்" என்று உத்தண்டி சொன்னான்.

"மேல் நடக்கவேண்டிய காரியம் யாதோ?" என்று சிங்கச்சி கேட்டது.

அப்போது உத்தண்டி சொல்லுகிறான்:—"மேல் நடக்கவேண்டியது யுத்தம். மேல் நடக்கவேண்டியது, ஜயம்!"

"போர் எங்கே இடங்களில் தோற்றது? போர் தோற்ற ஸேனாபதிகளின் பெயர் என்ன?" என்று சிங்கச்சி கேட்டது. "நாகமலையிலே தோற்றோம்.

வெள்ளைவாய்க்கால் கரையிலே தோற்ருேம். நாகமலை யில் தோற்ற ஸேனபதி கரடி வேலப்பன், வெள்ளை வாய்க்கால் கரையிலே தோற்றவன் புலி பொன்னம் பலம்" என்று உத்தண்டி சொன்னுன்.

"அந்த வேலப்பனையும், பொன்னம்பலத்தையும் நாளை ஸூர்யோதயமாய் ஒரு ஜாமத்துக்கு முன்பு சுட்டுக் கொன்று விடவேண்டும்" என்று சிங்கச்சி காமாக்ஷி சொன்னுள்.

உத்தண்டி:—"ஸாத்யப்படாது" என்ருன். அவள் "ஏன்?" என்ருள். அவன்:—"அவ்விருவரும் பெரிய வம்சத்துப் பிள்ளைகள். அவர்களுக்குத் தீங்கு செய்தால் தேசத்துப் பிரபுக்கள் நமக்கு விரோதமாகத் திரும்புவார்கள்" என்ருன். அவள்:—"இப்போது இந்த தேசத்தில் உமக்கு அனுகூலமாக எத்தனை பிர புக்கள இருக்கிருர்கள்?" என்று கேட்டாள். அப் போது உத்தண்டி:—"என் நாட்டிலுள்ள பிரபுக்கள் அத்தனை பேரும் எனக்கு வேண்டியவர்களே. எதிர்க் கட்சி யாருமே கிடையாது!" என்ருன்.

"நாளைப் பொழுது விடிந்து ஒரு ஜாமத்துக்கு முன்பு வேலப்பனையும், பொன்னம்பலத்தையும் சுட் டுக் கொன்று விடவேண்டும். அது செய்தால், மேலே ஜயத்துக்குரிய உபாயங்கள் நான் சொல்லுகிறேன்" என்று காமாக்ஷி சொன்னுள்.

"நான் ஒருபோதும் அதற்கிணங்கமாட்டேன்" என்ருன் உத்தண்டி.

அப்போது உத்தண்டி என்ற சிங்க ராஜனிடம் பத்தினியாகிய சிங்கச்சி காமாக்ஷி சொல்லுகிறது:—

"ஸ்திரீகளை அவமதிப்புச் செய்வோன் ஆண்மக்களுக்குள்ளே முதல் வீரனாக விளங்க மாட்டான். பெண்களைத் தாழ்வாக நினைப்பது அநாகரிக ஜாதியாருடைய முதல் லக்ஷணம். நீ என் வார்த்தையைத் தட்டுகிறாய்; உனக்குச் சண்டை ஜயிக்காது. நீ என்னை எப்போதும் அலட்சியம் பண்ணுகிறாய். எனது பிதா உனக்குத் துணைப் படைகள் என்னை யறியாமல் அனுப்பும்படி செய்ய முடியுமென்று நினைத்தது உன் ஆலோசனைக் குறைவைக் காட்டுகிறது. உன்னை அழிய விடுவதில் எனக்கு ஸம்மதமில்லை. நீயோ மதிக் குறைவினாலும், மூட மந்திரிகளின் உபதேசத்தாலும், மஹா வீரனாகிய வீரவர்மனைப் பகைத்துக்கொண்டாய். என்னிடத்தில் மந்திராலோசனை கேட்கமாட்டாய்; நரிச்சி நல்லதங்கையிடம் கேட்பாய்! அந்தக் கூனற் கிழவிக்கு மாலையிட ஸம்மதப்பட வில்லையே! நீ அந்த மட்டில் புத்திசாலிதான்! அவளுக்குப் பாதி யரசு கொடுப்பதாகச் சொல்லிவிட்டாய்? உன்னுடைய புத்திக் கூர்மையை என்னென்று சொல்வேன்?" என்றது. இது கேட்டு உத்தண்டி சொல்லுகிறான்:—

"ஆஹா! நான் நரிச்சி நல்லதங்கையிடம் ரஹஸ்யமாகப் பேசிக்கொண்டிருந்ததை உனக்கு யார் சொன்னார்கள்? உன்னுடைய தூண்டுதலின் மேலேதான் அவள் என்னிடம் அப்படிக் கேட்டாளோ?"

காமாக்ஷி—“ இல்லை, நீ யன்றோ அவளைக் கூப்பிட்டனுப்பி வார்த்தை சொன்னாய்! நீ இப்படி அழைப்பித்துக் கேட்பாய் என்ற விஷயம் எனக்கு முன்னமே தெரிந்திருந்தாலன்றோ நான் தூண்டி விட்டிருக்கக் கூடுமென்று சொல்லலாம் !”

உத்தண்டி—“ பின்னே, உனக்கெப்படித் தெரிந்தது? நான் முந்தியே முதல் நினைத்தேன் ; என்னுடைய ஒற்றர்களை யெல்லாம் நீ வசப்படுத்தி வைத்திருக்கிறாய். எனக்குத் தெரியாமல் நீ வேறு தனியாகப் பல ஒற்றர்களை வைத்திருக்கிறாய். என் மந்திரிகளிலும் சேனாபதிகளிலும் பெரும்பாலோர் எனக்கு அஞ்சுவதைக் காட்டிலும் அதிகமாக உனக்கு அஞ்சி நடக்கிறார்கள். எனக்குத் தெரியாத ஒரு ரஹஸ்ய சங்கத்துக்கு நீ தலைவியென்று தோன்றுகிறது ! உன்னை வஞ்சனை செய்ய வேண்டுமென்ற எண்ணம் எனக்குக் கிடையாது. ஆனால் என்னுடைய ராஜ்யத்தில் என் வார்த்தைக்கு யாதொரு மதிப்பில்லாமலும் எல்லாக் காரியங்களுக்கும் உன் இஷ்டப்படியாகவும் இருப்பது எனக்கு சம்மதமில்லை” என்றான். அப்போது சிங்கச்சி காமாக்ஷி சொல்லுகிறாள் :—

“ ஓஹோ ! என்னிடத்தில் இவ்வளவு பயத்தை மனதில் வைத்துக்கொண்டு, என்னை லக்ஷ்யமும் பண்ணாமல் நீ இருப்பது ஒரு ஆச்சர்யந்தான் ; எனக்கு விரோதிகளான வேலப்பனையும், பொன்னம்பலத்தையும் ஸேனாபதிகளாக நியமித்தாய். எனக்கு வேண்டிய

ஸேனுபதிகளை விலக்கினுய்; போர் தோற்றது; இன்ன மும் என்னை அவமதிக்கிறாய். என்னுடைய யோசனை கேட்டபடியால் உனக்கு இந்த ராஜ்யம் கிடைத்தது. பட்டங்கட்டின மறுநாளே நீ நன்றி கெட்டவன் என் பதை நான் கண்டுகொண்டேன்" என்றாள்.

உத்தண்டி:—"உன்னை நான் அவமதிக்க வில்லையே" என்றான்.

"அரை நாழிகைக்கு முன்பு கூட என்னைத் துரும்புக்கு ஸமானமாக எண்ணி நடத்தினையன்றோ?" என்றாள் சிங்கச்சி.

"என்ன செய்தேன்!" என்று சொல்லி உத் தண்டி கர்ஜனை புரிந்தான்.

"நான் ஒரு கதை சொல்லத் தொடங்கினேன், உனக்கு நல்லறிவு புகட்டும் பொருட்டாக. அதைக் கேட்கக்கூட உனக்குப் பொறுமையில்லை. என்னைச் செள்ளென்று விழுந்தாய். என்னைக் கண்டால் உனக்கு முகத்தில் கடுகு வெடிக்கிறது. என் வார்த்தை கேட் டால் உனக்குக் காதில் நாராசம் காய்ச்சி விட்டது போல ஆய்விடுகிறது" என்றாள் சிங்கச்சி.

"அதென்னவோ கதை என்றாயே! பெயர் மறந்து போச்சு! ஹாம்! ஹாம்! பிராமணப் பிள்ளை நாலு சாஸ்த்ரம் படித்த கதை! அதை சொல்லு கேட்கிறேன்" என்றான் உத்தண்டி. அப்போது சிங் கச்சி சொல்லுகிறது.

# பிராமணப் பிள்ளை நாலு சாஸ்திரம் படித்துக்கொண்டு வந்த கதை.

சிங்கச்சி காமாக்ஷி சொல்லுகிறாள் :—

"கேளாய் ராஜனே, புருஷனுக்கு ஸ்திரீ உடம்பில் பாதி. நீ என்னை வெறுத்தபோதிலும் எனக்கு உன்னைத் தவிர வேறு புகல் கிடையாது. நீ என்னிடம் வைத்திருந்த அன்பை யெல்லாம் மறந்து விட்டாலும் என் நெஞ்சு உன்மீதுள்ள அன்பை மறக்கவில்லை. இன்னொரு சிங்கி யென்றால் நீ செய்துவரும் அவகார்யத்துக்கு உன்னை முகங்கொண்டு பார்க்கமாட்டாள். நான் ஐயோ பாவமென்று உன்னை க்ஷமிக்கிறேன். ஆயினும், நான் இப்போது கதை சொல்ல ஆரம்பித்தால் நீ பொறுமையுடன் கேட்கமாட்டாய் என்ற சந்தேகம் எனக் குண்டாகிற படியால், இப்போது சொல்ல வேண்டாமென்று யோசிக்கிறேன்" என்றாள்.

உத்தண்டி "பொறுமையுடன் கேட்கிறேன்" என்று ஸத்யம் பண்ணினான். பிறகு சிங்கச்சி பின் வரும் கதையை உரைக்கலாயிற்று.

ஒரு ஊரிலே ஒரு பிராமணப் பாட்டி யிருந்தாள். அவளுக்கொரு பிள்ளையுண்டு. அந்தப் பிள்ளை வீட்டில் யாதொரு வேலையும் செய்யாமல் மூன்று வேளையும் தண்டச்சோறு தின்பதும் ஊர் சுற்றுவதுமாக இருந்தான். அந்தப் பாட்டி, தோசை, இட்டலி,

முறுக்கு, கடலேச்சுண்டல் வியாபாரம் பண்ணி அதில் வரும் லாபத்தால், குடும்ப ஸம்ரக்ஷணை செய்துகொண்டிருந்தாள். அவன் நாளுக்கு நாள் அதிகச் சோம்பேறியாய் நேரத்தை நாசம் பண்ணிக்கொண்டிருந்தான். அப்போது பாட்டி ஒரு நாள் அவனைக் கூப்பிட்டு:—"அடா மகனே, ஒரு தொழிலும் செய்யாமல் சும்மா தின்று கொழுத்துக்கொண்டு எத்தனை நாள் இப்படி என் கழுத்தை அறுக்கலாமென்று யோசனை பண்ணுகிறாய்? நான் உயிரோடிருக்கும் வரை எப்படி பாவது பாடுபட்டு உன் வயிற்றை நிரப்புவேன். எனக்குப் பிற்காலம் நீ எப்படி ஜீவிப்பாய்? நான் சாகு முன்னே உனக்கு ஒரு கல்யாணத்தைப் பண்ணி வைத்துவிட்டுச் சாகலாமென்று நினைத்துக்கொண்டிருக்கிறேன். அதற்காகத்தான் பக்கத்துத் தெருச் செட்டியாரிடம் மாஸம் ஒரு ரூபாய் சீட்டுப் போட்டுக்கொண்டு வருகிறேன். நீ அந்தப் பெண்டாட்டியை எப்படி வைத்துக் காப்பாற்றுவாய்? சீ, நாயே, ஓடிப்போ, எங்கேனும் வடதேசத்துக்குப் போய் நாலு சாஸ்த்ரம் படித்துக்கொண்டு வா" என்றாள்.

அந்தப் பையனுக்கு சாஸ்த்ரம் என்றால் இன்ன பதார்த்தம் என்ற விஷயமே தெரியாது. ஆனாலும் அவன் மனதில் கல்யாணம் பண்ணிக்கொள்ள வேண்டும் என்ற தாகம் இருந்தது. ஆதலால் பெண்டாட்டியைக் காப்பாற்ற சாஸ்த்ரம் படிக்க வேண்டுமென்று தாயார் சொல்லியதைக் கேட்டவுடன் அவனுக்கு சாஸ்த்ரப் பயிற்சியில் விசேஷமான ஆவல் மூண்டது.

அன்று பகல் சாப்பிட்டவுடனே தாயாரிடம் சொல்லிக்கொள்ளாமல் ஊரிலிருந்து புறப்பட்டு வடதிசை நோக்கிச் சென்றான். போகும் வழியிலே ஒரு பனை மரம் நின்றது.

"எங்கே போகிறாய் அப்பா?" என்று இந்தப் பிள்ளையை நோக்கி அந்தப் பனைமரம் கேட்டது. "நான் சாஸ்த்ரம் படிக்கப் போகிறேன்" என்றான்.

அப்போது அந்தப் பனைமரம் சொல்லுகிறது:— "ஓ ஹோ ஹோ; சாஸ்த்ரமா படிக்கப் போகிறாய்? அப்படியானால் நான் ஒரு சாஸ்த்ரம் கற்றுக்கொடுக்கிறேன் தெரிந்துகொள்" என்றது. பிராமணப் பிள்ளை உடம்பட்டான்.

அப்போது பனைமரம் "நெட்டைப் பனைமரம் நிற்குமாம் போலே போலே" என்ற வாக்கியத்தைச் சொல்லிற்று. இந்த வாக்யத்தைப் பையன் திரும்பத் திரும்பத் தன் மனதுக்குள் உருப்போட்டுக்கொண்டே போனான்.

அங்கே ஒரு பெருச்சாளி வந்தது. அந்தப் பெருச்சாளி இவனை நோக்கி, "அடா பார்ப்பாரப் பிள்ளாய், எங்கே போகிறாய்?" என்று கேட்டது. "சாஸ்த்ரம் படிக்கப் போகிறேன்" என்று இவன் சொன்னான். "அப்படியானால் நான் ஒரு சாஸ்த்ரம் சொல்லுகிறேன் படித்துக்கொள்" என்று பெருச்சாளி கூறிற்று. பையன் உடம்பட்டான். "பெருச்சாளி மண்ணைத் தோண்டுமாம் போலே போலே" என்ற சாஸ்த்ரத்தை அந்தப் பெருச்சாளி சொல்லிக் கொடுத்

தது. இவன் மேற்படி இரண்டு சாஸ்த்ரங்களையும் வாயில் உருப்போட்டுக்கொண்டே நடந்து சென்றான். வழியில் ஒரு குளம் இருந்தது. அதில் இறங்கி ஜலம் குடிக்கப் போனான். நடுக் குளத்தில் ஒரு கோரைப் புல் நின்றது. அது இவனை நோக்கி:—“ஐயரே, எங்கிருந்து வந்தாய்? எந்த ஊருக்குப் போகிறாய்?” என்று கேட்டது. இவன் தன்னுடைய விருத்தாந்தங்களைச் சொல்லி “சாஸ்த்ரம் படிக்கப் போகிறேன்” என்றான். “அப்படியானால் நான் ஒரு சாஸ்த்ரம் கற்பிக்கிறேன். படித்துக்கொள்” என்று கோரை சொல்லிற்று. பிராமணப் பிள்ளை உடம்பட்டான்.

“நடுக்குளத்திலே கோரை கிடந்து விழிக்குமாம் போலே போலே” என்ற வாக்கியத்தை அது கற்றுக் கொடுத்தது. இவன் மூன்று வாக்கியங்களையும் பாராமல் சொல்லிக்கொண்டு பின்னும் நடந்து சென்றான். அங்கே ஒரு நரி வந்து அவனை நோக்கி:— “எங்கே போகிறாய்? என்ன சங்கதி?” என்று விசாரணை பண்ணிற்று. இவன் “சாஸ்த்ரம் படிக்கப் போகிறேன்” என்றான். ‘ஓகோ! சாஸ்த்ரம் படிக்கவா போகிறாய்! நல்லது, உனக்கு நான் சாஸ்த்ரம் கற்றுக் கொடுக்கிறேன். தெரிந்துகொள்’ என்று நரி சொல்லிற்று. இவன் உடம்பட்டான். “ஆளைக் கண்டால் நரி வாலைக் குழைத்துக் கொண்டோடுமாம் போலே போலே” என்ற வாக்கியத்தை நரி போதித்தது. இவன் “ஆஹா! புறப்பட்ட தினத்திலே நமக்கு

நாலு சாஸ்த்ரமும் தெரிந்துபோய்விட்டதே. என்ன அதிர்ஷ்டமப்பா, நமக்கு; இந்த நான்கு சாஸ்த்ரத்தையும் மறக்காமல் வீட்டில் தாயாரிடம் போய்ச் சொன்னால் அவள் நமக்குக் கல்யாணம் செய்து கொள்ள அனுமதி கொடுப்பாள்" என்று ஸந்தோஷப் பட்டுக்கொண்டே தன் ஊரை நோக்கிச் சென்றான். போகும் வழியில் இரவாகி விட்டது. ஊர் நெடுந் தூரத்துக்கப்பால் இருந்தபடியால் இடையே இருந்த ஒரு கிராமத்தில் அவ்விரவு தங்கி, மறு நாட் காலையில் அங்கிருந்து புறப்படலாமென்று நினைத்து, அங்கு ஒரு வீட்டு வாசல் திண்ணையிலே போய்ப் படுத்துக் கொண்டான். விடிய ஒரு ஜாமம் ஆனபோது, இவன், கண்ணை விழித்துக்கொண்டு, தான் படித்த நாலு வாக்கியங்களையும் பாடம் பண்ண ஆரம்பித்தான். அப்போது அந்த வீட்டின் கொல்லைப் புறத்தில் கள்ளர் வந்து கன்னம் வைத்துக்கொண்டிருந்தார்கள். இவன் சத்தம் போட்டுச் சந்தை சொல்லிக் கொண்டிருந்தான்.

முதலாவது :—'நெட்டைப் பனைமரம் நிற்குமாம் போலே போலே' என்றான். இவன் கூவின சத்தத்தைத் திருடர் கேட்டு "ஓஹோ! நாம் இங்கு நிற்பதைக் கண்டு வீட்டிலுள்ளோரை எழுப்பும் பொருட்டாக எவனோ இப்படிக் கூவுகிறான்" என்றெண்ணி பயந்தார்கள். அந்த சமயத்தில் இவன் :—

"பெருச்சாளி மண்ணைத் தோண்டுமாம் போலே போலே" என்று கூவினான்.

இதைக் கேட்டுத் திருடர்:—"அடே! நாம் கன்னம் வைக்கிறதைக் கண்டுதான் இவன் இப்படிக் கூவுகிறான்" என்று கை கால் நடுங்கத் தொடங்கினார்கள்.

அப்போது இவன்:—"நடுக்குளத்திலே கோரை கிடந்து விழிக்குமாம் போலே போலே" என்ற தனது மூன்றாம் சாஸ்த்ரத்தை ஓதினான்.

கள்ளர்:—"அடா, நாம் அவசியம் ஓடிப்போக வேண்டும். நாம் இங்கே திகைப்புடன் விழித்துக் கொண்டு நிற்கிறோமென்பதை அந்த மனிதன் சயிக்கினையாகச் சொல்லுகிறான்" என்று பேசிக்கொண்டு சிலர் ஓடத் தொடங்கினர். இதற்குள் திருடருடைய சத்தம் இவன் காதிலும் படவே, "கொல்லைப் புறத்தில் ஏதோ பலர் காலடிச் சத்தமும், முணுமுணுக்கிற சத்தமும் கேட்கிறது. என்னவோ தெரியவில்லை. ஒரு வேளை திருடராக இருந்தாலும் இருக்கலாம். எதற்கும் போய்ப் பார்ப்போம்" என்று யோசனை பண்ணிக் கொண்டு வந்தான். வரும்போதே தனது சாஸ்த்ர பாடத்தை மறக்காமல், "ஆளைக் கண்டால் நரி வாலைக் குழைத்துக் கொண்டோடுமாம் போலே போலே" என்று கூவிக்கொண்டு வந்தான். திருடர் தாங்கள் வேறோரிடத்திலிருந்து திருடிக்கொண்டு வந்த நகைப் பெட்டிகளையும், பணப்பெட்டிகளையும் கீழே போட்டு விட்டு ஓடிப்போயினர். இவன் பிறகு வீட்டிலுள்ளாரை எழுப்பி அந்தப் பெட்டிகளைக் காட்டினான். வீட்டிலுள்ளார் 'நடந்த விஷயமென்ன?' என்று விசா

ரித்தார்கள். இவன் நடந்த விஷயத்தைச் சொன்னன். அப்போது வீட்டார் இவனாலே யன்றோ திருடர் கன்னம் வைத்துத் தமது வீட்டுப் பொருளைக் கொள்ளையிடாமலும், தமதுடம்பிற்குத் தீங்கு செய்யாமலும் ஓடினார்கள் என்ற நன்றி யுணர்ச்சியால் அந்த நகைப் பெட்டிகளையும், பணப் பெட்டிகளையும் இவனுக்கே கொடுத்து விட்டார்கள். இவன் அந்த திரவியத்தை யெல்லாம் தாயாரிடம் கொண்டு கொடுத்து:—"எனக்குக் கல்யாணம் பண்ணி வை அம்மா" என்றான். அவள் இவனை நோக்கி:—"மகனே உனக்கு இந்த நிதி யெல்லாம் எங்கே கிடைத்தது?" என்று கேட்டாள். இவன் நடந்த விவரங்களை யெல்லாம் கூறினான். தாய் மிகவும் மகிழ்ச்சிகொண்டு, அவனுக்கு ஒரு பெரிய பிரபுவின் மகளைக் கல்யாணம் செய்வித்தாள். பிறகு எல்லாரும் ஸௌக்யமாக நெடுங் காலம் வாழ்ந்து கொண்டிருந்தனர்."

என்று சிங்கச்சி காமாக்ஷி கதை சொன்னாள். அப்போது உத்தண்டி:—"இந்தக் கதை என்ன நோக்கத்துடன் சொன்னாய்?" என்று கேட்டான்.

"உன் மனதிலிருந்த ஆயாசத்தை மாற்றி உனக்கு ஆறுதல் உண்டாக்கும் பொருட்டாகக் கதை சொன்னேன், வேறு நோக்கம் ஒன்றுமில்லை" என்றாள்.

"பார்த்தாயா! நாம் சண்டை தோற்று மானத்தையும் தேசத்தையும் ப்ராணனையும் சத்ருவிடமிருந்து காப்பாற்ற வேண்டுமே. அதற்கென்ன வழி செய்யலா

மென்று கலங்கிக்கொண்டிருக்கிறோம். அந்த சமயத்தில் இவள் நம்மிடம் குழந்தைக் கதை பேசுகிறாள்! பார்த்தாயா! பெருச்சாளியாம், கோரையாம், பனை மரமாம், நரியாம்! என்ன பச்சைக் குழந்தை வார்த்தை!" என்று சொல்லி மிகவும் கோபத்துடன் உத்தண்டி அப்போது ஒரே பாய்ச்சலாக மனைவியின் மீது பாய்ந்து தன் நகங்களை அவளுடைய கழுத்தில் அழுத்தினான். சிங்கக் காமாக்ஷி லாகவத்தால் கழுத்தை திமிறிக்கொண்டு தன் கழுத்திலிருந்து இரத்தம் பொழிவதைக் கண்டு கோபத்துடன் தன் முன் வலக்காலால் உத்தண்டியின் முகத்தில் ஓங்கி அடித்தது. உத்தண்டி பெருஞ்சினத்துடன் கண்ணில் தீப் பொறி பறக்க, மீசை துடிக்க, ஹா! என்று கர்ஜனை புரிந்து "அடி பேயே, உன்னை இந்தக் கணத்திலே கொன்று போடுகிறேன் பார்!" என்று சொல்லித் தன் மனைவியின் கழுத்தைக் கடித்து இரத்தம் குடிக்கலாயிற்று. காமாக்ஷி உத்தண்டியின் காலைப் பல்லினால் கவ்வி இரத்தத்தை உறிஞ்சத் தொடங்கிற்று. அப்போது சண்டையில் உண்டான சப்தத்தைக் கேட்டுக் காமாக்ஷியின் பாங்கிச் சிங்கங்கள் சில அங்கோடி வந்தன. அவற்றைக் கண்டு உத்தண்டியும் காமாக்ஷியும் வெட்டுப் பற்களை மீட்டுக்கொண்டன. உத்தண்டி அந்தப்புரத்தை விட்டு வெளியே சென்றான். பேய்க்காட்டு விஷயம் இப்படி இருக்க உத்தண்டியிடமிருந்து அவனுடைய மாமனாராகிய குண்டோதர ராஜன் அரசு செலுத்தும் கடம்ப வனத்துக்குத் தூது சென்ற நரிச்சி நல்ல

தங்கை எப்படியானுள் என்பதை கவனிப்போம். நரிச்சி கடம்ப வனத்திற்கு போன போது தன் பல்லக்கு பரிவாரங்களுடன் நேரே குண்டோதர ராய சிங்க மஹாசிங்கருடைய மாளிகையில் போய் இறங்காமல் ஏதோ மனதுக்குள் ஒரு தந்திரத்தை எண்ணித் தனக்கு முந்தியே நட்புடையவளாகிய விருத்திமதி என்ற எருமைச்சியின் வீட்டிலே போய் இறங்கினுள். விருத்திமதி பொன்னங்காட்டரமனேக்கு முன்னொரு முறை சென்றிருந்தபோது அவளுக்கு வீரவர்மராஜன் பலவிதமான பரிசுகள் கொடுத்துத் தனது ராஜ பதவி யைக் கருதாமல் மிகவும் அன்பான வார்த்தைகள் கூறி விடுத்ததை அந்த எருமைச்சி தன் வாழ்நாளில் மிகப் பெரிய விசேஷ மென்றெண்ணி வீரவர்மனிடம் பேரன்பு பூண்டவளாய் எப்போதும் அவனேயே ஸ்மரித்துக்கொண்டிருந்தாள். எனவே நரிச்சி நல்ல தங்கை வந்தவுடன் எருமைச்சி விருத்திமதி அவளிடம் "வீரவர்மனும் அவனுடைய ராணி மாகாளியும் குழந் தைகளும் க்ஷேமந்தானு?" என்று விசாரித்தாள்.

அப்போது நரிச்சி நல்லதங்கை தான் வீரவர்ம னிடமிருந்து பிரிந்து அவனுக்குத் துரோகியாய் உத் தண்டி ராஜனிடம் வேலே பார்ப்பதாகத் தெரிந்தால் எருமைச்சி தன்னே துரத்திவிடுவாள் என்று யோசித்து "ஆம், எல்லாரும் க்ஷேமந்தான்" என்ருள். "நீ இப்போது நேரே பொன்னங்காட்டிலிருந்து தான் வருகிருயா?" என்று விருத்திமதி கேட்டாள்.

நல்லதங்கை—"அன்று; நான் பேய்க்காட்டி லிருந்து வருகிறேன்" என்றாள்.

விருத்திமதி:—"அங்கே எதற்காகப் போயிருந் தாய்?" என்றாள்.

நல்லதங்கை :—'பேய்க்காட்டுக்கும் பொன்னங் காட்டுக்கும் சண்டை யென்று நீ கேள்வியுற்றிருக்கக் கூடும். அந்த யுத்தம் நடப்பதை எப்படியேனும் தடுக்க வேண்டுமென்று கருதி, என்னை மாகாளிராணி (வீரவர்மன் பத்னி) சில செய்தி சொல்லிப் பேய்க் காட்டு ராணியாகிய காமாக்ஷியிடம் அனுப்பினாள். வந்த இடத்தில் காமாக்ஷி உங்கள் நாட்டரசனாகிய தன் பிதாவிடம் ஒரு ரகஸ்யமான செய்தி சொல்லி வரும்பொருட்டாக என்னை இங்கே அனுப்பினாள்" என்றதும்,

"என்ன ரஹஸ்யம்?" என்று விருத்திமதி கேட் டாள்.

நரிச்சி நல்லதங்கை:—"காரியம் நிறைவேறு முன்னே அதை மிகவும் பிராண சிநேகிதராக இருப் போரிடத்திலேகூட அனுவசியமாகச் சொல்லக் கூடாது. சொன்னால் காரியம் கெட்டுப் போகும். ஆதலால் பொறு, நிறைவேறினபின் சொல்லுகிறேன்" என்று வாக்களித்தாள். நல்லதென்று சொல்லி விருத்தி மதி தன் வீட்டுக்கு விருந்தாக வந்த நரிச்சிக்கு ராஜோபசாரங்கள் செய்தாள். பரிவாரங்களுக்கும் யதேஷ்டமாக 'ஆகாரம் கொடுத்தாள். பிறகு சாயங்

காலமானவுடன் நரிச்சி நல்லதங்கை விருத்திமதியை நோக்கி "இப்போதெல்லாம் நீ அடிக்கடி அரண்மனைக்கு போய் வருவதுண்டோ?" என்று கேட்டாள்.

விருத்திமதி ஆமென்றாள்.

"உங்கள் குண்டோதர சிங்கனுக்கு நான்கு மனைவிகள் உண்டன்றோ?" என்று நரிச்சி கேட்டாள்.

விருத்திமதி தலையசைத்தாள்.

"பட்டத்து ராணியின் பெயர் யாது?" என்று நரிச்சி கேட்டாள்.

"பட்டத்து ராணி பெயர் ஸுவர்ணாம்பா" என்று விருத்திமதி சொன்னாள்.

"பேய்க்காட்டு காமாக்ஷி தனது தாயின் பெயர் மீனாக்ஷி என்று சொன்னாளே" என்றாள் நரிச்சி.

அதற்கு விருத்திமதி.—"ஆமாம். அந்த மீனாக்ஷி மூன்றாவது ராணி. பட்டத்து ராணியைக் காட்டிலும் மீனாக்ஷியினிடத்திலே தான் குண்டோதரராய சிங்க மஹாசிங்கருக்கு அதிகப் பிரியம்" என்றாள்.

நரிச்சி நல்லதங்கை.—"உனக்கு எந்த ராணியுடனே அதிக சிநேகம்?" என்று கேட்டாள்.

"பட்டத்து ராணியுடன்" என்று விருத்திமதி சொன்னாள்.

"உனக்கும் மீனாக்ஷிக்கும் பேச்சுண்டோ இல்லையோ?" என்று நரிச்சி கேட்டாள்.

விருத்திமதி:—“பேச்சு வார்த்தை இல்லாமலென்ன? அதெல்லாம் உண்டு. போனால் வா என்று கூப்பிடுவாள். மஞ்சள் குங்குமமும் கொடுப்பாள். ஆனால் ஸுவர்ணாம்பா என்னிடம் தன்னுடைய அந்தரங்கங்களையெல்லாம் சொல்லுவது போலே மீனாக்ஷி சொல்லமாட்டாள்” என்றாள்.

அப்போது நரிச்சி நல்லதங்கை:—“அந்த மீனாக்ஷிக்கு அந்தரங்கமான ஸ்நேகம் யார்?” என்று கேட்டாள்.

விருத்திமதி:—“மல்லிச்சி மாணிக்கவல்லிக்கும் மீனாக்ஷிக்கும் உடம்பு இரண்டு, ஆனால் உயிர் ஒன்று” என்றாள்.

இப்படி இவ்விருவரும் ஸம்பாஷணை செய்து கொண்டிருக்கையில் திடீரென்று குண்டோதர ராய சிங்க மஹாசிங்கருடைய சிப்பாய்கள் வந்து நரிச்சி நல்லதங்கையைக் கைதிபண்ணி விலங்கு போட்டுக் கொண்டுபோய்ச் சிறைப்படுத்தி விட்டனர். விலங்கு பூட்டும்பொழுது நரிச்சி கோவென்றழுதாள். விருத்திமதி “நல்லதங்காய், நீ பயப்படாதே. ஏதோ தவறுதலாக இவர்கள் வேலை செய்கிறார்கள் என்று தோன்றுகிறது. நான் போய் ஸுவர்ணாம்பாவிடம் சொல்லி உடனே உன்னை மீட்கிறேன்” என்று சொல்லி அரண்மனைக்குப் போனாள்.

## கதம்ப வனத்தில் நடந்த செய்திகள்.

கதம்ப வனத்தில் மூன்றுலகம் புகழும்படி அரசு செலுத்திய வீராதிவீர குண்டோதர ராயசிங்க மஹா சிங்கனுடைய அரண்மனை அந்தப்புரத்தில், அவனுடைய பட்டத்து ராணியாகிய ஸுவர்ணாம்பா தனியே உட்கார்ந்திருந்தாள். சிங்க ஜாதிக்குள்ளே இவள் தன் போலே அழகும், கல்வியும் பராக்கிரமமும் உடையவள் வேறில்லை யென்று தன் மனதுக்குள்ளே நினைத்திருந்தாள். இவளுக்கு அந்தக் காட்டில் வசித்த மிருகங்களனைத்திலும் அதிக அந்தரங்கமான ஸ்நேகம் யாரிடத்திலென்றால், விருத்திமதி யென்ற எருமைச்சியினிடத்திலேயாம். அந்த விருத்திமதி வெயர்க்க வெயர்க்க ஓடியே வந்து சிங்கச்சி ஸுவர்ணதேவியின் காலில் விழுந்தாள்.

"என்ன விஷயம்?" என்று சிங்கச்சி கேட்டாள்.

அப்போது விருத்திமதி சொல்லுகிறாள் :—

"மகாராணியே, கேள். இன்று காலை என் வீட்டுக்குப் பொன்னங்காட்டிலிருந்து என் தோழியாகிய நரிச்சி நல்லதங்கை வந்தாள். அவளை என் வீட்டுக்குள் புகுந்து இந்த ராஜ்யத்து சிப்பாய்கள் கைதி பண்ணிக்கொண்டு போயினர். ஏதோ தவறுதலாகவே இந்தக் காரியம் நடந்துவிட்டதென்று நினைக்கிறேன். யாரோ அவள்மீது குண்டோதர மஹாசிங்கனிடம் குற்றம் சார்த்திப் பேசியிருக்கிறார்கள். அதனால் அவளுக்கு

இந்தக் கதி நேரிட்டு விட்டது. ஐயோ! நான் என்ன செய்வேன்? என்னுடைய உயிர்த்தோழி யாயிற்றே! நான் இந்த அரண்மனைக்கு எத்தனையோ காலமாக உண்மையுடன் உழைத்து வருகிறேனே! என் வீட்டுக்கு வந்த தோழிக்குச் செய்யப்பட்ட அவமானம் எனக்கே செய்யப்பட்டது போலாகுமன்றோ? மேலும் அவள் பொன்னங்காட்டு வீரவர்ம ராஜனைக் குழந்தைப் பருவ முதலாக வளர்த்த செவிலித்தாய். அந்த வீரவர்மன் இவளைத் தாய்க்குச் சமானமாக ஆதரித்து வருகிறான். இவளைப்பிடித்து குண்டோதர சிங்கர் அடைத்து வைத்திருக்கிறார் என்ற செய்தி கேட்டால், அவன் உடனே கதம்பவனத்தின்மீது படையெடுத்து வருவான். அவன் படை யெடுத்துவந்தால் அவனை எதிர்த்துப் போர்செய்ய நமது ஸைந்யத்தால் முடியாது. நமது ராஜ்யம் அழிந்துபோய்விடும். ஐயோ! வீரவர்மனை எதிர்த்தபடியாலே தண்டி ராஜன் பட்ட பாடும், அவன் தம்பி உத்தண்டி இப்போது படுகிற பாடும் தெரியாதா? மஹாராணிதானே நீயும்; நீயும் நானும் இணை பிரியாமல் இரண்டு பக்ஷிகள் ஒரு கூட்டில் வாழும் முறைமையாலே, இருவரும் அன்பாகிய கூட்டில் வாழ்ந்து பல வருஷங்களாக ஒன்றுகூடி இருக்கிறோம். சூரியனுக்கும் குளப்பூவுக்கும் ஸ்நேக முண்டாகும் போது அவ்விரண்டுக்கும் சமானத் தன்மை உண்டாகிறது. மேலும் கீழும் அன்பினால் ஸமத்வத்தை அடைகின்றன. உன்னைப்போலே குலத்திலும், நலத்திலும், மஹிமையிலும் சிறந்த சிங்கச்சிமார் எத்தனையோ பேர் உல

கத்தில் இருக்கக்கூடும். உனக்கு அவர்கள் எல்லோரையும்விட என்மேலே அதிக அன்பு உண்டாயிருக்கிறது. நான் கீழ்க்குலத்திலே பிறந்தாலும், எப்போதும் என் கண்களில் பதுமைபோலே உன்னை வைத்துக்கொண்டு போற்றுவதனால், நான் மஹிமைபெற்று உன்னுடைய அன்புக்குப் பாத்திரமானேன். எனக்கு மஹத்தான கஷ்டம் நேரிட்டிருக்கும்போது, நீ ஸஹித்திருப்பது நியாயமன்று. எனக்கு நீயே துணை, நீயே தோழி, நீயே தாய், தந்தை, நீயே தெய்வம், எனக்கு உன்னைத் தவிர இந்த உலகத்தில் வேறு கதி கிடையாது. நீதான் என்னைக் காப்பாற்ற வேண்டும்'' என்று சொல்லி கோவென்றலறி அழுதாள். அப்போது சிங்கச்சிஸுவர்ணதேவி அவளை ஸமாதானப்படுத்திவிட்டு உடனே பக்கத்திலிருந்த பாங்கி ஒருத்தியைக் கூவி:—"பெண்ணே, நீ போய் ராயசிங்கரை நான் அழைத்து வரச் சொன்னதாகச் சொல்லு, உடனே கூட்டிவா'' என்றது.

ஸாயங்காலம்; பொழுது புகுந்துவிட்டது. சிங்க குண்டோதரன் தனது ராஜதானியாகிய கதம்ப நகரத்திற்கு ஸமீபத்தில் ஓடும் நர்மதா நதியில் ஸாயங்கால ஸ்நாநம் செய்து முடித்துவிட்டு ஸந்தியா வந்தனம் பண்ணிக்கொண்டிருந்தான். அந்த ஸமயத்தில் பாங்கி போய் காலிலே விழுந்தாள்.

"என்ன சங்கதி ?'' என்று கேட்டான்.

"பெரிய அபத்தம், இன்னதென்று எனக்குத் தெரியாது. ஸுவர்ணதேவி தேவரீரை உடனே

அழைத்து வரும்படி கட்டளையிட்டார்" என்றது. 'பயந்து, நடுங்கிப் போய் குண்டோதர சிங்க மஹா சிங்கன் ஸந்தியாவந்தனத்தைப் பாதியிலேயே நிறுத்தி விட்டு, அப்படியே ஓடி அந்தப்புரத்துக்குள் வந்தது. அங்கு வந்து பார்த்தால் விஷயம் ஒன்றையும் காண வில்லை. மூன்று ஆஸனங்கள் போட்டிருந்தன. எரு மைச்சி விருத்திமதி ஒன்றின்மேலே வீற்றிருந்தாள். மஹாராணி ஸுவர்ண்தேவி ஒன்றில் வீற்றிருந்தாள். மற்றொன்று வெறுமே இருந்தது. "என்ன விஷயம்?" என்று கேட்டுக்கொண்டே குண்டோதரன் அந்தப் புரத்திற்குள் புகுந்தான். இவனைக் கண்டவுடன் விருத்திமதியும் ஸுவர்ணவும் தம் ஆஸனங்களி லிருந்தெழுந்து நின்றனர். "என்ன விஷயம், என்ன விஷயம் ?" என்று குண்டோதரன் நெரித்துக் கேட் டான்.

"விருத்திமதியிடம் கேளுங்கள். அவள் சொல்லு வாள்" என்று ஸுவர்ண சொன்னாள்.

"ஓஹோ பெரிய விபத்து ஒன்றும் இல்லை, அந்த நரிச்சி விஷயம் தான். அவளை விடுவிக்கச் சொல்லி இந்த எருமைச்சி கேட்க வந்திருக்கிறாள். நாம் மடத்தனமாக அளவுக்கு மிஞ்சி மனம் பதற இடம் கொடுத்துவிட்டோம். இருந்தாலும் நம்முடைய பயத்தை வெளியே காண்பிக்கக்கூடாது" என்று மனதில் நினைத்துக்கொண்டு மீசைகளைத் திருகிவிட்டு, லேசான ராஜநடை நடந்துபோய் மூன்றும் ஆஸனத் தில் உட்கார்ந்துகொண்டு குண்டோதரன் தொண்டை

யைக் கனைத்து நோக்கிக்கொண்டு விருத்திமதியை நோக்கி " என்ன விஷயம்?" என்றான்.

அப்போது விருத்திமதி சொல்லுகிறாள்:— " ராஜேச்வரா, தங்களுடைய ராஜ்யத்திற்கு பெரிய விபத்து நேரிட்டிருக்கிறது. தங்கள்மீது வீரவர்மன் படையெடுத்து வரப்போகிறான். இவ்வளவு காலம் இந்த ராஜ்யத்தில் ஸமாதான மிருந்தது. இப்போது பாழ்த்த யுத்தம் இங்கும் வந்து பிரவேசிக்கப் போகிறது. ஐயோ, நாங்கள் என்ன செய்வோம்? குடிகளை எல்லாம் ஸுவர்ணதேவி தன்னுடைய பெற்ற குழந்தைகளுக்கு ஸமானமாக நினைப்பவளாயிற்றே! அவளுடைய பழக்கத்தால் எனக்கு இந்த ராஜ்யத்தினிடம் அருமையான பக்தி உண்டாய்விட்டதே! என் உயிருக்குமாத்திரம் தீங்கு வருவதாக இருந்தால் நான் அதை பொருட்டாக நினைக்கமாட்டேனே! ராஜ்ய முழுமைக்கும் ஹானி வருகிறதே! ஆஹா! என் செய்வேன்? எத்தனை ஸுமங்கலிகள் தாலி யறுப்பார்கள்! எத்தனை தாய்மார் பிள்ளை யற்றுப் போவார்கள்! எத்தனை குழந்தைகள் தந்தையற்றுப்போகும்! எத்தனை தாய்மார் பிள்ளைகளைச் சாகக்கொடுத்து எங்கும் தீராத துக்கத் துக்காளாய், பரத்திலும் புத் என்ற நரகத்தில் விழும்படியாகும்! ஐயோ, புத்திரர்களில்லாத பிதாக்கள், புத் என்ற நரகத்துக்குப் போவார்களென்று சாஸ்திரங்கள் திண்ணம் கூறுகின்றனவே! உமது புத்திரர்களே போரில் மடியும்படி நேர்ந்தாலும் நேரிடக்கூடுமே! அப்போது நீர் எப்படியெல்லாம் கஷ்டப்படுவீரோ,

அறிகிலேன். தேவரீருடைய பிராணனுக்கே ஆபத்தல்லவா? நாங்கள் என்ன செய்வோம்? இனி நான் ஸுவர்ணதேவியின் முகத்தில் எப்படி விழிப்பேன்?" என்று சொல்லி கோவென்று விம்மி விம்மி அழுதாள்.

குண்டோதரராயன்:—"ஏன் அந்த வீரவர்மன் நம்மீது படையெடுத்து வரப்போகிறன்? அதை முதலாவது சொல்லு" என்றுருமினன்.

அப்போது விருத்திமதி:—"தங்களுடைய சிப்பாய்கள் வீரவர்மனுடைய தாய்க்கு ஸமானமான செவிலித்தாயைப் பிடித்துச் சிறைப்படுத்திவிட்டார்கள்! இந்த விஷயம் அவன் கேட்டால், க்ஷணங்கூட பொறுக்கமாட்டான். யுத்தம் வருவது நிச்சயம்" என்று சொன்னள்.

இது கேட்ட குண்டோதர சிங்க மஹாசிங்க ராயன் "எனது சிப்பாய்களால் கைதி செய்யப்பட்ட வீரவர்மனுடைய செவிலித்தாயின் நாமம் யாது?" என்று வினவினன்.

"நரிச்சி நல்லதங்கையம்மன்" என்று விருத்திமதி சொன்னள்.

இதைக்கேட்ட குண்டோதர சிங்கராய மஹாசிங்கன் கட கட கட கட கட கட வென்று சிரிக்க ஆரம்பித்தான்.

# கதைக் கொத்து

## வைசாக்தன் என்ற பண்டாரத்தின் கதை.

வேதபுரத்தில் வீதியிலே ஒரு பண்டாரம் நன்ருகப் பாட்டுப் பாடிக்கொண்டு வந்தான்.

அவன் நெற்றியிலே ஒரு நாமம், அதன் மேலே விபூதிக் குறுக்கு, நடுவில் ஒரு குங்குமப் பொட்டு.

"உனக்கு எந்த ஊர்?" என்று கேட்டேன்.

"நடுப்பட்டி" என்று அந்தப் பண்டாரம் சொன்னுன்.

"நீ எந்த மதம்?" என்று கேட்டேன்.

"வைசாக்தம்" என்ருன்.

சிரிப்புடன் "அதற் கர்த்த மென்ன?" என்று கேட்டேன்.

"வைஷ்ணவ—சைவ—சாக்தம்" என்று விளக்கினுன்.

"இந்த மதத்தின் கொள்கை யென்ன?" என்று கேட்டேன்.

அப்போது பண்டாரம் சொல்லுகிருன் :—

"விஷ்ணு தங்கை பார்வதி; பார்வதி புருஷன் சிவன். எல்லா தெய்வங்களும் ஒன்று. ஆதலால் தெய்வத்தை நம்ப வேண்டும், செல்வத்தைச் சேர்க்க

வேண்டும். இவ்வளவு தான் எங்கள் மதத்தினுடைய கொள்கை" என்முன்.

"இந்த மதம் யார் உண்டாக்கினது?" என்று கேட்டேன்.

"முன்ஞேர்கள் உண்டாக்கினது. தனித் தனியாகவே நல்ல மதங்கள் மூன்றையும் ஒன்று சேர்த்தால் மிகவும் நன்மை யுண்டாகு மென்று எனக்குத் திருப்பதி வெங்கடேசப் பெருமாளும், தில்லை நடராஜரும் கனவிலே சொன்னுர்கள். ஆதலால் ஒன்முகச் சேர்த்தேன்" என்று அந்தப் பண்டாரம் சொன்னுன்.

---

## சிறு கதை.

ஒரு வீட்டில் ஒரு புருஷனும் ஸ்திரீயும் குடியிருந்தார்கள். ஒரு நாள் இரவில் புருஷன் வீட்டுக்கு வரும் போது ஸ்திரீ சமையல் செய்து கொண்டிருந்தாள். சோறு பாதி கொதித்துக் கொண்டிருந்தது. அந்த ஸ்திரீ அன்றிரவு கொஞ்சம் உடம்பு அசௌகரியமாகவிருந்தபடியால், தனக்கு ஆஹாரம் வேண்டாமென்று நிச்சயித்துப் புருஷனுக்கு மாத்திர மென்று சமைத்தாள்.

புருஷன் வந்தவுடன், "நான் இன்றிரவு விரதமிருக்கப் போகிறேன். எனக்கு ஆஹாரம் வேண்டாம்" என்முன்.

உடனே பாதி கொதிக்கிற சோற்றை அவள் அப்படியே சும்மா விட்டுவிட்டு அடுப்பை நீரால்

அவித்து விடவில்லை. தங்களிருவருக்கும் உபயோக மில்லாவிடினும் மறுநாள் காலையில் வேலைக்காரிக்கு உதவுமென்று நினைத்து, அது நன்றாகக் கொதிக்கும் வரை காத்திருந்து வடித்து வைத்து விட்டுப் பிறகு நித்திரைக்குச் சென்றாள்.

அது போலவே, கர்மயோகி தான் ஒரு தொழில் செய்யத் தொடங்கி, இடையிலே அது தனக்குப் பய னில்லை யென்று தோன்றினால், அதை அப்படியே நிறுத்தி விடமாட்டான். பிறருக்குப் பயன் தருமென் பதைக் கொண்டு, தான் எடுத்த வேலையை முடித்த பிறகே வேறு காரியம் தொடங்குவான்.

## பிரார்த்தனை.

கிழவனுடைய அறிவு முதிர்ச்சியும், நடுவயதிற் குள்ள மனத்திடனும், இளைஞருடைய உத்ஸாஹமும், குழந்தையின் ஹிருதயமும், தேவர்களே, எனக்கு எப் போதும் நிலைத்திருக்கும்படி அருள் செய்க.

---

# சில வேடிக்கைக் கதைகள்.

## 1

## ஆனைக்கால் உதை.

ஒரு ஊரில் ஆனைக்கால் வியாதிகொண்ட ஒருவன் பழக்கடை வைத்திருந்தான். அந்தத் தெருவின் வழி யாகச் சில பிள்ளைகள் அடிக்கடி போவதுண்டு. போகும்போதெல்லாம் அவர்களுக்கு அந்தப் பழங் களில் சிலவற்றை எடுத்துக்கொண்டு போக வேண்டு

மென்ற விருப்பம் உண்டாயிற்று. கிட்டப் போனால் ஆனைக்கால்காரன் தனது பிரம்மாண்டமான காலைக் காட்டிப் "பயல்களே, கூடையிலே கை வைத்தால் உதைப்பேன். ஜாக்கிரதை!" என்பான்.

"சாதாரணக் காலால் அடித்தால் கூட எவ்வளவோ நோகிறதே, இந்த ஆனைக் காலால் அடி பட்டால் நாம் செத்தே போவோம்" என்று பயந்து பிள்ளைகள் ஓடி விடுவார்கள்.

இப்படி யிருக்கையில் ஒரு நாள் கடைக்காரன் பராக்காக இருக்கும் சமயம் பார்த்து, ஒரு பையன் மெல்லப் போய்க் கூடையிலிருந்து ஒரு பழத்தைக் கையிலெடுத்தான். இதற்குள் கடைக்காரன் திரும்பிப் பார்த்து, தனது பெரிய காலை சிரமத்துடன் தூக்கிப் பையனை ஒரு அடி அடித்தான். பஞ்சுத் தலையணையால் அடித்தது போலே அடி மெத்தென்று விழுந்தது. பையன் கலகலவென்று சிரித்துத் தெரு முனையிலே இருந்த தனது நண்பர்களைக் கூவி "அடே, எல்லோரும் வாருங்களடா! வெறும் சதை; எலும்பில்லை" என்றான். மனிதர்க ளெல்லாரும் பல விஷயங்களில் குழந்தைகளைப் போலவே காணப்படுகிறார்கள். "வெறுஞ் சதை"யாக இருக்கும் கஷ்டங்களைத் தூரத்திலிருந்து "எலும்புள்ள" கஷ்டங்களாக நினைத்துப் பிறர் அவதிப்படுவதை நாம் பார்த்ததில்லையா? நாம் அங்ஙனம் அவதிப்பட்டதில்லையா?

# 2

## கவிராயனும் கொல்லனும்.

ஐரோப்பாவிலே மஹா கீர்த்தி பெற்ற கவியொருவர் ஒரு கொல்லன் பட்டறை வழியாகப் போய்க் கொண்டிருந்தார். அப்போது பாட்டுச் சத்தம் கேட்டது. கவிராயர் உற்றுக் கேட்டார். உள்ளே கொல்லன் பாடிக்கொண்டிருந்தான். அந்தப் பாட்டு அந்தக் கவிராயராலே எழுதப்பட்டது. அதை அவன் பல வார்த்தைகளைச் சிதைத்தும் மாற்றியும் சந்தந் தவறியும் மனம்போன படிக்கெல்லாம் பாடிக்கொண்டிருந்தான். கவிராயருக்கு மஹா கோபம் வந்துவிட்டது; உடனே உள்ளே போய்க் கொல்லனுடைய பட்டறையிலிருந்த சாமான்களையும் கருவிகளையும் தாறுமாறாக மாற்றி வைத்துக் குழப்ப முண்டாக்கத் தொடங்கினார்.

கொல்லன் கோபத்துடன் :—"நீ யாரடா, பயித்தியம் கொண்டவன், என்னுடைய ஸாமான்களை யெல்லாம் கலைத்து வேலையைக் கெடுக்கிறாய்?" என்றான்.

"உனக்கென்ன?" என்று கேட்டார் கவிராயர்.

"எனக்கென்னவா! என்னுடைய சொத்து தம்பீ, என்னுடைய ஜீவனம்!" என்றான் கொல்லன்.

அதற்குக் கவிராயர் :—"அது போலவே தான், என்னுடைய பாட்டும். நீ சில நிமிஷங்களுக்கு முன்பு பாடிக்கொண்டிருந்த பாட்டை உண்டாக்கிய கவிராயன் நானே; என்னுடைய பாட்டை நீ தாறுமாறாகக் கலைத்தாய், எனக்கு அதுதான் ஜீவனம். இனி

மேல் நீ சரியாகப் படித்துக் கொள்ளாமல் ஒருவனுடைய பாட்டைக் கொலே செய்யாதே" என்று சொல்லிவிட்டுப் போனர்.

## 3

### அமெரிக்காவுக்குப் போன சீன ராஜகுமாரன்.

சீன தேசத்திலிருந்து ஒரு ராஜகுமாரன் அமெரிக்காவுக்குப் போயிருந்தானும். அப்போது ஒரு பிரபுவின் மனைவி சீனத்து விருந்தாளியுடன் பேசிக்கொண்டிருக்கையிலே அவள், "உங்களுடைய சீன தேசத்தில் கலியாணமாகும் வரை மணப் பெண் தனது புருஷன் முகத்தைப் பார்ப்பது வழக்க மில்லையாமே! மெய்தானு?" என்று கேட்டாள். அதற்கு ராஜகுமாரன்:— "உங்கள் தேசத்தில் சில பெண்கள் கலியாணமான பிறகு தனது புருஷன் முகத்தைப் பார்ப்பதில்லையென்று கேள்விப்படுகிறேன். அது மெய்தானு?" என்றான்.

## 4

### சாஸ்திரியார் மகன்.

ஒரு பிராமணப் பையன் தனது விளையாட்டு வண்டி தெருவிலே ஒடிந்து போனபடியால், அதைப் பார்த்து அழுதுகொண்டு நின்றான். அதைக் கண்ட ஒரு சிப்பாய்:—"குழந்தாய், ஏன் அழுகிறாய்?" என்று கேட்டான்.

பையன் :—" வண்டி ஒடிஞ்சு போச்சு."

சிப்பாய் :—" இதற்காக அழாதே. வீட்டிற்குப் போ. உன்னுடைய தகப்பனர் அதைச் செப்பனிட்டுக் கொடுத்து விடுவார்."

பையன்:—"எங்கப்பா சாஸ்திரியார், அவராலே வலியை நேர்ப்படுத்திக் கொடுக்க முடியாது. அவருக்கு ஒரு தொழிலும் தெரியாது. யார் வீட்டிலாவது அரிசி கொடுத்தால் வாங்கிக்கொண்டு வருவார். வேறே ஒரு இழவுந் தெரியாது." என்று விம்மி விம்மி யழுதான். சிப்பாய் சிரித்துக்கொண்டே போய் விட்டான்.

## 5

### ஓர் வியாதிக்கு ஓர் புதிய காரணம்.

வேதபுரி என்ற ஊரில் ஒரு பள்ளிக்கூடத்து வாத்தியாரும் ஒரு செட்டியாரும் சிநேகமாக இருந்தார்கள். வாத்தியார் செட்டியாரிடம் கொஞ்சம் கடன் வாங்கி யிருந்தார். செட்டியாருக்கு ஒரு நாள் காலிலே முள் தைத்துப் பிரமாதமாக வீங்கி யிருந்தது.

"செட்டியாரே, கால் ஏன் வீங்கி யிருக்கிறது?" என்று வாத்தியார் கேட்டார்.

"எல்லாத்துக்கும் காரணம் கையிலே பணமில்லாததுதான்" என்று செட்டியார் சொன்னார்.

சில தினங்களுக்குப் பின் வாத்தியாருக்கு பலமான ஜலதோஷம் பிடித்திருந்தது. செட்டியார் வந்தார். "ஏன், ஐயரே, ஜலதோஷம் பலமாக இருக்கிறதே" என்று கேட்டார்.

"கையிலே பணமில்லை. அது தான் சகலத்துக்கும் காரணம்" என்று வாத்தியார் சொன்னார். செட்டியார் புன்சிரிப்புடன் போய் விட்டார்.

# அந்தரடிச்சான் ஸாஹிப் கதை.

மொகலாய ராஜ்யத்தின் போது, தில்லி நகரத்தில் அந்தரடிச்சான் ஸாஹிப் என்ற ஒரு ரத்ந வியாபாரி இருந்தான். அவனுக்குப் பிதா பத்து லக்ஷம் ரூபாய் மதிக்கத் தகுந்த பூஸ்திதியும் பணமும் நகைகளும் வைத்துவிட்டுப் போனார். அவன் அவற்றை யெல்லாம் பால்யத்தில் சூதாடித் தோற்று விட்டான். அந்தரடிச்சான் ஸாஹிபுக்கு ஒரு பிள்ளை பிறந்தது. அவனுக்குச் செத்தான் ஸாஹிப் என்று பெயர். இந்தப் பிள்ளையும் அவன் மனைவியாகிய வில்ரில்லாப்பா என்பவளும், அவனுடைய சிறிய தகப்பன், ஒரு கிழவன், அவன் பெயர் மூர்ச்சே போட்டான் ஸாஹிப் ஆகிய மேற்படி கிழவனுமாக, இத்தனை பேர் அடங்கிய, பெரிய குடும்பத்தை அவன் புகையிலைக் கடை வைத்து ஸம்ரக்ஷணை செய்து வந்தான்.

இப்படி யிருக்கையில் அந்தரடிச்சானுக்குத் தீராத வயிற்றுவலி வந்தது. அத்துடன் கண்ணும் மங்கிவிட்டது. எட்டு யோஜனை தூரத்துக்கப்பால், ஒரு அதிர்வெடிச் சத்தம் கேட்டால், அவன் இங்கே பயந்து நடுங்கிப்போய், நூறு குட்டிக்கரணம் போடுவான்.

தலைக்குமேல் காக்கை பறக்கக் கண்டால், தெருவிலே போகையில் ஆந்தை கத்தினால், பூனை குறுக்கிட்டால், வண்டி எதிரே ஓடிவந்தால், சிப்பாயைக் கண்டால், இப்படி எவ்வித அபாயக்குறி நேரிட்டாலும்,

ஒவ்வொரு முறையும் நூறு நூறு குட்டிக்கரணம் போடுவது அவனுடைய வழக்கம்.

இங்ஙனம் தெருவில் போகும் போதும், வீட்டில் இருக்கும் நேரத்திலும் குட்டிக்கரணம் போட்டுப் போட்டு அவனை நெட்டைக் குத்தலாக நிறுத்துவதே கஷ்டமாய் விட்டது. ஒரு நாள் மேற்படி அந்தரடிச்சானிடம் அவனுடைய பிள்ளையாகிய செத்தான் ஸாஹிப் பின்வருமாறு சொல்லலானான் :—

"பப்பாரே! சுத்தமாக ரஸ மில்லை. காசு கொண்ட காலையில் நம்கீ ரொட்டி ஜாஸ்தி. மீன் இல்லை. சாப்பாட்டுக்குக் கஷ்டம். நமக்கு எதுவும் கைகூடவில்லை. ஹிம் ஹீம் ஹூகும்! நீ ரொம்பக் கட்டிக்காரன் என்று நீ நினைத்துக்கொண்டிருக்கிறாய். உம் ஹூம்! உன்னிடம் ஒரு கேள்வி கேட்க வேண்டும். நாளை கேட்கிறேன், ஹிக்கீம்! ஹிக்கீம்; இப்போதே கேட்டு விடட்டுமா? ஹிக்கா ஹிக்கா! ஹ்றம். ஹ்றம். ஜிம். ப்ஸ்ஸ்ஸ். நீ யன்றோ இந்த நிலைமையே குடும்பத்தைக் கொண்டு வந்து விட்டாய். ஓய்யோம்! ப்யோம்! ப்யோம். நம்கீ ரொட்டி ஜாஸ்தி, மீன் இல்லை. சாப்பாட்டுக்குக் கஷ்டம்! பாலா, மணிலாக் கொட்டை வாங்கிக் கொடு." என்றான்.

அப்போது அந்தரடிச்சான் சொல்லுகிறான் :—

"க்யாரே? நம்கீ ரொட்டி இல்லை. நீ மீனில்லையென்று நம்மிடத்திலே கோபிக்கிறாயே? அந்தக் கிழ மூர்ச்சே போட்டான் ஸாஹப் இருக்கிறார். அவராலே

வீட்டுக்கு ஒரு தம்படி வருமானம் கிடையாது. ஹாம்! என்ன சொன்னுயடா! நானு சூதாடினேன்? என்னை யாடா சொன்னுய்?" என்று கேட்டான்; உடனே மூந்நூறு பல்டியடித்துச் செத்தான் ஸாஹப் மேலே விழுந்தான்.

இப்படி இருக்கையில் அந்த ஊர் பாத்ஷாவுக்குப் பிறந்த நாள் பண்டிகை வந்தது. பெரிய கூட்டம். தோரணங்கள்; டால்கள்; பந்தர்கள்; மாலைகள்; விளக்கு வரிசைகள்; புலி வேஷங்கள், பெரிய பெரிய வஸ்தாதுகள் வந்து குஸ்திச் சண்டைகள், அதிர்வெடி ஜமா!

அதுக்கு நடுவே அந்தராடிச்சான் ஸாஹப் போய் நுழைந்தான். இத்தனை ஜமாவையும் பாத்ஷா ஏழாம் உப்பரிகையின் மேலே இருந்து பார்த்துக்கொண்டிருந் தான். ஓரிடத்தில் கத்திச் சண்டை நடந்துகொண் டிருந்தது.

காலை ஏழு மணி முதல் பகல் பத்து மணி வரையில் மூன்று மணி நேரமாக ஒரு க்ஷணம்கூட சிரமபரிஹார மில்லாமல் அங்கு இரண்டு பயில்வான்கள் கத்திப் போர் செய்துகொண்டிருந்தனர். போர் வெகு ஜீமூத மாக நடக்கிறது. அந்த இடத்தில் பெரிய கும்பல் கலையாமல், அத்தனை பேரும் சித்திரப் பதுமைகள் போலே அசையாமல் மேற்படி பயில்வான்களின் சண் டையைக் கண் கொட்டாமல் பார்த்துக்கொண்டு நின்றனர்.

பல இடங்களில் அந்தரடிச்சான் ஸாஹப் தட்டுண்டு கொட்டுண்டு அங்கே வந்து விழுந்தான். கூட்டம் பளீரென்று விலகிற்று. ஒருத்தன் ஹோ! என்று கத்திக்கொண்டோடிப் போனன். அத்தனை கூட்டமும் ஹோ, ஹோ, ஹோ, என்று கத்திக்கொண்டு ஓடிப்போயிற்று. இவன் படபடவென்று குட்டிக்கரணம் போட்டுக்கொண்டே கத்திச் சண்டை வஸ்தாதுகளின் மேலே போய் விழுந்தான். அவர்கள் ஹோ என்று கதறி ஒருவர் வாள் ஒருவர்மீது பாய இரத்தம் பீறிட்டுக் கீழே சாய்ந்தனர். இதை யெல்லாம் ஏழாம் உப்பரிகையின் மேலே யிருந்து பார்த்துக்கொண்டிருந்த பாத்ஷா "ஹோ, ஹோ, இவனை யன்றோ நமது ஸேனபதியாக நியமிக்க வேண்டும்!" என்று கருதி அவனை அழைத்து "நீ நமது ஸேனபதி வேலையை ஏற்றுக்கொள்" என்றான். இவன் அந்த வார்த்தையைக் கேட்டவுடன் ஸேனை யென்ற ஞாபகமும், சண்டை யென்ற நினைவும், அதிலிருந்து மரண மென்ற ஞாபகமும் மனதில் தோன்ற உடனே பயந்து நடுங்கிப் போய் முப்பது குட்டிக்கரணம் போட்டுப் பாத்ஷாவின் மேலே போய் விழுந்தான்.

"ஓஹோ! இவன் தனது வணக்கத்தையும் பராக்ரமத்தையும் நம்மிடத்தில் நேரே காண்பித்தான்" என்று பாத்ஷா ஸந்தோஷத்துடன் வியந்து அவனுக்கு லக்ஷம் மோஹரா விலையுள்ள ஒரு வயிர மாலையை ஸம்மானம் கொடுத்து, ஸேனபதி நியமன உத்தரவும் கொடுத்தனுப்பினர்.

அந்த பாத்ஷாவின் காலத்திலே எங்குமே சண்டையே கிடையாதாகையால், அந்தராடிச்சான் ஸாஹேப் போரில் தனது திறமையைக் காட்ட ஸந்தர்ப்பமே வாய்க்காமல் சாகுமளவும், ஸேனாபதி என்ற நிலைமையில் ஸௌக்கியமாக நாளொன்றுக்கு லக்ஷம் குட்டிக்கரணங்கள் போட்டுக்கொண்டு, இதனாலேயே எட்டுத் திசைகளிலும் கீர்த்தி யோங்க மிகவும் மேன்மையுடன் வாழ்ந்திருந்தான்.

---

## கிளிக் கதை.

எண்ணூறு வருஷங்களுக்கு முன்பு திருவண்ணாமலையில் மிளகாய்ப்பழச்சாமி என்றொரு பரதேசி இருந்தான். அவன் நாள்தோறும் இருபது மிளகாய்ப் பழத்தைத் தின்று ஒரு மிடறு தண்ணீரும் குடிப்பான். அவனிடம் ஒரு கிளியுண்டு. மடத்துக்கு வரும் ஜனங்களிடம் ஸ்காந்த புராணம் சொல்லிப் பிரசங்கம் செய்வது அந்தப் பரதேசியின் தொழில். பிரசங்கந் தொடங்கு முன்பு பரதேசி கிளியை நோக்கி:—

"முருகா, முருகா, ஒரு கதை சொல்லு" என்பான்.

உடனே, கிளி ஏதோ கங்கா மங்கா வென்று குழறும். பரதேசி சொல்லுவான் :—

"அடியார்களே, இங்கிருப்பது கிளியன்று. இவர் சுகப்பிரம ரிஷி. இவர் சொல்லிய வசனம் உங்கள் செவியில் தெளிவாக விழுந்திருக்கும். சிறிது கவனக்

குறைவாக இருந்தாலும் நான் அவர் சொல்லியதை மற்றொரு முறை சொல்லுகிறேன்.

கங்கா மங்கை மைந்தன்
பாம்பைத் தின்றது மயில்
மயிலின் மேலே கந்தன்.'

இதன் பொருள் என்னவென்றால்........" இவ் விதமாகத் தொடங்கிப் பரதேசிக் கந்த புராண முழுவதையும் நவரஸங்களைச் சேர்த்துச் சோனமாரியாகப் பொழிவான். ஜனங்கள் கேட்டுப் பரவச மடைந்து போய்ப் பொன் பொன்னாகப் பாதகாணிக்கை குவிப்பார்கள். அவன் அந்தப் பணத்தை எவ்விதமாகச் செலவழிப்பானோ யாருக்கும் தெரியாது. அது தேவர் மனுஷ்யர் அஸுரர் மூன்று ஜாதியாருக்கும் தெரியாத ரஹஸ்யம். இருந்தாலும் ஊரில் வதந்தி யெப்படி யென்றால், இவன் மேற்படி பொன்னை யெல்லாம் மலையடிவாரத்தில் ஏதோ ஒரு குகைக்குள் பதுக்கி வைத்திருப்பதாகவும், இருபது வருஷத்துக்குப் பிறகு அத்தனை பொன்னையும் எடுத்துப் பெரிய கோயில் கட்டப் போவதாகவும் சொல்லிக் கொண்டார்கள்.

இப்படி யிருக்கும்போது ஒரு நாள், திடீரென்று மிளகாய்ப்பழச்சாமி மறைந்து போய்விட்டான். பொழுது விடிந்து தூப்பு வேலை செய்யும் கிழவி வந்து பார்க்கும்போது மடம் திறந்து கிடந்தது. உள்ளே போய்ப் பார்த்தால், சாமியார், கூடு, கிளி, தடி, புஸ்தகம், திருவோடு முதலிய யாதொரு வஸ்துவுமில்லை. கிழவி கூவிவிட்டு வீடு போய்ச் சேர்ந்தாள். ஊரதி

காரிக்குத் தெரிந்தது. பொன்னை ஒரு வேளை பரதேசி மறந்துபோய் வைத்துவிட்டுப் போயிருக்கக்கூடும்; அதை யெடுத்து யாரேனும் ஓர் கர்மம் பண்ணலா மென்ற கர்மசிந்தையினால் அதிகாரி சேவகரை விட்டு மலையிலுள்ள பொந்து முழுவதையும் தொளை போட்டுப் பார்க்கச் சொன்னான். சிற்சில இடங்களில் ஓரிரண்டு பொன் அகப்பட்டது. தேடப் போனவர்களில் பல ரைத் தேள் கொட்டிற்று. அநேகரைப் பாம்பு தீண் டிற்று. அதிகாரி தேடுவதை நிறுத்திவிட்டான். சில தினங்களுக்கப்பால் வாழைப்பழச் சாமியாரென்ற மற்றொரு பரதேசி ஒரு கட்டுக் கட்டி விட்டான். அதெப்படி யென்றால், மிளகாய்ப் பழச்சாமி பொற் குடத்துடன் ஆகாயத்தை நோக்கிப் பறந்து போய் மேகமண்டலத்துக்குள் நுழைந்ததைத் தான் பக் கத்திலே யிருந்து பார்த்ததாகவும், தானே யிருந்து வழியனுப்பினதாகவும், புரளி பண்ணினான். அதிகாரி அடியார் விசுவாச முள்ளவனானதால் அந்தப் பரதேசி சொன்னதை நம்பி, அவர் பொன்னைத்தான் தேடப் போனது குற்றமென்று நினைத்து, மேற்படி மிளகாய்ப் பழச்சாமிக்கு வருஷந்தோறும் மேற்படி மடத்தில் குரு பூஜை நடத்தி வைப்பதாகவும், மடத்தை வாழைப் பழச்சாமி வைத்துக்கொண்டு கந்தபுராணப் பிரசங்கஞ் செய்து வந்தால் திருவிளக்குச் செலவு தான் கொடுத்து விடுவதாகவும் சொன்னான். வாழைப்பழச் சாமி சம்மதி கொண்டு மடத்தை ஒப்புக்கொண்டான். இவனுடைய விசேஷ மென்ன வென்றால், இவன்

நாளொன்றுக்கு இருபது வாழைப்பழம் தின்று ஒரு மிடறு தண்ணீர் குடிப்பான். அதன் பிறகு ஜலபானம் கிடையாது. இவனும் ஒரு கிளி வளர்த்தான். அதற்கும் கங்கா மங்கா என்று கற்றுக்கொடுத்து, அதையும் சுகப்பிரம ரிஷி யென்று சொன்னான். ஆனால் பிரசங்கம் செய்வதில் பழைய சாமியாருக்குள்ள திறமையில் நூற்றி லொருபங்கு கூட இவனிடம் கிடையாது. ஆகையால் இவனுக்குப் பழைய வரும்படியில் நாற்றி லொரு பங்கு கூடக் கிடையாது. இருந்தாலும் சொற்பத்தைக் கொண்டு ஒருவாறு வாழைப்பழச் செலவை நடத்தி வந்தான். இப்படி யிருக்கையில் ஒரு நாள் நாலைந்து புதிய சீடருக்குக் கந்த புராணம் சொல்லத் தொடங்கி வாழைப்பழச் சாமி தனது சுகப்பிரம ரிஷியிடம் கேள்வி போட்டுக்கொண்டிருக்கையிலே, திடீரென்று மடத்துக்குள் பழைய மிளகாய்ப்பழச்சாமி தனது கிளிக்கூடு ஸஹிதமாக வந்து தோன்றினான். சாமிக்கும் சாமிக்கும் குத்துச் சண்டை. மிளகாய்ப் பழச்சாமி காலை வாழைப்பழச்சாமி கடித்துக் காலிலே காயம். வாழைப்பழச்சாமிக்கு வெளிக்காயம் படவில்லை. உடம்புக்குள்ளே நல்ல ஊமைக்குத்து. அப்போது வந்த ஜ்வரத்தில் ஆறு மாஸம் கிடந்து பிழைத்தான். குத்துச் சண்டையின்போது கிளியும் கூட்டுக்குள் இருந்தபடியே ஒன்றுக்கொன்று கங்கா மங்கா என்று அம்பு போட்டதுபோல் தூஷணை செய்து கொண்டன. அந்த சமயத்தில் ஊர்க்கூட்டம் கூடி, அதிகாரியிடமிருந்து சேவகர் வந்து இரண்டு பரதேசிகளையும் பிடித்துக்கொண்டு போய் நியாய ஸ்தலத்தில்

விட்டார்கள். வாழைப்பழச்சாமியை ஊரை விட்டுத் துரத்திவிடும்படிக்கும், மிளகாய்ப்பழச்சாமி மடத்தை எடுத்துக்கொள்ளும்படிக்கும், இனிமேல் கந்த புராண உபந்யாஸத்தில் வரும் பொன்னில் ஆறி லொரு பங்கு கோயிலுக்கும், நாலி லொரு பங்கு அதிகாரிக்கும் செலுத்தி விடும்படிக்கும் நியாய ஸ்தலத்தில் தீர்ப்புச் செய்யப்பட்டது.

---

## இருள்.

வித்யா நகரம் என்ற பட்டணத்தில், எண்ணூறு வருஷத்துக்கு முன், திடசித்தன் என்று ஒரு ராஜா இருந்தான். அவனுடைய பந்துக்களிலே சிலர் விரோ தத்தினால் அவனுக்குப் பல தீங்குகள் செய்யலாயினர். ஒரு நாள் அவன் நித்திரை செய்யும்போது எதிரிகள் அரண்மனை வேலைக்காரரிலே சிலரை வசமாக்கி உள்ளே நுழைந்து அவன் கால்களைக் கட்டி எடுத்துக்கொண்டு போய், சமீபத்திலிருந்த மலைச் சாரலில் ஒரு குகைக் குள்ளே போட்டு வெளியே வர முடியாதபடி ஒரு பாறையால் மூடி வைத்து விட்டார்கள். இவ்வள வுக்கு மிடையே அவன் கண் விழிக்காதபடி மூக்கிலே ஒரு மயக்கப் பச்சிலையின் சாற்றைப் பிழிந்து விட் டார்கள்.

நெடு நேரம் கழிந்த பிறகு, பச்சிலையின் மயக்கம் தெளியவே அரசன் கண்ணை விழித்துப் பார்க்கும் போது, கை கால்கள் கட்டுண்டு தான் பேரிருளிலே கிடப்பதை உணர்ந்துகொண்டான். “ எங்கிருக்கி

ரோம்" என்று சிந்தித்தான். இடம் தெரியவில்லை. "நமக்கு யார் இவ்விதமான தீமை செய்திருக்கக் கூடும்?" என்று யோசனை செய்து பார்த்தான். ஒன்றும் தெளிவாக விளங்கவில்லை. எழுந்து நிற்க முயற்சி செய்தான். சாத்தியப்படவில்லை. தாகம் நாக்கை வறட்டிற்று, கண்கள் சுழன்றன. நெஞ்சு படீல் படீலென்று புடைத்துக் கொண்டது. "தெய்வமே, என்னைக் கொல்லவா நிச்சயித்து விட்டாய்?" என்று கூவினான்.

"ஆம்" என்றொரு குரல் கேட்டது.

"ஆமென்கிறாயே, நீ யார்?" என்று வினவினான்.

"நான் காலன். உன் உயிரைக் கொண்டுபோக வந்திருக்கிறேன்" என்று அந்த மறை குரல் சொல்லிற்று.

அப்போது திடசித்தன் :—"நான் யௌவனப் பருவத்தில் இருக்கிறேன். அறிவிலும் அன்பிலும் சிறந்த எனது மனைவியையும், சிங்கக்குட்டி போன்ற என் மகனையும் செழிப்பும் புகழும் மிகுந்த என் நாட்டையும் விட்டு விட்டு உன்னுடன் வருவதில் எனக்கு ஸம்மதமில்லை. இங்கிருந்து போய்விடு" என்றான். மறை குரல் கொல்லென்று சிரித்தது.

"நான் எப்போது கொண்டு போகப்பட்டேன்?" என்று திடசித்தன் கேட்டான்.

"வெடியும் ஒரு ஜாமத்திற்குள்ளே" என்று குரல் சொல்லிற்று. இது கேட்ட மாத்திரத்திலே

திடசித்தன் அயர்ந்து போனான். கண்கள் முன்னிலும் அதிகமாகச் சுழன்றன. நெஞ்சு முன்னிலும் விரைவாக அடித்தது. கால்கள் பதறலாயின.

அப்போது அவனுடைய தாய் சொல்லிக்கொண்டிருந்த மந்திர மொன்று நினைப்பு வந்தது. உடனே உச்சரித்தான். தாய் இறந்து போகும் ஸமயத்தில் அவனை அழைத்து அந்த மந்திரத்தை அவன் காதிலே உபதேசம் செய்துவிட்டு, "மகனே, உனக்கு எவ்வளவு பெரிய ஆபத்து வந்த சமயத்திலும் நீ இம்மந்திரத்தை உச்சரித்தால் விலகிப் போய்விடும்" என்று சொல்லியிருந்தாள். இப்போது அதனை உச்சரித்தான். 'கரோமி' (செய்கிறேன்) என்பதே அம்மந்திரம். "கரோமி, கரோமி, கரோமி" என்று மூன்று தரம் சொன்னான்.

காலிலே ஒரு பாம்பு வந்து கடித்தது.

"தாயே, உன் மந்திரத்தின் பயன் இதுதானா?" என்று அலறினான்.

"அஞ்சாதே, மந்திரத்தைச் சொல்லு, மந்திரத்தைச் சொல்லு, மந்திரத்தைச் சொல்லு, மந்திரத்தைச் சொல்லு" என்று அசரீரி வாக்கு பிறந்தது.

இந்தப் புதிய வாக்கைக் கேட்கும்போது அவனுடைய தாயின் குரலைப் போலே யிருந்தது.

கரோமி, கரோமி, கரோமி, செய்கிறேன், செய்கிறேன், செய்கிறேன் என்று மறுபடி ஜபிக்கலானான்.

"குரு, குரு, குரு" (செய், செய், செய்) என்றது அசரீரி.

உடனே மூச்சை உள்ளே இழுத்து அமானுஷிக மான வேகத்துடன் கையை உதறினான். கைக்களைகள் படீரென்று நீங்கின. உடைவாளை யெடுத்தான்.

"செய், செய், செய்" என்று மறுபடி சத்தம் கேட்டது.

பாம்பு கடிக்க கால் விரலைப் பளிச்சென்று வெட்டி எறிந்து விட்டான். குரு, குரு, குரு என்ற சத்தம் மீண்டும் கேட்டது.

உடம்பிலிருந்த துணியைக் கிழித்து, மண்ணிலே புரட்டி அதிக கால் ரத்தம் விரலிலிருந்து விழாதபடி சுற்றிக்கொண்டான்.

மறுபடியும் 'செய்' என்ற தொனி பிறந்தது. களை களை வாளால் வெட்டிவிட்டான்.

அப்போது அவனுடைய சரீரத்திலே மறுபடியும் ஆயாஸமுண்டாயிற்று. அப்படியே சோர்ந்து விழுந்தான். ஜ்வரம் வந்துவிட்டது. மரண தாக மூண்டாயிற்று.

"ஐயோ, தாகம் பொறுக்கவில்லையே? என்ன செய்வேன்?" என்று புலம்பினான்.

"மந்திரத்தை ஜபம் பண்ணு" என்றது அசரீரி.

"கரோமி, கரோமி, கரோமி" என்று தாய் மந்திரத்தை மறுபடி ஜபித்தான்.

"செய்" என்று கட்டளை பிறந்தது.

"என்ன செய்வது?" என்றேங்கினான்.

" சோர்வடையாதே, செய்கை செய்" என்றது தொனி.

" என்ன செய்வது ?" என்று பின்னொரு முறை கேட்டான்.

" கல்லிலே முட்டு " என்று கட்டளை பிறந்தது.

எழுந்து வந்து குகையை மூடியிருந்த பாறையிலே போய் முட்டினான். மண்டை யுடைந்து செத்தால் பெரிதில்லையென்று துணிவுகொண்டு செய்தான். மண்டை உடையவில்லை. குகையை மூடிச் சென்றவர்கள் அவஸரத்திலே அந்தக் கல்லை மிகவும் சரிவாக வைத்துவிட்டுப் போயிருந்தார்கள். பாறை சரிந்து கீழே விழுந்து விட்டது. வெளியே வந்து பார்த்தான். சூர்யோதயம் ஆயிற்று. கரோமி, கரோமி, கரோமி; செய்கிறேன், செய்கிறேன், செய்கிறேன் என்று சொல்லிக்கொண்டு தனது ராஜதானி போய்ச் சேர்ந்தான். பிறகு அவனுக்கோர் பகையுமில்லை.

---

## குதிரைக் கொம்பு.

சிந்து தேசத்தில் அந்தபுரம் என்கிற நகரத்தில் ரீவண நாயக்கன் என்ற ராஜா இருந்தான். இவன் ஒரு சில யுகங்களின் முன்பு இலங்கையில் அரசாண்ட ராவணனுடைய வம்சம் என்று சொல்லிக்கொண்டான். இவனுடைய சபையில் எல்லா சாஸ்திரங்களையும் கரைத்துக் குடித்த பல பண்டிதர் விளங்கினார்கள். ஒரு நாள் அரசன் தனது சபையாரை நோக்கி,

"குதிரைக்கு ஏன் கொம்பில்லை?" என்று கேட்டான். சபையிலிருந்த பண்டிதர்கள் எல்லாம் திகைத்துப் போனார்கள். அப்போது கர்நாடக தேசத்திலிருந்து அந்த அரசனிடம் ஸம்மானம் வாங்கும் பொருட்டாக வந்திருந்த வக்ரமுக சாஸ்திரி என்பவர் தான் அந்தக் கேள்விக்கு விடை சொல்வதாகத் தெரிவித்தார். அரசன் அனுமதி தந்தவுடன் மேற்படி வக்ரமுக சாஸ்திரி பின்வருமாறு கதை சொல்லத் தொடங்கினார் :—

"கேளீர், ரீவண மஹாராஜனே, முற்காலத்தில் குதிரைகளுக் கெல்லாம் கொம்பிருந்தது. இலங்கையில் அரசாண்ட தமது மூதாதையாகிய ராவணாசுரன் காலத்தில், அந்த ராஜனுடைய ஆக்கினைப்படி பிரம தேவன் குதிரைகளுக்குக் கொம்பு வைக்கும் வழக்கத்தை நிறுத்தி விட்டான்" என்றார்.

இதைக் கேட்டவுடன் ரீவண நாயக்கன் உடல் பூரித்துப் போய், "அதென்ன விஷயம்? அந்தக் கதையை ஸவிஸ்தாரமாகச் சொல்லும்" என்றான்.

வக்ரமுக சாஸ்திரி சொல்லுகிறார் :—

"இலங்கையில் ராவணன் தர்மராஜ்யம் நடத்திய காலத்தில் மாதம் மூன்று மழை பெய்தது. அந்தக் காலத்தில் ஒரு வருஷத்துக்குப் பதின்மூன்று மாஸமும், ஒரு மாஸத்துக்கு முப்பத்துமூன்று தினங்களும் ஒரே கணக்காக ஏற்பட்டிருந்தன. ஆகவே பதினோரு நாளுக்கு ஒரு மழை வீதம், வருஷத்தில் முப்பத்தொன்பது மழை பெய்தது. பிராமணர் நான்கு

வேதம், ஆறு சாஸ்திரம், 64 கலைஞானங்கள், ஆயிரத் தெட்டுப் புராணங்கள், பதினாயிரத் தெண்பது கிளைப் புராணங்கள், எல்லாவற்றிலும் ஓரெழுத்துக்கூடத் தவ றாமல், கடைசியிலிருந்து ஆரம்பம்வரை பார்க்காமல் சொல்லக்கூடிய அத்தனை திறமையுடனிருந்தார்கள். ஒவ்வொரு பிராமணன் வீட்டிலும் நாள்தோறும் தவ றாமல் இருபத்து நாலாயிரம் ஆடுகள் வெட்டிப் பலவித மான யாகங்களை நடத்தி வந்தார்கள். ஆட்டுக் கணக்கு மாத்திரம்தான் புராணக்காரர் சொல்லியிருக்கிறார். மற்ற மிருகங்களின் தொகை அவர் சொல்லி யிருக்க லாம். இப்படியே மற்ற வருணத்தாரும் தத்தம் கடமைகளை நேராக நிறைவேற்றிக்கொண்டு வந்தார் கள். எல்லா ஜீவர்களும் புண்யாத்மாக்களாகவும், தர் மிஷ்டராகவும் இருந்து இகத்தில் இன்பங்களை யெல் லாம் அனுபவித்துப் பரத்தில் ஸாக்ஷாத் பரமசிவ னுடைய திருவடி நிழலைச் சார்ந்தனர். அப்போது அயோத்தி நகரத்தில் அரசு செலுத்திய தசரதராஜன் பிள்ளையாகிய ராமன், தனக்கு மூத்தவனாகிய பரத னுக்குப் பட்டங் கட்டாமல் தனக்கே பட்டங் கட்டிக் கொள்ள விரும்பித் தனது தந்தையை எதிர்த்துக் கல கம் பண்ணினான். பிதாவுக்குக் கோபமுண்டாய் ராமனையும் அவனுக்குத் துணை செய்தவனாகிய லக்ஷ் மணனையும் ராஜ்யத்தை விட்டு வெளியே துரத்திவிட் டான். அங்கிருந்து அவர்கள் மிதிலை நகரத்துக்கு ஓடிப்போய், அந் நகரத்தின் அரசனாகிய ஜனகனைச் சரணமடைந்தார்கள். அவன் இவர்களுக்கு அபயம்

மகாடுத்துக் காப்பாற்றி வருகையில் ராமன் மேற்படி ஜனகராஜன் மகளாகிய ஸீதையின் அழகைக் கண்டு மோஹித்து, அவளைத் திருட்டாகக் கவர்ந்துகொண்டு தண்டகாரண்யம் புகுந்தான். அங்கு ராமர் லக்ஷ்மணர் முனிவர்களை யெல்லாம் பலவிதங்களிலே ஹிம்சை செய்தார்; யாகங்களைக் கெடுத்தனர். இந்த விஷயம் அங்கே அதிகாரம் செய்துவந்த சூர்ப்பநகைத் தேவி யின் காதில் பட்டது. ராவணன் தங்கையாகையாலும், பிராமண குலமானபடியினாலும், ரிஷிகளுக்கு ராமன் செய்யும் துன்பத்தைப் பொறுக்கமாட்டாதவளாய், அவள் அந்த ராமனையும், அவன் தம்பி லக்ஷ்மணனை யும், பிடித்துக் கட்டிக்கொண்டு வரும்படி தனது படையினிடம் உத்திரவு கொடுத்தாள். அப்படியே ராமலக்ஷ்மணரைப் பிடித்துத் தாம்பினாலே கட்டிச் சூர்ப்பநகையின் சன்னிதியிலே கொண்டு சேர்த்தனர். அவள் அவ்விருவரையும் கட்டவிழ்த்து விடும்படி செய்து, பலவிதமான கடூர வார்த்தைகள் சொல்லி பயமுறுத்திய பிறகு ராஜபுத்ரராகவும், இளம் பிள்ளைக ளாகவும் இருந்தபடியால், இதுவரை செய்த துஷ்ட கார்யங்களை யெல்லாம் க்ஷமிப்பதாகவும், இனிமேல் இவ்விதமான கார்யங்கள் செய்தால் கடுந்தண்டனை கிடைக்கு மென்றும் சொல்லி, நானாவிதமான புத்தி புகட்டிய பின்பு, அவர்களைச் சிறிது காலம் அரண் மனையிலிருந்து விருந்துண்டு போகும்படி செய்தாள். அப்போது ஸீதை சூர்ப்பநகையிடம் தனியாக வார்த்தை சொல்லிக்கொண்டிருக்கையில், ராமன்

தன்னை வலிமையாலே தூக்கிக்கொண்டு வந்தானென்றும், தனக்கு மறுபடியும் மிதிலைக்குப் போய்த் தனது பிதாவுடன் இருக்கப் பிரியம் என்றும் சொன்னாள். இதைக் கேட்டு சூர்ப்பநகை மனமிரங்கி, ஸீதையை இலங்கைக்கு அனுப்பி, அங்கிருந்து மிதிலையில் கொண்டு சேர்க்கும்படி ராவணனுக்குச் சொல்லியனுப்பினாள். ராவணனுடைய அரண்மனைக்கு வந்து சேர்ந்தவுடனே அவளை மிதிலைக்கு அனுப்பும் பொருட்டு நல்ல நாள் பார்த்தார்கள். அந்த வருஷம் முழுவதும் நல்ல நாள் அகப்படவில்லை. மறு வருஷமும் நல்ல நாள் கிடைக்கவில்லை. ஆகையால் ஸீதையை இரண்டு வருஷம் தனது அரண்மனையிலேயே தங்கிவிட்டுப் போகும்படி ராவணன் ஆக்கினை செய்தான்.

"தண்டகாரண்யத்தில் இராமன் சூர்ப்பநகையிடம் 'ஸீதை எங்கே?' என்று கேட்டான். மிதிலைக்கு அனுப்பிவிட்டதாக சூர்ப்பநகை சொன்னாள். 'எப்படி நீ இந்தக் காரியம் செய்யலாம்?' என்று கோபித்து லக்ஷ்மணன் சூர்ப்பநகையை நிந்திக்கலானான். அப்போது சூர்ப்பநகை தன் இடுப்பில் பழங்களறுத்துத் தின்னுவதற்காகச் சொருகி வைத்துக்கொண்டிருந்த கத்தியைக் கொண்டு லக்ஷ்மணனுடைய இரண்டு காதுகளையும், கால் கட்டை விரல்களையும் நறுக்கிவிட்டாள். இவளுடைய வீரச் செய்கையைக் கண்டு ராமன் இவள்மேல் மோஹங்கொண்டு, 'அடா! ஸீதையைத்தான் மிதிலைக்கனுப்பிவிட்டாய், என்னை நீ விவாகஞ் செய்துகொள்ளு' என்

ளுன். இதைக் கேட்டவுடனே சூர்ப்பநகை கன்ன மிரண்டும் சிவந்து போகும்படி வெட்கப்பட்டு 'நீ அழகான பிள்ளைதான், உன்னைக் கலியாணம் பண்ணிக் கொள்ளலாம். ஆனால் அண்ணு கோபித்துக்கொள்ளுவார். இனிமேல் நீ இங்கிருக்கலாகாது. இருந்தால் அபவாதத்துக்கு இடமுண்டாகும்' என்ருள்.

"அப்போது ராமன் :—'ஸீதையை எப்போது மிதிலைக்கனுப்பினுய்? யாருடன் அனுப்பினுய்? அவள் இப்போது எவ்வளவு தூரம் போயிருப்பாள்?' என்று கேட்டான்.

"அதற்கு சூர்ப்பநகை :—'இனிமேல் ஸீதையின் நினைப்பை விட்டுவிடு. அவளை இலங்கைக்கு அண்ணன் ராவணனிடத்தில் அனுப்பி யிருக்கிறேன். அவன் அவளை மிதிலைக்கு அனுப்பினுலும் அனுப்பக்கூடும். எது வேண்டுமானுலும் செய்யக்கூடும். மூன்றுலகத்திற்கும் அவன் அரசன். ஸீதையை மறந்துவிடு' என்ருள்.

"இதைக் கேட்டு ராமன் அங்கிருந்து வெளியேறி எப்படியேனும் ஸீதையை ராவணனிடமிருந்து மீட்க வேண்டுமென்று நினைத்துக் கிஷ்கிந்தா நகரத்திற்கு வந்து சேர்ந்தான். அந்தக் கிஷ்கிந்தா நகரத்தில் அப்போது சுக்கிரீவன் என்ற ராஜா அரசு செலுத்தினுன். இவனுக்குமுன் இவனுடைய தமயனுகிய வாலி ஆண்டான். வாலிக்கும் ராவணனுக்கும் மிகுந்த சிநேகம்; இரண்டு பேரும் ஒரு பள்ளிக்கூடத்திலே கணக்கு வாசித்தார்கள். மூன்றுலகத்திலும் கப்பம் வாங்கின

ராவணன் கிஷ்கிந்தா பட்டணத்துக்கு வாலி யாதொரு கப்பமும் செலுத்த வேண்டியதில்லை யென்று சொல்லி விட்டான். இந்த வாலி தூங்கிக்கொண்டிருக்கையில் தம்பி சுக்ரீவன் இவன் கழுத்தை மண்வெட்டியால் வெட்டி யெறிந்துவிட்டு அவன் மனைவியாகிய தாரையை வலிமையால் மணந்துகொண்டு அனுமான் என்ற மந்திரியின் தந்திரத்தால் ராஜ்யத்தை வசப்படுத்திக் கொண்டான். இதைக் கேட்டு ராவணன் மஹா கோபத்துடன் சுக்ரீவனுக்குப் பின்வருமாறு ஓலை யெழுதி யனுப்பினான் :—

"'கிஷ்கிந்தையில் சுக்ரீவனுக்கு இலங்கேசனாகிய ராவணன் எழுதிக்கொண்டது: நமது சிநேகனைக் கொன்றாய்; உன் அண்ணனைக் கொன்றாய்; அரசைத் திருடினாய். இந்த ஓலை கண்டவுடன் தாரையை இலங்கையிலுள்ள கன்யா ஸ்த்ரீ மடத்துக்கு அனுப்பவேண்டும். ராஜ்யத்தை வாலி மகன் அங்கதனிடம் கொடுக்க வேண்டும். நீ ஸந்யாஸம் பெற்றுக்கொண்டு ராஜ்யத்தை விட்டு வெளியேறிவிட வேண்டும். இந்த உத்திரவுக்குக் கீழ்ப்படாத விஷயத்தில் உன்மீது படையெடுத்து வருவோம்.'

"மேற்படி உத்திரவு கண்டவுடன் சுக்ரீவன் பயந்துபோய் அனுமானை நோக்கி 'என்ன செய்வோம்?' என்று கேட்டான். அனுமான் சொல்லிய யோஜனை என்னவென்றால் :

"'வாலியிடம் பிடித்துக்கொண்ட தாரையையும் பதினேழு வயதுக்குட்பட்ட வேறு பதினேழரைக்

கோடிப் பெண்களையும் ராவணனுக்கு அடிமையாக அனுப்பவேண்டும். ராவணனாலே ஆதரித்துப் போற்றப்படும் வைதிக ரிஷிகளின் யாகச் செலவுக்காக நாற்பது கோடியே ஐம்பது லட்சத்து முப்பத்து நாலாயிரத்து இருநூற்று நாற்பது ஆடுமாடுகளும், தோற்பைகளில் ஒவ்வொரு பை நாலாயிரம் படி கொள்ளக் கூடிய நானூறு கோடிப் பைகள் நிறைய ஸோமரஸம் என்ற சாறும் அனுப்பி அவனை சமாதானம் செய்து கொள்ள வேண்டும். இளவரசுப் பட்டம் அங்கதனுக்குச் சூட்டுவதாகவும் வருஷந்தோறும் நாலாயிரம் கோடிப் பொன் கப்பம் கட்டுவதாகவும் தெரிவிக்க வேண்டும். இத்தனையும் செய்தால் பிழைப்போம்' என்று அனுமான் சொன்னான். சுக்ரீவன் அப்படியே அடிமைப் பெண்களும், ஆடுமாடுகளும், சாறும், முதல் வருஷத்துக் கப்பத் தொகையும் சேகரம் பண்ணி அத்துடன் ஓலை யெழுதித் தூதர் வசம் கொடுத்தனுப்பினான். தூதர்கள் ஆடுமாடுகளையும், சாற்றையும், ராவணன் அரண்மனையிலே சேர்ப்பித்தார்கள். அடிமைப் பெண்களையும் பணத்தையும் முனிவரிடம் கொடுத்தார்கள். ஓலையை ராவணனிடம் கொடுத்தனர். போகிற வழியில் தூதர் அடிக்கடி தோற்பையிலுள்ள சாற்றைக் குடித்துக்கொண்டு போனபடியால், தாறுமாறாக வேலை செய்தார்கள். ராவணன் தனது நண்பருடன் ஆடுமாடுகளை யெல்லாம் அப்போதே கொன்று தின்று அந்தச் சாற்றையுங் குடித்து முடித்தவுடனே ஓலையைப் பிரித்து வாசித்துப் பார்த்தான். அடிமைப்

பெண்களும் பணமும் ஏன் தன் வசம் வந்து சேர வில்லை யென்று விசாரணை செய்தான். முனிவர்களின் மடங்களில் சேர்த்துவிட்டதாகவும், அவர்கள் அந்தப் பணத்தை யெல்லாம் யாகத்திலே தக்ஷிணையாக்கி யெடுத்துக்கொண்டபடியால், இனிமேல் திருப்பிக் கொடுப்பது சாஸ்திர விரோதமென்று சொல்லுவ தாகவும், அடிமைப் பெண்கள் ஆசிரமங்களிலிருந்து பெரும்பாலும் ஓடிப்போய்விட்டதாகவும் செய்தி கிடைத்தது. தூதர்களை யெல்லாம் உடனே கொல்லச் சொல்லிவிட்டு அந்த க்ஷணமே சுக்ரீவன்மேல் படை யெடுத்துச் செல்லும்படி ஸேனாபதியிடம் ஆக்ஞை செய்தான். அப்படியே நல்லதென்று சொல்லி ஸேனா பதி போய்ப் படைகளைச் சேகரித்தான். இந்தச் செய்தி யெல்லாம் வேவுகாரர் மூலமாகக் கிஷ்கிந்தைக்குப் போய் எட்டிவிட்டது. உடனே அனுமான் சொற்படி சுக்ரீவன் தனது படைகளைச் சேர்த்தான். ராவணன் படை தயாரான பிறகும், அதை நல்ல லக்னம் பார்த்து அனுப்ப வேண்டுமென்று காத்துக்கொண் டிருந்தான். இதற்குள்ளே அனுமான் தன்னுடைய ஜாதி ஒரு விதமான லேசான குரங்கு ஜாதி யாகை யால் விரைவாகக் குரங்குப் படைகளைத் திரட்டிக் கொண்டு லங்கையை நோக்கிப் புறப்பட்டான். இவ னுடைய சேனையிலே ராம லக்ஷ்மணரும் போய்ச் சேர்ந்தார்கள். இந்தச் சேனையிலே நாற்பத்தொன் பது கோடியே தொண்ணூற்று நாலு லட்சத்து முப் பத்தேழாயிரத்து முந்நூற்றைம்பத்தாறு காலாளும்,

அதற்கிரட்டிக் குதிரைப் படையும், அதில் நான்கு மடங்கு தேரும், அதில் எழுபது மடங்கு யானைகளும் வந்தன. இவர்கள் இலங்கைக்கு வரு முன்னாகவே ராவணன் சேனையிலிருந்து ஒரு பகுதி இவர்களை எதிர்த்துக் கொன்று முடித்து விட்டன. ராம லக்ஷ்மணர் மாத்திரம் சில சேனைப் பகுதிகளை வைத்துக் கொண்டு ரகஸ்யமாக இலங்கைக்குள்ளே வந்து நுழைந்து விட்டார்கள். இந்தச் செய்தி ராவணன் செவியிலே பட்டது. உடனே ராவணன் 'ஹா! ஹா! ஹா! நமது நகரத்திற்குள் மனிதர் சேனை கொண்டு வருவதா! இதென்ன வேடிக்கை! ஹா! ஹா! ஹா!' என்று பேரிரைச்சல் போட்டான். அந்த ஒலியைக் கேட்டு ஆதிசேஷன் செவிடாய்விட்டான். சூரியமண்டலம் தரைமேலே விழுந்தது. பிறகு ராவணன் ராமனுடைய சேனைகளை அழித்து, அவனையும் தம்பியையும் பிடித்துக்கொண்டு வரும்படி செய்து, இராஜகுமாரர் என்ற இரக்கத்தினால் கொல்லாமல் விட்டு, அவ்விருவரையும் தனது வேலையாட்களிடம் ஒப்புவித்து ஜனகன் வசம் சேர்க்கும்படி அனுப்பினான். பிறகு ஸீதையும் மிதிலைக்குப் போய்ச் சேர்ந்தாள்.

“மறுபடி, ஜனகன் கிருபை கொண்டு அந்த ராஜனுக்கே சீதையை விவாகம் செய்து கொடுத்து விட்டான். அப்பால் ராமலக்ஷ்மணர் அயோத்திக்குப் போய்ப் பரதனுக்குப் பணிந்து நடந்தார்கள். இது தான் நிஜமான 'ராமாயணக் கதை' ” என்று வக்ரமுக சாஸ்திரி ரீவண நாயக்கன் சபையிலே கதை சொன்னான்.

அப்போது ரீவணன் :—"சாஸ்திரியாரே, குதிரைக்கு ஏன் கொம்பில்லை என்று கேட்டால் இன்னும் அதற்கு மறுமொழி வரவில்லையே?"

வக்ரமுக சாஸ்திரி சொல்லுகிறார் :—

ராமன் படையெடுத்து வந்த செய்தி கேட்டு, ராவணன் "ஹா", "ஹா", "ஹா" என்று கூச்சலிட்ட போது, சத்தம் பொறுக்கமாட்டாமல் சூரிய மண்டலம் கீழே விழுந்ததென்று சொன்னேனன்றோ? அப்போது சூரியனுடைய குதிரையேழுக்கும் கொம்பு முறிந்து போய்விட்டது. சூரியன் வந்து ராவணன் பாதத்தில் விழுந்து, "என் குதிரைகள் சாகா வரமுடையன, இவற்றைப்போல் வேகம் வேறு கிடையாது. இவற்றிற்குக் கொம்பு முறிந்து போய்விட்டது. இனி உலகத்தாரெல்லாம் என்னை நகைப்பார்கள். என்ன செய்வேன்?" என்று அழுது முறையிட்டான். ராவணன் அந்த சூரியனிடம் கிருபை கொண்டு பிரமதேவனிடம், "இனிமேல் ஒரு குதிரைக்கும் கொம்பில்லாதபடி படைக்க வேண்டும், அவ்வாறு செய்தால் சூரியனுடைய குதிரைகளை யாரும் நகைக்க இடமிராது" என்று சொன்னான். அது முதலாக இன்று வரை குதிரைக்குக் கொம்பில்லாமல் பிரமதேவன் படைத்துக்கொண்டு வருகிறான்.

இவ்விதமாக வக்ரமுக சாஸ்திரி சொல்லியதைக் கேட்டு, ரீவண நாயக்கன் மகிழ்ச்சிகொண்டு மேற்படி சாஸ்திரிக்கு அக்ஷரத்துக்கு லக்ஷம் பொன்னாக அவர் சொல்லிய கதை முழுதிலும் எழுத்தெண்ணிப் பரிசு கொடுத்தான்.

# அர்ஜுன சந்தேகம்.

ஹஸ்தினாபுரத்தில் துரோணாசாரியரின் பள்ளிக் கூடத்தில் பாண்டு மகாராஜாவின் பிள்ளைகளும் துரியோதனாதிகளும் படித்து வருகையில், ஒரு நாள் சாயங்கால வேளையில் காற்று வாங்கிக்கொண்டு வரும்போது, அர்ஜுனன் கர்ணனைப் பார்த்து:—"ஏ கர்ணா, சண்டை நல்லதா? ஸமாதானம் நல்லதா?" என்று கேட்டான். (இது மஹாபாரதத்திலே ஒரு உப கதை; சாஸ்திர ப்ரமாண முடையது; வெறும் கற்பனை யன்று).

"ஸமாதானம் நல்லது" என்று கர்ணன் சொன்னான்.

"காரணமென்ன?" என்று கிரீடி கேட்டான்.

கர்ணன் சொல்லுகிறான்:—"அடே, அர்ஜுனா, சண்டை வந்தால் நான் உன்னை அடிப்பேன். அது உனக்குக் கஷ்டம். நானோ இரக்கச் சித்த முடையவன். நீ கஷ்டப்படுவதைப் பார்த்தால் என் மனம் தாங்காது. ஆகவே இரண்டு பேருக்கும் கஷ்டம். ஆதலால் ஸமாதானம் சிறந்தது" என்றான்.

அர்ஜுனன்:—"அடே கர்ணா, நம் இருவரைக் குறித்து நான் கேட்கவில்லை. பொதுப்படையாக உலகத்தில் சண்டை நல்லதா? சமாதானம் நல்லதா? என்று கேட்டேன்" என்றான்.

அதற்குக் கர்ணன்:—"பொது விஷய ஆராய்ச்சிகளில் எனக்கு ருசியில்லை" என்றான்.

இந்தப் பயலைக் கொன்று போடவேண்டும் என்று அர்ஜுனன் தன் மனதுக்குள்ளே தீர்மானம் செய்து கொண்டான். பிறகு அர்ஜுனன் துரோணாசாரியாரிடம் போய் அதே கேள்வியைக் கேட்டான்.

"சண்டை நல்லது" என்று துரோணாசார்யர் சொன்னார்.

"எதனாலே?" என்று பார்த்தன் கேட்டான்.

அப்போது துரோணாசார்யர் சொல்லுகிறார்:—"அடே விஜயா, சண்டையில் பணம் கிடைக்கும்; கீர்த்தி கிடைக்கும், இல்லாவிட்டால் மரணம் கிடைக்கும். ஸமாதானத்தில் ஸகலமும் ஸந்தேகம்—ஸ—ஸ—ஸ—" என்றார்..

பிறகு அர்ஜுனன் பீஷ்மாசார்யரிடம் போனான். "சண்டை நல்லதா, தாத்தா, ஸமாதானம் நல்லதா?" என்று கேட்டான். அப்போது கங்கா புத்திரனாகிய அந்தக் கிழவனார் சொல்லுகிறார்:—"குழந்தாய், அர்ஜுனா, ஸமாதானமே நல்லது. சண்டையில் நம்முடைய க்ஷத்திரிய குலத்திற்கு மஹிமையுண்டு. ஸமாதானத்தில் லோகத்துக்கே மஹிமை" என்றார்.

"நீர் சொல்லுவது நியாயமில்லை" என்று அர்ஜுனன் சொன்னான்.

"காரணத்தை முதலாவது சொல்ல வேண்டும், அர்ஜுனா, தீர்மானத்தை அதன் பிறகு சொல்லவேண்டும்" என்றார் கிழவர்.

அர்ஜுனன் சொல்லுகிறான்:—"தாத்தாஜீ, ஸமாதானத்தில் கர்ணன் மேலாகவும் நான் தாழ்வாகவும் இருக்கிறோம். சண்டை நடந்தால் உண்மை வெளிப்படும்" என்றான்.

அதற்கு பீஷ்மாசார்யர்:—"குழந்தாய், தர்மம் மேன்மை யடையும். சண்டையாலேனும், சமாதானத்தாலேனும், தர்மம் வெல்லத்தான் செய்யும். ஆதலால் உன் மனதில் கோபங்களை நீக்கி ஸமாதானத்தை நாடு. மனுஷ்ய ஜீவரெல்லாம் உடன் பிறந்தாரைப் போலே, மனுஷ்யர் பரஸ்பரம் அன்போடிருக்க வேண்டும். அன்பே தாரகம். முக்காலும் சொன்னேன். அன்பே தாரகம்" என்று சொல்லிக் கண்ணீர் ஒரு திவலை உதிர்த்தார்.

சில தினங்களுக் கப்பால் அஸ்தினபுரத்துக்கு வேதவியாஸர் வந்தார். அர்ஜுனன் அவரிடம் போய்ச் சண்டை நல்லதா, ஸமாதானம் நல்லதா என்று கேட்டான்.

அப்போது வேதவியாஸர் சொல்லுகிறார்:—"இரண்டும் நல்லன. ஸமயத்துக்குத் தக்கபடி செய்ய வேண்டும்" என்றார்.

பல வருஷங்களுக்கப்பால் காட்டில் இருந்து கொண்டு துர்யோதனாதிகளுக்கு தூது விடுக்கு முன்பு, அர்ஜுனன் ஸ்ரீ கிருஷ்ணனை அழைத்து "கிருஷ்ணா, சண்டை நல்லதா, ஸமாதானம் நல்லதா?" என்று கேட்டான்.

அதற்குக் கிருஷ்ணன்:—"இப்போதைக்கு ஸமாதானம் நல்லது. அதனலே தான் ஸமாதானம் வேண்டி ஹஸ்தினபுரத்திற்குப் புறப்படப் போகிறேன்" என்றாராம்.

---

## தேவ விகடம்.

நாரதர் கைலாஸத்துக்கு வந்தார். நந்திகேசுரர் அவரை நோக்கி, "நாரதரே, இப்போது ஸ்வாமி தரிசனத்துக்கு ஸமயமில்லை. அந்தப்புரத்தில் ஸ்வாமியும் தேவியும் ஏதோ பேசிக்கொண்டிருக்கிறார்கள். இன்னும் ஒரு ஜாமம் சென்ற பிறகுதான் பார்க்க முடியும். அதுவரை இங்கு உட்கார்ந்திரும், ஏதேனும் வார்த்தை சொல்லிக்கொண்டிருக்கலாம்" என்றார். அப்படியே நாரதர் வலப்பக்கம் உட்கார்ந்தார். அங்கே பிள்ளையாரும் வந்து சேர்ந்தார். பக்கத்தில் நின்ற பூதமொன்றை நோக்கி நந்திகேசுரர் "முப்பது வண்டி கொழுக்கட்டையும், முந்நூறு குடத்தில் பாயஸமும் ஒரு வண்டி நிறைய வெற்றிலை பாக்கும் கொண்டு வா" என்று கட்டளையிட்டார்.

இமைத்த கண் மூடு முன்பாக மேற்படி பூதம் பக்ஷணதிகளைக் கொண்டு வைத்தது. பிள்ளையார் கொஞ்சம் சிரமபரிஹாரம் பண்ணிக்கொண்டார். நாரதரோ ஒரு கொழுக்கட்டை யெடுத்துத் தின்று அரைக் கிண்ணம் ஜலத்தைக் குடித்தார். நந்திகேசுரர் பக்கத்தில் வைத்துக்கொண்டிருந்த இரண்டு மூட்டை பருத்திக் கொட்டையையும், இரண்டு கொள்ளு மூட்

டைகளையும், அப்படியே இரண்டு மூட்டை உளுந்தை யும், இரண்டு மூன்று கட்டுப் புல்லையும் ஒரு கிரணம் போலே விழுங்கிவிட்டுக் கொஞ்சம் தீர்த்தம் சாப்பிட்டார்.

பிறகு வார்த்தை சொல்லத் தொடங்கினார்கள்.

பிள்ளையார் கேட்டார்—நாரதரே, ஸமீபத்தில் ஏதேனும் கோள் இழுத்துவிட்டீரா? எங்கேனும் கலகம் விளைவித்தீரா?

நாரதர் சொல்லுகிறார்:—கிடையாது ஸ்வாமி. நான் அந்தத் தொழிலையே விட்டுவிடப் போகிறேன். இப்போதெல்லாம் தேவாசுரர்களுக்குள்ளே சண்டை மூட்டும் தொழிலை ஏறக்குறைய நிறுத்தியாய்விட்டது. மனுஷ்யர்களுக்குள்ளே தான் நடத்தி வருகிறேன்.

பிள்ளையார்:—சமீபத்தில் நடந்ததைச் சொல்லும்.

நாரதர் சொல்லுகிறார்:—விழுப்புரத்திலே ஒரு செட்டியார், அவன் பெரிய லோபி; தஞ்சாவூரிலே ஒரு சாஸ்திரி, அவன் பெரிய கர்வி. செட்டிக்குச் செலவு மிகுதிப்பட்டுப் பார்ப்பானுக்கு கர்வம் குறையும்படி செய்ய வேண்டுமென்று எனக்குத் தோன்றிற்று. ஆறு மாதத்துக்கு முன்பு இந்த யோசனை யெடுத்தேன். நேற்றுதான் முடிவு பெற்றது. முதலாவது, பார்ப்பான் விழுப்புரத்துக்கு வரும்படி செய்தேன்.

பிள்ளையார்:—எப்படி?

நாரதர்:—செட்டியின் ஸ்வப்பனத்திலே போய்த் தஞ்சாவூரில் இன்ன தெருவில் இன்ன பெயருள்ள

சாஸ்திரி யிருக்கிறார். அவரைக் கூப்பிட்டால், உனக்குப் பலவிதமான தோஷ சாந்திகள் செய்வித்து ஆண் பிள்ளை பிறக்கும்படி செய்வார் என்று சொன்னேன். அப்படியே செட்டியினிடம் போனால் உனக்குப் பணமும் கீர்த்தியும் மிகுதிப்பட வழியுண்டென்று பார்ப்பானுடைய கனவிலே போய்ச் சொன்னேன். செட்டி காயிதம் போடு முன்பாகவே பார்ப்பான் விழுப்புரத்தில் செட்டி வீட்டுக்கு வந்து சேர்ந்தான். செட்டி குழந்தை பிறக்கும்படி ஹோமம் பண்ணத் தொடங்கினான். பார்ப்பான் காசை அதிகமாகக் கேட்டான். பாதியிலே செட்டி ஹோமத்தை நிறுத்தி விட்டுப் பார்ப்பானை வீட்டுக்குப் போகும்படி சொல்லி விட்டான். பிறகு பக்கத்துத் தெருவில் ஒரு வீட்டில் ஒரு வருஷகாலமிருந்து பகவத்கீதை பிரசங்கம் செய்யும்படி சாஸ்திரியை அந்த வீட்டுப் பிரபு வேண்டிக் கொண்டான். மேற்படி பிரபுவுக்கும் அந்தச் செட்டிக்கும் ஏற்கெனவே மனஸ்தாபம். செட்டி தனக்கு முப்பதினாயிரம் பொன் கொடுக்க வேண்டுமென்று அந்தப் பிரபு நியாயஸ்தலத்தில் வழக்குப் போட்டிருந்தான். செட்டி அந்தப் பணத்தைத் தான் கொடுத்து விட்டதாகவும், நம்பிக்கையினால் கையெழுத்து வாங்கத் தவறினதாகவும், வேறு ஒன்றும் செல்ல வேண்டியதில்லை என்றும், சொன்னான். நியாயஸ்தலத்தில் செட்டி வாதிற்குத் தக்க ஆதாரமில்லை என்றும், பிரபுவுக்குப் பணம் சிலவுட்பட கொடுக்க வேண்டும் என்றும் தீர்ப்பாயிற்று.

செட்டியினிடமிருந்த (கழனித் தொழில்) அடிமை யொருவன் கள்ளுக்குக் காசு வாங்குவதற்காக இவனிடம் வந்து, செட்டியாருக்கு யாரோ ஒரு அய்யர் சூனியம் வைக்கிறுரென்று மாரியம்மன் ஆவேசம் வந்தபோது தன்னுடைய பெண்டாட்டி சொன்னதாகச் சொல்லிவிட்டான். செட்டி தன்னுடைய எதிரி வீட்டிலே போய் இருந்த தஞ்சாவூர்ப் பார்ப்பானே சூனியம் வைக்கிறுனென்றும், அதனுலேதான் எதிரிக்கு வழக்கு ஜயமாகித் தனக்குத் தோற்றுப்போய் விட்டதென்றும், உறுதியாக நினைத்துக்கொண்டான். ஒரு மனுஷ்யனை அனுப்பித் தன் எதிரியின் வீட்டிலே எதிரியும் சாஸ்திரியும் என்ன பேசிக்கொள்ளுகிறுர்களென்பதைத் தெரிந்து கொண்டு வரும்படி ஏற்பாடு செய்தான். அந்த ஆளுக்கு மூன்று பொன் கொடுத்தான். இந்த வேஷக்காரன் போய்க் கேட்கையிலே அந்த சாஸ்திரியும் வீட்டுக்காரப் பிரபுவும் வேதாந்தம் பேசிக்கொண்டிருந்தார்கள்.

"பிரமந் தான் ஸத்தியம்,
மற்றதெல்லாம் சூன்யம்"

என்று சாஸ்திரி சொன்னுன். இதைக் கேட்டு வேவுகாரன் செட்டியினிடம் வந்து எதிரி பக்கத்துக்குச் சூனியம் வைக்க வேண்டுமென்று பேசிக்கொள்ளுகிறுர்கள் என்று கதை சொன்னுன். செட்டி "பிரமாணம் பண்ணுவாயா?" என்று கேட்டான். "நிச்சயமாகப் பிரமாணம் பண்ணுவேன், சாஸ்திரி வாயினுல் சூனியம் என்று சொன்னதை என்னுடைய

காதினால் கேட்டேன். நான் சொல்வது பொய்யானால் என் பெண்டாட்டி வாங்கியிருக்கும் கடன்களை யெல்லாம் மோட்டுத் தெருப் பிள்ளையார் கொடுக்கக் கடவது" என்று வேவுகாரன் சொன்னான்; இப்படி நாரதர் சொல்லி வருகையிலே, பிள்ளையார் புன்சிரிப்புடன் "அடா! துஷ்டப் பயலே! அவன் பெண்டாட்டியினுடைய கடன்களை யெல்லாம் நானா தீர்க்கவேண்டும்! இருக்கட்டும். அவனுக்கு வேண்டிய ஏற்பாடு செய்கிறேன்" என்றார்.

அப்பால் நாரதர் சொல்லுகிறார்:—

"ஷை வேவுகாரன் வார்த்தையைக் கொண்டு செட்டி தன் எதிரியையும் எதிரிக்குத் துணையான தஞ்சாவூர் சாஸ்திரியையும் பெரிய நஷ்டத்துக்கும் அவமானத்துக்கும் இடமாக்கி விடவேண்டு மென்று துணிவு செய்து கொண்டான். ஒரு கள்ளனைக் கூப்பிட்டுத் தன் எதிரி வீட்டில் போய்க் கொள்ளை யிடும்படிக்கும், சாஸ்திரியின் குடுமியை நறுக்கிக்கொண்டு வரும்படிக்கும் சொல்லிக் கைக்கூலியாக நூறு பொன் கொடுத்தான். இது வரை செட்டியின் அழுக்குத் துணியையும், முகவளைவையும் கண்டு செட்டி ஏழையென்று நினைத்திருந்த கள்ளன் செட்டி நூறு பொன்னைக் கொடுத்ததிலிருந்து இவனிடத்திலே பொற்குவையிருக்கிறதென்று தெரிந்து கொண்டான். மறு நாள் இரவிலே நான்கு திருடரை அனுப்பிச் செட்டி வீட்டிலிருந்த பொன்னை யெல்லாம் கொள்ளை கொண்டு போய்விட்டான்.

செட்டியினிடம் கொண்ட பொருளுக்குக் கைம்மாறாக அவனிடம் ஏதேனும் கொடுக்க வேண்டுமென்று நினைத்துச் செட்டியின் கட்டளைப்படியே சாஸ்திரியின் குடுமியை நறுக்கிச் செட்டியிடம் கொண்டு கொடுத்தான். பொன் களவு போன பெட்டியிலே இந்தக் குடுமியை வாங்கிச் செட்டி பூட்டி வைத்துக் கொண்டான். பார்ப்பான் கர்வமடங்கித் தஞ்சாவூருக்குப் போய்ச் சேர்ந்தான். நேற்று மாலையிலேதான் தஞ்சாவூரில் தன் வீட்டிலே போய் உட்கார்ந்து, "தெய்வமே, நான் யாருக்கும் ஒரு தீங்கு நினைத்ததில்லையே! அப்படி யிருந்தும் எனக்கு இந்த அவமானம் வரலாமா?" என்று நினைத்து அழுது கொண்டிருந்தான். அப்போது நான் ஒரு பிச்சைக்காரன் வேஷத்துடன் வீதியிலே பின்வரும் பாட்டைப் பாடிக்கொண்டு போனேன் :—

"கடலைப் போலே கற்றோ மென்றே
கருவங் கொண்டாயே
கல்லா ரென்றே நல்லார் தம்மைக்
கடுமை செய்தாயே"

இவ்வாறு நாரதர் சொல்லிய போது நந்திகேசுரர் "இந்தக் கதை நடந்ததா? கற்பனையா?" என்று கேட்டார். நாரதர் "கற்பனைதான்; ஸந்தேகமென்ன?" என்றார். பிள்ளையார் கோபத்துடன் "ஏன் காணும்! நிஜம் போல் சொல்லிக் கொண்டிருந்தீரே! உண்மை யென்றல்லவோ நான் இதுவரை செவி கொடுத்துக் கேட்டேன். இதெல்லாம் என்ன, குறும்பா உமக்கு?" என்றார்.

"குறும்பில்லை. வேண்டு மென்று தான் பொய்க் கதை சொன்னேன்" என்று நாரதர் சொன்னார்.

"ஏன்?" என்றார் பிள்ளையார்.

அதற்கு நாரதர் :—நந்திகேசுரருக்குப் பொழுது போக்கும் பொருட்டாகக் கதை சொல்லச் சொன்னார்; சொன்னேன். தாங்கள் கேட்டதையும் அதோடு சேர்த்துக் கொண்டேன்" என்றார்.

"'நான் கேட்டதை விளையாட்டாக்கி' நீர் நந்திக்குத் திருப்தி பண்ணினீரா? என்ன நந்தி இது? எஜமான் பிள்ளை நானா, நீயா?" என்று பிள்ளையார் கோபித்தார்.

அப்போது நந்திகேசுரர் முகத்தைச் சுளித்துக் கொண்டு:—"பிள்ளையாரே, உனக்கு எவ்வளவு கொழுக் கட்டை கொடுத்தாலும் ஞாபக மிருப்பதில்லை. வாயில் காக்கும் வேலை எனக்கு; உனக்குப் போது போகாது போனால் வேலை செய்பவரை வந்து தொல்லைப் படுத்து கிறாயா? முருகக் கடவுள் இப்படி யெல்லாம் செய்வது கிடையாது. அவர் மேலே தான் அம்மைக்குப் பக்ஷம். நீர் இங்கிருந்து போம். இல்லாவிட்டால் அம்மை யிடம் போய்ச் சொல்லுவேன்" என்றார்.

அப்போது நாரதர் சிரித்து :—"தேவர்களுக் குள்ளே கலக முண்டாக்கும் தொழிலை நான் முழுதும் நிறுத்திவிடவில்லை" என்றார்.

பிள்ளையாரும், நந்திகேசுரரும் வெட்கமடைந்து நாரதருடைய தலையில் இலேசான வேடிக்கைக் குட்டு இரண்டு குட்டினார்கள்.

அப்போது நாரதர் சிரித்துக்கொண்டு சொல்லு கிறார் :—நேற்றுக் காலையிலே பிருஹஸ்பதியிடம் பேசிக்கொண்டிருக்கும்போது அவர் இன்று என்னு டைய ஜன்ம நக்ஷத்திரத்திற்குள்ளே அவருடைய கிர கம் நுழையப் போகிறதென்றும், அதனால் இன்று என்னுடைய தலையில் நந்திகேசுரரும் பிள்ளையாரும் குட்டுவார்களென்றும் சோதிடத்திலே பார்த்துச் சொன்னார். உம்முடைய கிரகசாரங்களெல்லாம் நம் மிடத்திலே நடக்காதென்று சொன்னேன். பந்தயம் போட்டோம். நீங்கள் இருவரும் என்னைக் குட்டினால் நான் அவரிடத்தில் பதினாயிரம் பஞ்சாங்கம் விலைக்கு வாங்குவதாக ஒப்புக்கொண்டேன். நீங்கள் குட்டா விட்டால் நமக்கு தேவலோகத்தில் ஆறு ஸங்கீதக் கச்சேரி இந்த மாதத்தில் ஏற்படுத்திக் கொடுப்பதாக வாக்குக் கொடுத்தார். அவர் கக்ஷி வென்றது. பதி னாயிரம் பஞ்சாங்கம் விலைக்கு வாங்க வேண்டும்.

அப்போது பிள்ளையார் இரக்கத்துடன் "பதினா யிரம் பஞ்சாங்கத்துக்கு விலை யென்ன?"—என்று கேட்டார்.

நாரதர், "இருபதினாயிரம் பொன்னாகும்" என் றார். பிள்ளையார் உடனே ஒரு பூதத்தைக் கொண்டு நாரதரிடம் இருபதினாயிரம் பொன் கொடுத்துவிடச் சொன்னார். பூதம் அப்படியே அரண்மனைப் பணப் பெட்டியிலிருந்து இருபதினாயிரம் பொன் நாரதரிடம் கொடுத்துப் பிள்ளையார் தர்மச் செலவு என்று கணக் கெழுதி விட்டது. பிறகு பிள்ளையார் நாரதரை

நோக்கி "இந்தப் பந்தயக் கதை மெய்யா? அல்லது, இதுவும் பொய்தானா?" என்று கேட்டார்.

"பொய்தான்; சந்தேக மென்ன?" என்று சொல்லிப் பணத்தைக் கீழே போட்டுவிட்டு நாரதர் ஓடியே போய் விட்டார்.

---

## அபயம்.

காட்டில் ஒரு ரிஷி பதினாறு வருஷம் கந்தமூலங் களை உண்டு தவம் செய்துகொண்டிருந்தார். அவர் பெயர் வாமதேவர். ஒரு நாள் அவருக்குப் பார்வதி பரமேசுரர் பிரத்யக்ஷமாகி "உமக்கு என்ன வரம் வேண்டும்?" என்று கேட்டார்கள். "நான் எக்கா லத்திலும் சாகாமல் இருக்க வேண்டும்" என்று வாம தேவ ரிஷி சொன்னார். அந்தப்படியே வரம் கொடுத்து விட்டுப் பார்வதி பரமேசுரர் அந்தர்த்தானமாய் விட்டனர்.

அந்த வரத்தை வாங்கிக்கொண்டு வாமதேவ ரிஷி காசி நகரத்தில் கங்காநதி தீரத்தில் ஒரு குடிசை கட் டிக்கொண்டு அங்கே குடி யிருந்தார். அவரிடத்தில் காசி ராஜன் வந்து தனக்கு ஆத்ம ஞானத்தை உப தேசிக்க வேண்டும் என்று கேட்டான்.

அப்போது வாமதேவர் சொல்லுகிறார்:—"ராஜனே, எப்போதும் பயப்படாமல் இரு, பயமில் லாத நிலைமையே தெய்வம். பயத்தை விட்டவன் தெய்வத்தைக் காண்பான்" என்றார்.

இது கேட்டுக் காசிராஜன் சொல்லுகிறான்:—
"முனிவரே, நான் ஏற்கெனவே பூமண்டலாதிபதியாக வாழ்கிறேன். எனக்கு எதிலும் பயமில்லை" என்றான்.

வாமதேவர்:—"நீ பூமி முழுவதையும் ஆளவில்லை. உன்னைவிடப் பெரிய மன்னர் பூமியில் ஆயிரம் பேர் இருக்கிறார்கள். அவர்களில் எவனாவது உன் மீது படையெடுத்து வந்தால் நீ நடுங்கிப் போவாய். மேலும் இந்த நிலையில் நீ உனது பத்தினிக்குப் பயப்படுகிறாய். மந்திரிகளுக்குப் பயப்படுகிறாய். வேலைக்காரருக்குப் பயப்படுகிறாய். குடிகளுக்கெல்லாம் பயப்படுகிறாய். விஷ ஜந்துகளுக்குப் பயப்படுகிறாய். மரணத்துக்குப் பயப்படுகிறாய். நீ பயமில்லை என்று சொல்வது எனக்கு நகைப்பை உண்டாக்குகிறது" என்றார்.

இதைக் கேட்டு காசிராஜன்:—"இவ்விதமான பயங்கள் தீர்வதற்கு வழி யுண்டோ?" என்று வினவினான்.

அதற்கு வாமதேவர் சொல்லுகிறார்:—"அடே ராஜா, நீ மூடன்" என்றார்.

காசிராஜா அவரைக் கையினாலே ஒரு அடி அடித்தான்.

அப்போது வாமதேவர்:—"அடே ராஜா, நீ எத்தனை அடி அடித்தபோதிலும் மூடன்தான்" என்று சொன்னார். காசிராஜா தன் தலை தெரியாமல் கோபப்பட்டு வாமதேவர் கையிலிருந்த வேத புஸ்தகத்தை வாங்கிக் கிழித்துப் போட்டான்.

அப்போது வாமதேவர்:—"அடே ராஜா, வேதத்தைக் கிழித்தாய். இதற்குத் தெய்வத்தின் தண்டனை உண்டாகலாம்" என்று சொன்னர்.

அதற்குக் காசிராஜா :—"ஏ வேதரிஷீ, தெய்வத்துக்குக் கண் உண்டு. அறியாமல் செய்த குற்றத்துக்கு தண்டனை இல்லை. நான் வேதநூல் என்பதைப் பார்க்கவில்லை. அடித்தும் பயன்படாத உன்னை என்ன செய்வதென்று தெரியாமல் கோபாக்ராந்தனய் அஞ்ஞானத்தினலே செய்தேன். என்னை தெய்வம் க்ஷமிக்கும். உனக்கும் க்ஷமை யுண்டாகுக" என்ருன்.

அப்போது வாமதேவர்—"அடே ராஜா, நீ நம்முடைய சிஷ்யனகத் தகும். கோபம் வருவது க்ஷத்ரிய குணம்; அதே க்ஷத்ரிய தர்மம்; அதைக் கைவிடாதே. இதற்கு மேல் மற்றொரு விஷயம் சொல்லுகிறேன் கேள். நமக்கு இந்த உலகம் கடுகு மாத்திரம். உலகம் சின்னக் கடுகு. அதற்கு வெளிப்புறத்திலே நாம் நின்று அதனை நாம் பார்வையிடுகிறேம். நாம் நிற்பது பிரம்ம ஸாயுஜ்ய பதவியிலே. பிரம்ம ஸாயுஜ்ய பதவியிலே இருப்பவன் ப்ராம்மணன். இந்தக் கொள்கையை நீயும் கூடியவரை அனுஸரித்தால் உனக்கும் நன்மையுண்டாகும். இந்த ஸமயம் உனக்கு நாம் அபயம் கொடுத்தோம். நமக்குப் பார்வதி பரமேஸ்வரர் சாகாத வரம் கொடுத்திருக்கிருர்கள். அதிலே உனக்கும் பாகம் கொடுத்தோம். ஏனென்ருல் அது வற்ருத அமிர்தம். இனிமேல் ப்ராம்மணர்களை அவஸரப்பட்டு அடிக்காதே. ஸெளக்

கியமாக அமிர்த முண்டிரு" என்று சொல்லிவிட்டுப் போனதாக ஒரு பெரியவர் என்னிடம் ஒரு கதை சொன்னார்.

---

## மழை.

ஓம், ஓம், ஓம் என்று கடல் ஒலிக்குது. காற்று சுழித்துச் சுழித்து வீசுது. மணல் பறக்குது, வான் இருளுது. மேகம் சூழுது. கடற்கரையில் காற்று வாங்க வந்த ஜனங்கள் கலைந்து வீட்டுக்குத் திரும்புகிறார்கள்.

நானும், ராமராயரும் வேணுமுதலியும் வாத்தியார் பிரமராய அய்யரும் இன்னும் சிலருமாகக் கடற்கரை மணல் மேலே உட்கார்ந்து வார்த்தை சொல்லிக்கொண்டிருந்தோம். மின்னல் வெட்டு அதிகப்படுகிறது. ராத்திரி ஏழு அல்லது ஏழரை மணி இருக்கலாம்.

"நாமும் எழுந்து வீட்டுக்குப் போக வேண்டியது தான்" என்று பிரமராய அய்யர் சொன்னார்.

வேணு முதலி பாடுகிறான் :—

"காற்றடிக்குது கடல் குமுறுது
கண்ணை விழிப்பாய் நாயகனே
தூற்றல் கதவு, சாளர மெல்லாம்
தொளைத் தடிக்குது கூடத்திலே—மழை
தொளைத் தடிக்குது கூடத்திலே."

"பாட்டெல்லாம் சரிதான்; ஆனால் மழை பெய்யாது" என்று ராமராயர் மற்றொரு முறை வற்புறுத்திச் சொன்னார்.

"பந்தயம் என்ன போடுகிறீர்?" என்று பிரமராய அய்யர் கேட்டார்.

"மழை பெய்தால் நான் உமக்குப் பத்து ரூபாய் கொடுக்கிறேன்; அதாவது, இன்னும் இரண்டு மணி நேரத்துக்குள் மழை பெய்யாது என்று நான் சொல்லுகிறேன்; பெய்தால் நான் உமக்குப் பத்து ரூபாய் கொடுப்பேன். பெய்யாவிட்டால் நீர் நமக்குப் பத்து ரூபாய் கொடுப்பீரா?" என்று ராமராயர் சொன்னார்.

பிரமய்யர் "சரி" யென்றார். அப்போது என் தோள் மேலே ஒரு தூற்றல் சொட்டென்று விழுந்தது. நான் "தூற்றல் போடுகிறது" என்று சொன்னேன். "இல்லை" யென்று ராமராயர் சொன்னார். "என்மேல் ஒரு தூற்றல் விழுந்தது" என்று சொன்னேன். அதற்கு ராமராயர் "அலையிலிருந்து ஒரு திவலை காற்றிலே வந்து பட்டிருக்கும். அது மழைத் தூற்றலன்று" என்றார். "சரி" என்று சும்மா இருந்து விட்டேன்.

"என் மேலே ஒரு தூற்றல் விழுந்தது" என்று பிரமராய அய்யர் கூவினார்.

"இதுவும் அலையிலிருந்து தான் வந்திருக்கும்" என்று ராமராயர் சொன்னார்.

"அதெப்படித் தெரியும்" என்று பிரமராய அய்யர் சொல்வதற்குள்ளாகவே தூற்றல் பத்துப் பன்னிரண்டு எல்லார் தலையிலும் விழுந்தது.

"ராமராயருக்குப் பந்தயம் தோற்றுப் போய் விட்டது" என்று நான் சொன்னேன்.

"இல்லை. இது தூற்றல். நான் சிறு தூற்றல் கூடப் போடாதென்று சொல்லவில்லை. மழை பெய்யா தென்று சொன்னேன். சிறு தூற்றல் மழையாகமாட் டாது. இன்னும் இரண்டு மணி நேரம் இங்கே இருக் கலாம். அது வரை மழை பெய்யாது என்று நிச்சய மாக இப்போதும் சொல்லுகிறேன்" என்று ராம ராயர் சித்தாந்தம் செய்தார். வானம் அதிகமாகக் கறுத்து விட்டது. இருள் கக்கிக்கொண்டு மேகத் திரள் யானைத்திரள் போலே தலை மீது போகலாயிற்று. தூற்றல் போடவில்லை. நின்று போய்விட்டது. ஆனால் இருள் மேன்மேலும் அதிகப்படுகிறது.

அப்போது நான் சொன்னேன்:—"மழை பெய் தாலும் சரி; பெய்யாவிட்டாலும் சரி. நாம் இங்கி ருந்து புறப்படவேண்டும்" என்று சொல்லி எழுந் தேன்.

"தாங்கள் முதலாவது போங்கள். நானும் பிரம ராய அய்யரும் இங்கே கொஞ்ச நேரம் இருந்துவிட்டு வருகிறோம்" என்று ராமராயர் சொன்னார்.

சரியென்று சொல்லி நானும் வேணு முதலியும் புறப்பட்டோம். மற்றவர்கள் அத்தனை பேரும் பந்தய

விஷயத்திலேயே கவனமாக அங்கே உட்கார்ந்திருந்தார்கள். நாங்கள் புறப்பட்டு நூறடி தூரம் வருமுன்னாகவே மழைத் தூற்றல் வலுக்கத் தொடங்கிற்று. கொஞ்சம் ஓடிக் கடற் பாலத்தருகே சுங்கச் சாவடியில் போய் ஒதுங்கினோம். மழை வர்ஷமாகச் சொரிந்தது. ராமராயரும், பிரமராய அய்யரும் மற்றோரும் குடல் தெரிக்க ஓடிவந்து சேர்ந்தார்கள். நானும் வேணு முதலியும் கொஞ்சம் நனைந்து போயிருந்தோம். மற்றவர்கள் ஊறுகாய் ஸ்திதியில் இருந்தார்கள்.

மழை முழங்குகிறது. மின்னல் சூறை யடிக்கிறது. சுருள் மின்னல், வெட்டு மின்னல், வட்ட மின்னல், ஆற்று மின்னல்.—

மின்னல் வீச்சிலே கண் கொள்ளை போகிறது. இடி என்றால் இடியா? நம்முடைய ஸ்நேஹிதர் பிரமராய அய்யருக்குத் தொண்டை இடிபோலே கர்ஜனை செய்வதை யொட்டி, அவர் மாலைதோறும் பேசுகிற திண்ணைக்கு இடிப்பள்ளிக்கூடம் என்று பெயர் சொல்வார்கள் என்கிற விஷயம் முந்தி ஒரு தரம் சொல்லியிருக்கிறேன். அவரெல்லாம் இந்த நிஜ இடியைக் கண்டு கலங்கிப் போய்விட்டார். ராமராயருக்கு மனத்துக்குள்ளே பயம்; வெளிக்குப் பயத்தைக் காட்டினால் அவமானம் என்பது ராமராயருடைய கொள்கை. ஆதலால் அவர் வேஷ்டியைப் பிழிந்து தாடியைத் துவட்டிக்கொண்டு "ஓம் சக்தி" "ஓம் சக்தி" என்று சொல்லத் தலைப்பட்டார்.

வேணு முதலி பாடத் தொடங்கினான் :—

திக்குக்கள் எட்டும் சிதற—தக
தீம் தரிகிட தீம் தரிகிட தீம் தரிகிட தீம்
பக்க மலைகள் உடைந்து—வெள்ளம்
பாயுது, பாயுது, பாயுது, தாம் தரிகிட
தக்கத் ததிங்கிட தித்தோம்—அண்டம்
சாயுது, சாயுது, சாயுது, பேய் கொண்டு
தக்கை யடிக்குது காற்று—தக்கத்
தாம் தரிகிட, தாம் தரிகிட, தாம் தரிகிட, தாம்
வெட்டி யடிக்குது மின்னல்—கடல் [தரிகிட
வீரத் திரை கொண்டு விண்ணை யடிக்குது
கொட்டி யிடிக்குது மேகம்—கூ
கூ வென்று விண்ணைக் குடையுது காற்று,
சட்டச் சட, சட்டச் சட, டட்டா—என்று
தாளங்கள் கொட்டிக் கனைக்குது வானம்
எட்டுத் திசையும் இடிய—மழை
எங்ஙனம் வந்ததடா தம்பி வீரா!—
தக்கத் தக, தக்கத் தக, தித்தோம்!

இவ்வாறு பாடிக்கொண்டு வேணு முதலி குதிக்கத் தொடங்கினான். காற்று ஹூ ஹூ ஹூ என்று கத்துகிறது. வேணு முதலியும் கூடவே கத்துகிறான். இடி நகைக்கிறது. வேணு முதலி அதனுடன் கூட நகைக்கிறான்.

இவன் குதிக்கிற மாதிரியைக் கண்டு பக்கத்தில் இருந்தவர்களுக்குக் கொஞ்சம் கொஞ்சமாக பயம் தெளிந்தது.

ராமராயர் "ஓம் சக்தி" மந்த்ரத்தாலே பயத்தை நிவிர்த்தி செய்துகொண்டு "மஹா ப்ரக்ருதி வீரரஸம் காட்டுகிறாள்" என்று சொன்னார். "ரௌத்ர ரஸம்" என்று பிரமராய அய்யர் திருத்திக் கொடுத்தார். "இரண்டும் ஒன்றுதான்" என்று ராமராயர் மன தறிந்து பொய் சொன்னார். எதிரியை வார்த்தை சொல்ல விடக்கூடா தென்பது ராமராயருடைய கொள்கை. இப்படி யிருக்கையிலே மழை கொஞ்சம் கொஞ்சம் குறையலாயிற்று. நெடுநேரம் அங்கே நின் றோம். ராமராயருக்கு ஸாயங்காலமே கொஞ்சம் ஜலதோஷம்; மழையில் உடம்பு விறைக்கத் தொடங் கிற்று. இதை வேணு முதலி கண்டு அவரை இரண்டு கையாலும் மூட்டை போலே தூக்கி நிமிர்ந்து நின்று தலைக்கு மேலே கை யெட்டும் வரை கொண்டு போய்த் தொப்பென்று தரையின் மேலே போட்டான். "அட மூடா!" என்று சொல்லி ராமராயர் எழுந்து நின்று கொண்டு, "உடம்பெல்லாம் சுடக்கெடுத்தது போல் நேராய்விட்டது. உடம்பில் உஷ்ணம் ஏறிவிட்டது. இப்போது குளிர் தெரியவில்லை." என்று சொன்னார்.

சிறிது நேரத்துக்குப் பின் மழை நின்றது. நாங் கள் வீட்டுக்குத் திரும்பினோம். வரும் வழியே வேணு முதலி பாடுகிறான் :—

"அண்டங் குலுங்குது தம்பி—தலை
ஆயிரந் தூக்கியச் சேடனும் பேய்போல்
மிண்டிக் குதித் திடுகின்றான்—திசை
வெற்புக் குதிக்குது வானத்துத் தேவர்

சென்று புடைத்திடு கின்றார்—என்ன
தெய்விகக் காட்சியைக் கண் முன்பு கண்
[டோம்
கண்டோம், கண்டோம், கண்டோம்—இந்தக்
காலத்தின் கூத்தினைக் கண்முன்பு கண்
[டோம்!

தக்கத்தகத் தக்கத்தக திக்தோம்.

மறுநாள் காலையில் ராமராயர் பிரமராய அய்ய ருக்குப் பந்தய ரூபாய் பத்தும் செலுத்திவிட்டார்.

---

## பிங்கள வருஷம்.

வேதபுரத்துக்கு வடக்கே இரண்டு கல் தூரத் தில், சித்தாந்தசாமி கோவில் என்றொரு கோயில் இருக்கிறது. அதற்கருகே ஒரு மடம். அந்த மடத் தில் பல வருஷங்களுக்கு முன்பு சித்தாந்தசாமி என்ற பரதேசி ஒருவர் இருந்தார். அவருடைய ஸமாதியிலே தான் அந்தக் கோயில் கட்டியிருக்கிறது. கோயில் மூலஸ்தானத்துக்கெதிரேயுள்ள மண்டபத்தில், நாளது சித்திரை மாதம் பதினோராந்தேதி திங்கட்கிழமை காலை ஒன்பது மணி நேரத்துக்கு முன்னாகவே நானும் என்னுடன் நாராயணஸாமி என்றொரு பிராமணப் பிள்ளையும் வந்து உட்கார்ந்தோம். பகல் முழுதும் ஊருக்கு வெளியே தனியிடத்தில் போயிருந்து உல் லாசமாகப் பொழுது கழிக்க வேண்டுமென்ற நோக் கத்துடன் வந்தோம். எப்போதும் வழக்கம் எப்படி யென்றால், மடுவில் ஸ்நாநம் செய்துவிட்டு மாந்தோப்

புக்களில் பொழுது போக்குவோம். புயற்காற்றடித்த பிறகு மாந்தோப்புகளில் உட்கார நிழல் கிடையாது. ஆதலால் மேற்படி கோயில் மண்டபத்துக்கு வந்து சேர்ந்தோம். கோயிலைச் சூழ நான்கு புறத்திலும் கண்ணுக் கெட்டினவரை தென்னை மரங்கள் விழுந்து கிடந்தன. பல வளைந்து நின்றன. சில மரங்கள் தலை தூக்கி நேரே நின்றன. புயற் காற்று சென்ற வருஷம் கார்த்திகை மாதத்தில் அடித்தது. ஐந்தாறு மாதங்களாயும், இன்னும் ஒடிந்து கிடக்கும் மரங்களை யெடுத்து யாதேனும் பயன்படுத்த வழி தெரியாமல் ஜனங்கள் அவற்றை அப்படியே போட்டு வைத்திருக்கிறார்கள். இதைப் பார்த்துவிட்டு என்னுடனிருந்த நாராயணஸாமி சொல்லுகிறான் :—

"கேட்டீரா, காளிதாஸரே, இந்த ஹிந்து ஜனங்களைப் போல சோம்பேறிகள் மூன்று லோகத்திலுமில்லை. இந்த மரங்களை வெட்டி யெடுத்துக்கொண்டு போய் எப்படியேனும் உபயோகப்படுத்தக் கூடாதா? விழுந்தால் விழுந்தது; கிடந்தால் கிடந்தது; ஏனென்று கேட்பவர் இந்தியாவில் இல்லை. பாமர தேச மையா! பாமர தேசம்!" என்றான். நான் அங்கே தனிமையையும் மவுனத்தையும் வேண்டி வந்தவன் ஆனபடியினால் அவனை நோக்கி :—"நாராயணா; ஹிந்துக்கள் எப்படியேனும் போகட்டும். தனி யிடம்; இங்கு மனுஷ்ய வாசனை கிடையாது; எவ்விதமான தொந்தரவும் இல்லை. மடத்துப் பரதேசிகள்கூடப் பிச்சைக்குக் கிளம்பி யிருக்கிறார்கள். பகல் பன்னிரண்டு மணிக்குத்

தான் திரும்பி வருவார்கள். சிவசிவா என்று படுத்துத் தூங்கு" என்றேன். அவனும் அப்படியே சரியென்று சொல்லி மேல் உத்ரீயத்தை விரித்துப் படுத்தான். உடனே தூங்கிப் போய்விட்டான். என் கையில் "குருபரம்பரா ப்ரபாவம்" என்ற வைஷ்ணவ நூலொன்று கொண்டு வந்திருந்தேன். சட்டைத் துணிகளையெல்லாம் கழற்றித் தலைக்குயரமாக வைத்துக்கொண்டு நானும் படுக்கை போட்டேன். அந்தப் புஸ்தகத்தில் "ப்ரவேசம்" என்ற முகவுரையில் பாதி வாசிக்கும்போதே எனக்கும் நல்ல தூக்கம் வந்தது. ஜில்ஜில்லென்று காற்று சுற்றிச் சுற்றி யடித்தது. கண் சொக்கிச் சொக்கித் தூங்கிற்று, விழித்து விழித்துத் தூங்கி பின்பு கடைசியாக எழுந்தபோது பகல் பதினொரு மணியாய்விட்டது. எழுந்தவுடனே கோயிற் கிணற்றில் ஜல மிறைத்து ஸ்நாநம் பண்ணினோம். அந்தக் கிணற்று ஜலம் மிகவும் ருசியுள்ளது. நன்றாகத் தெளிந்தது. ஸ்நாநத்தினுடைய இன்பம் வர்ணிக்க முடியாது. பிறகு வேதபுரத்திலிருந்து ஒருவன் ஆஹாரம் கொண்டு வந்தான். சாப்பிட்டுத் தாம்பூலம் போட்டுக்கொண்டிருந்தோம். அப்போது கோயிலுக் கெதிரேயுள்ள அல்லிக்குளத்தில் நாலைந்துபேர் வந்து குளித்துக் கொண்டிருந்தார்கள். "நேர்த்தியான கிணற்று ஜல மிருக்கும்போது, அதை இறைத்துக் குளிக்காமல், அழுக்குக் குளத்திலே குளிக்கிற மூடர்களைப் பார்த்தீரா?" என்று நாராயணஸாமி முணுமுணுத்தான். அந்த நால்வருடைய பெயரெல்லாம் நான் விசாரிக்கவில்லை. அவர்கள் அப்போது பிங்கள

வருஷத்துப் பலாபலன்களைப் பற்றி வார்த்தையாடிக் கொண்டிருந்தனர். அவர்களுடைய ஸம்பாஷணையை இங்கு எழுத வேண்டுமாதலால், அவர்களுக்கு, நெட்டையன், கட்டையன், சொரியன், கரியன் என்ற கற்பனைப் பெயர்கள் கொடுக்கிறேன்.

சொரியன் சொல்லுகிறான் :—புது வருஷத்துப் பஞ்சாங்கம் கேட்டீர்களா? இந்த வருஷ மெப்படி? ஜனங்களுக்கு நல்லதா கெட்டதா?

கரியன் :—நள வருஷத்திலே நாய் படும் கஷ்டம்; பிங்கள வருஷத்தில் பின்னுங் கொஞ்சம் கஷ்டம். ஜனங்களுக்கு சுகமேது?

கட்டையன் :—நேற்று பூமியிலே ஒரு நக்ஷத்திரம் வந்து மோதி, பூமி தூள்தூளாகச் சிதறிப் போகுமென்று ஒரு மாஸ காலமாக 'எங்கே பார்த்தாலும் ஒரே பேச்சாய்க் கிடந்தது. ஒன்றும் நடக்கவில்லை. பொய் யென்கிறேன்.

நெட்டையன் :—அட போடா! தூள் தூளாகப் போகுமென்று நம்ம தமிழ்ச் சோசியன் சொல்லவில்லை. சீமைப் புளுகு!

கட்டையன் :—தமிழ்ச் சோசியனுக்கு இப்படிப் பெரிய பொய் சொல்லத் தெரியாது. அவன் புளுகுகிற விதம் வேறே!

நெட்டையன்:—அடபோடா! தமிழினிலே ஒருத்தன் இரண்டு பேர் நிஜம் சொல்லுகிற சோசியனும் உண்டு. ஆனால் நிஜம் பேசுகிற சோசியனுக்கு ஊரிலே அதிக மதிப்புக் கிடையாது.

கட்டையன் :—சோசிய சாஸ்திரமே பொய் யென்கிறேன். அவர்கள் இவ்வாறு பேசிக்கொண் டிருக்கையில் நாராயணஸாமி ஒருபுறம் கிளம்பிவிட் டான். அவன் சொல்லுகிறான் :—

"என் காளிதாஸரே, அமெரிக்காவில் பெரிய பெரிய ஸயன்ஸ்கார சாஸ்திரிகள் கண்டுபிடித்துச் சொன்னது கூடப் பொய்யாகி விட்டதே! இது பெரிய ஆச்சர்யம்! பூமி தூளாகா விட்டாலும் ஒரு பூகம்பமாவது நடக்குமென்று நான் எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். நேற்று ராத்திரி நம்ம தெருவில் அநேகர் தூங்கவேயில்லை. குழந்தை குட்டிகளை யெல் லாம் விழிக்க வைத்துக்கொண்டு கவலைப்பட்டுக்கொண் டிருந்தார்கள். ஸயன்ஸ் பண்டிதர்கூடச் சில சமயங் களில் பொய் சொல்லத்தான் செய்கிறார்கள்" என்றான்.

நான் குளத்தில் குளித்தவர்களுடைய சம்பா ஷணையில் கவனம் செலுத்தினேன்.

நெட்டையன் சொல்லுகிறான் :—வேதபுரத்திலே வெங்காயக் கடைக்குப் பக்கத்து வீட்டிலே பெரி யண்ண வாத்தியார் இருக்கிறாரே, தெரியுமா? அவர் சோசியம் தப்பவே செய்யாது. அவர் எங்கள் தாத்தா செத்துப்போன நாள், மணி எல்லாம் துல்யமாகச் சொன்னார். பூமி வெடிக்காதென்றும், அது சீமைப் புளுகென்றும், அதை நம்பக் கூடாதென்றும் அவர் என்னிடம் பத்து நாளுக்கு முந்தியே சொன்னார். பெரியண்ண வாத்தியார் நாளது பிங்கள வருஷத்

துக்குச் சொல்லிய பலன்களை யெல்லாம் அப்படியே சொல்லுகிறேன். கவனமாகக் கேளுங்கள்.

பிங்கள வருஷத்தில் நல்ல மழை பெய்யும், நாடு செழிக்கும், நாட்டுத் தானியம் வெளியே போகாது. ஏழைகளுக்குச் சோறு கொஞ்சம் அதிகமாகக் கிடைக்கும். பசு முதலிய நல்ல ஜந்துக்கள் விருத்தியாகும். துஷ்ட ஜந்துக்கள் எல்லாம் செத்துப் போகும். தேள், பாம்பு, நட்டுவாய்க்காலி முதலியவற்றின் பீடை குறையும், பிணி குறையும், துர்மரணமும், அகால மரணமும் குறையும். வெளித் தேசங்களில் சண்டை நடக்கும்; நம்முடைய தேசத்தில் சண்டை நடக்காமலே பல மாறுதல் ஏற்படும். ஜாதி பேதம் குறையும். ஆணுக்கும் பெண்ணுக்கும் படிப்பு விருத்தியாகும். ஜனங்களுக்குள்ளே தைரியமும், பலமும், வீரியமும், தெய்வ பக்தியும் அதிகப்படும். நம்முடைய தேசம் மேன்மையடையும் என்று பெரியண்ணா வாத்தியார் சொன்னதாக நெட்டையன் சொன்னான்.

"நாராயணஸாமி, கவனி" என்றேன்.

"பாமர ஜனங்களுடைய வார்த்தை" என்று நாராயணஸாமி சொன்னான்.

"தெய்வ வாக்கு" என்று நான் சொன்னேன்.

பிறகு சிறிது நேரம் அந்தக் கோயிலில் சுகமாகப் பாட்டிலும் பேச்சிலும் பொழுது கழித்து விட்டு வீட்டுக்குத் திரும்பி வந்து விட்டோம்.

## காக்காய்ப் பார்லிமெண்ட்.

நேற்று ஸாயங்காலம் என்னைப் பார்க்கும் பொருட்டாக உடுப்பியிலிருந்து ஒரு ஸாமியார் வந்தார். "உம்முடைய பெயரென்ன?" என்று கேட்டேன். "நாராயண பரமஹம்ஸர்" என்று சொன்னார். "நீர் எங்கே வந்தீர்?" என்று கேட்டேன். "உமக்கு ஜந்துக்களின் பாஷையைக் கற்பிக்கும் பொருட்டாக வந்தேன். என்னை உடுப்பியிலிருக்கும் உழக்குப் பிள்ளையார் அனுப்பினார்" என்று சொன்னார். "சரி, கற்றுக்கொடும்" என்றேன். அப்படியே கற்றுக் கொடுத்தார்.

காய்க்காய் பாஷை மிகவும் சுலபம். இரண்டு மணி நேரத்திற்குள் படித்து விடலாம்.

'கா' என்றால் 'சோறு வேண்டும்' என்றர்த்தம். 'கக்கா' என்றால் 'என்னுடைய சோற்றில் நீ பங்குக்கு வராதே' என்றர்த்தம். 'காக்கா' என்றால் 'எனக்கு ஒரு முத்தம் தாடி கண்ணே' என்றர்த்தம். இது ஆண் காக்கை பெண் காக்கையை நோக்கிச் சொல்லுகிற வார்த்தை. 'கஹாகா' என்றால் 'சண்டை போடுவோம்' என்றர்த்தம். 'ஹாகா' என்றால் 'உதைப்பேன்' என்றர்த்தம். இந்தப்படி ஏறக்குறைய மனுஷ்ய அகராதி முழுதும் காக்கை பாஷையிலே, க, ஹா, க்ஹ, முதலிய எழெட்டு அக்ஷரங்களைப் பலவேறு விதமாகக் கலந்து அமைக்கப்பட்டிருக்கிறது. அதை முழுதும் மற்றவர்களுக்குச் சொல்ல இப்போது சாவகாசமில்லை. பிறருக்குச் சொல்லவும் கூடாது. அந்த

நாராயண பரமஹம்ஸருக்குத் தமிழ் தெரியாது. ஆகையால் அவர் பத்திரிகைகளை வாசிக்கமாட்டார். இல்லாவிட்டால் நான் மேற்படி நாலைந்து வார்த்தைகள் திருஷ்டாந்தத்துக்காக எழுதினதிலேயே அவருக்கு மிகுந்த கோபமுண்டாய் விடும். ஒரு வார்த்தைகூட மற்றவர்களுக்குச் சொல்லக் கூடாதென்று என்னிடம் வற்புறுத்திச் சொன்னார். "போனால் போகட்டும். ஐயோ, பாவம்" என்று நாலு வார்த்தை காட்டி வைத்தேன்.

இன்று ஸாயங்காலம் அந்த பாஷையைப் பரீக்ஷை செய்து பார்க்கும் பொருட்டாக, மேல் மாடத்து முற்ற வெளியிலே போய் உட்கார்ந்து பார்த்தேன். பக்கத்து வீட்டு மெத்தைச் சுவரின்மேல் நாற்பது காக்கை உட்கார்ந்திருக்கிறது. "நாற்பது காக்கைகள் உட்கார்ந்திருக்கின்றன என்று பன்மை சொல்ல வேண்டாமோ?" என்று எண்ணிச் சில இலக்கணக்காரர்கள் சண்டைக்கு வரக்கூடும், அது பிரயோஜனமில்லை. நான் சொல்வதுதான் சரியான பிரயோகம் என்பதற்கு போகர் இலக்கணத்தில் ஆதாரமிருக்கின்றது. "போகர் இலக்கணம் உமக்கு எங்கே கிடைத்தது?" என்று கேட்கலாம். அதெல்லாம் மற்றொரு சமயம் சொல்லுகிறேன். அதைப் பற்றி இப்போது பேச்சில்லை. இப்போது காக்காய்ப் பார்லிமெண்டைக் குறித்துப் பேச்சு. அந்த நாற்பதில் ஒரு கிழக்காக்கை ராஜா. அந்த ராஜா சொல்லுகிறது:—"மனிதருக்குள் ராஜாக்களுக்கு உயர்ந்த சம்ப

ளங்கள் கொடுக்கிறார்கள். கோடி ஏழைகளுக்கு அதாவது ஸாதாரணக் குடிகளுக்குள்ள சொத்தை விட ராஜாவுக்கு அதிக சொத்து. போன மாசம் நான் பட்டணத்துக்குப் போயிருந்தேன். அங்கே ருஷியா தேசத்துக் கொக்கு ஒன்று வந்திருந்தது. அங்கே சண்டை ஓயாமல் நடக்கிறதாம். ஜார் சக்கரவர்த்தி கக்ஷி ஒன்று. அவர் யோக்கியர். அவரைத் தள்ளிவிட வேண்டுமென்பது இரண்டாவது கக்ஷி. இரண்டு கக்ஷியாரும் அயோக்கியர்களாதலால் இரண்டையும் தொலைத்துவிட வேண்டு மென்று மூன்றாவது கக்ஷி. மேற்படி மூன்று கக்ஷியாரும் திருடரென்று நாலாவது கக்ஷி. இந்த நாலு கக்ஷியாரையும் பொங்கவிட்டு விட்டுப் பிறகுதான் யேசு கிறிஸ்து நாதரைத் தொழ வேண்டு மென்று ஐந்தாவது கக்ஷி. இப்படியே நூற்றிருபது கக்ஷிகள் அந்த தேசத்தில் இருக்கின்றன வாம்.

“இந்த 120 கக்ஷியார் பரஸ்பரம் செய்யும் ஹிம்ஸை பொறுக்காமல் ‘இந்தியாவுக்குப் போவோம். அங்கே தான் சண்டை யில்லாத இடம், ஹிமயமலைப் பொந்தில் வசிப்போம்’ என்று வந்ததாம். அது சும்மா பட்டணத்துக்கு வந்து அனிபெஸன்ட் அம்மாளுடைய தியஸாபிகல் சங்கத்துத் தோட்டத்தில் சில காலம் வசிக்க வந்தது. அந்தத் தோட்டக் காற்று ஸமாதானமும், வேதாந்த வாஸனையு முடையதாதலால், அங்கே போய்ச் சில காலம் வசித்தால், ருஷியாவில் மனுஷ்யர் பரஸ்பரம் கொலை பண்ணும் பாவத்தைப்

பார்த்த தோஷம் நீங்கி விடுமென்று மேற்படி கொக்கு ஹிமயமலையிலே கேள்விப் பட்டதாம்.

"கேட்டீர்களா, காகங்களே, அந்த ருஷியா தேசத்து ஜார் சக்கரவர்த்தியை இப்போது அடித்துத் துரத்தி விட்டார்களாம். அந்த ஜார் ஒருவனுக்கு மாத்திரம் கோடானுகோடியான சம்பளமாம். இப்போது நம்முடைய தேசத்திலே கூடத் திருவாங்கூர் மஹாராஜா, மைசூர் ராஜா முதலிய ராஜாக்களுக்குக் கூட எல்லா ஜனங்களும் சேர்ந்து பெரிய பெரிய ஆஸ்தி வைத்திருக்கிறார்கள்.

"நானோ உங்களை வீணாக ஆளுகிறேன். ஏதாவது சண்டைகள் நேரிட்டால் என்னிடம் மத்தியஸ்தம் தீர்க்க வருகிறீர்கள். நான் தொண்டைத் தண்ணீரை வற்றடித்து உங்களுக்குள்ளே மத்தியஸ்தம் பண்ணுகிறேன். ஏதேனும் ஆபத்து நேரிட்டால், அதை நீக்குவதற்கு என்னிடம் உபாயம் கேட்க வருகிறீர்கள். நான் மிகவும் கஷ்டப்பட்டு உபாயம் கண்டு பிடித்துச் சொல்லுகிறேன். இதற்கெல்லாம் சம்பளமா? சாடிக்கையா? ஒரு இழவும் கிடையாது. தண்டத்துக்கு உழைக்கிறேன். எல்லாரையும் போலே நானும் வயிற்றுக்காக நாள் முழுவதும் ஓடி உழன்று பாடுபட்டுத் தான் தின்னவேண்டி யிருக்கிறது. அடே காகங்கள், கேளீர்:

"ஒவ்வொரு காக்கைக்கும் நாள்தோறும் கிடைக்கிற ஆஹாரத்தில் ஆறிலே ஒரு பங்கு எனக்குக் கொடுத்துவிட வேண்டும். அதை வைத்துக்கொண்டு

நானும் என் பெண்டாட்டியும், என் குழந்தைகளும் என் அண்ணன், தம்பி, மாமன், மச்சான், என் வைப் பாட்டியார், எழு பேர். அவர்களுடைய குடும்பத் தார் இத்தனை பேரும் அரை வயிறு ஆறாரம் கஷ்ட மில்லாமல் நடத்துவோம். இப்போது என் குடும் பத்துக் காக்கைகளுக்கும் மற்றக் காகங்களுக்கும் எவ் விதமான வேற்றுமையும் இல்லை. எழெட்டு நாளுக்கு முந்தி ஒரு வீட்டுக் கொல்லையிலே கிடந்தது. அது சோறில்லை ; கறியில்லை ; எலும்பில்லை ; ஒன்றுமில்லை ; அசுத்த வஸ்து கிடந்தது. அதைத் தின்னப் போனேன். அங்கே ஒரு கிழவன் வந்து கல்லை எறிந்தான். என் மேலே இந்த வலச் சிறகிலே காயம். இது சரிப்படாது. இனிமேல் எனக்குப் பிரஜைகள் ஆறில் ஒரு பங்கு கொடுத்து விட வேண்டும்'' என்று சொல்லிற்று.

இதைக் கேட்டவுடனே ஒரு கிழக் காகம் சொல்லுகிறது :—

“மகாராஜா, தாங்கள் இதுவரை யில்லாத புதிய வழக்கம் ஏற்படுத்துவது நியாய மில்லை. இருந்தாலும் அவசரத்தை முன்னிட்டுச் சொல்லுகிறீர்கள் ! அதற்கு நாங்கள் எதிர்த்துப் பேசுவது நியாய மில்லை. ஆனல் தங்களுக்குள்ள அவஸரத்தைப் போலவே என் போன்ற மந்திரிமாருக்கும் அவஸர முண்டென்பதைத் தாங்கள் மறந்து விட்டதை நினைக்க எனக்கு மிகுந்த ஆச்சர்ய முண்டாகிறது. தங்களுக்கு ஒவ்வொரு காக் கையும் தன் வரும்படியில் பன்னிரண்டில் ஒரு பகுதி

கட்டவேண்டுமென்றும், அதில் மூன்றில் ஒரு பாகம் தாங்கள் மந்திரிமார் செலவுக்குக் கொடுக்க வேண்டுமென்றும், ஏற்படுத்துதல் நியாயமென்று என் புத்தியில் படுகிறது” என்று சொல்லிற்று. அப்பொழுது ஒரு அண்டங்காக்கை எழுந்து:—“கக்கஹா, கக்கஹா, நீங்கள் இரண்டு கக்ஷியாரும் அயோக்யர்கள். உங்களை உதைப்பேன்” என்றது. வேறொரு காகம் எழுந்து ஸமாதானப் படுத்திற்று. இதற்குள் மற்றொரு காகம் என்னைச் சுட்டிக் காட்டி:—“அதோ, அந்த மனுஷ்யனுக்கு நாம் பேசுகிற விஷயம் அர்த்தமாகிறது. ஆதலால் நாம் இங்கே பேசக்கூடாது. வேறிடத்துக்குப் போவோம்” என்றது. உடனே எல்லாக் காகங்களும் எழுந்து பறந்து போய் விட்டன.

இது நிஜமாக நடந்த விஷயமில்லை. கற்பனைக் கதை.

---

## பிழைத்தோம்.

மாலை நாலு மணி யாயிருக்கும்.

நான் சிறிது ஆயாஸத்தினால் படுத்து இலேசான தூக்கம் தூங்கி விழித்துக் கண்ணைத் துடைத்துக் கொண்டு தாம்பூலம் போட்டுக்கொள்ள யோசனை செய்து கொண்டிருந்தேன். அப்போது வீரபுரம் கிருஷ்ணய்யங்கார் வந்து சேர்ந்தார். இவர் நமக்கு ஆப்த ஸ்நேகிதர். நல்ல யோக்கியர். ஆனால், சூது வாது தெரியாத ஸாதுவான பிராணி.

இவர் வந்தவுடனே "ஓராச்சர்யம்!" என்று கூவினர். "என்ன விஷயம்?" என்று கேட்டேன். "நேற்று ராத்திரி ஒரு கனவு கண்டேன்" என்றார். "என்ன கனவு? சொல்லும்" என்றேன்.

வீரபுரம் கிருஷ்ணய்யங்கார் பின் வருமாறு சொல்லலானார் :—

"டாம், டாம், டாம் என்று வெடிச் சத்தம் கேட்கிறது. எங்கு பார்த்தாலும் புகை. அந்தப் புகைச் சலுக்குள்ளே நான் சுழற் காற்றில் அகப்பட்ட பக்ஷி போலே அகப்பட்டுக் கொண்டேன். திடீரென்று எனக்குக் கீழே ஒரு வெடி கிளம்பும். அது என்னைக் கொண்டு நூறு காதவழி தூரத்தில் ஒரு க்ஷணத்திலே எறிந்து விடும். அப்படிப்பட்ட வேகத்தை சாமானியமாக விழித்துக்கொண்டிருக்கும் நேரத்தில் நம்மாலே ஸ்மரிக்கக்கூட முடியாது.

"மனோவேகம் என்பதின் பொருளை நேற்று ராத்திரித் தான் கண்டேன். அடே ராமா! ஒரு தள்ளுத் தள்ளினல் நேரே தலையை வானத்திலே கொண்டு முட்டும். அங்கே போனவுடன் மற்றொரு வெடி, அது பாதாளத்திலே வீழ்த்தும். எட்டுத் திசையும் பதினாறு கோணமும், என்னைக் கொண்டு மோதின படியாக இருந்தது. வெடியின் சத்தமோ ஸாமானியமன்று. அண்ட கோளங்கள் இடிந்து போகும்படியான சத்தம். இப்படி நெடுநேரம் கழிந்தது. எத்தனை மணி நேரம் இந்தக் கனவு நீடித்த தென்பதை என்னல் இப்போது துல்லியமாகச் சொல்ல முடியாது.

ஆனால் ஸ்வப்பனத்திலே அது காலே யரைக்கால் யுகம் போலிருந்தது. மரணாவஸ்தை இனிமேல் எனக்கு வேறு வேண்டியதில்லை. மூச்சுத் திணறுகிறது, உயிர் தத்தளிக்கிறது, அந்த அவஸ்தை ஒரு முடிவுக்கு வரு மென்றாவது, என் பிராணன் மிஞ்சு மென்றாவது எனக்கு அப்போது தோன்றவே யில்லை.

"நெடுநேரம் இப்படி என்னைப் புரட்டித் தள்ளிய பிறகு ஒரு சுவர் மேலே கொண்டு மோதிற்று. அந்தச் சுவரில் 'ஓம் சக்தி' என்று ஒளி எழுத்துக்களால் பல விடங்களில் எழுதப்பட்டிருந்தது. அவற்றுள் மிகவும் ஒளி பொருந்திய எழுத்தின் கீழே ஒரு சிறு பொந் திருந்தது. அந்தப் பொந்துக்குள்ளே போய் விழுந் தேன். ஆரம்பத்தில் இவ்வளவு சிறிய பொந்துக்குள் நாம் எப்படி நுழைய முடியுமென்று நினைத்தேன். பிறகு ஸ்வப்பனந்தானே? எவ்விதமாகவோ அந்தப் பொந்துக்குள் என் உடம்பு முழுதும் நுழைந்திருக்கக் கண்டேன். அதற்குள்ளே போனவுடன் புகைச்சலு மில்லை, வெடியும் நின்றுவிட்டது. மூச்சுத் திணறவு மில்லை, ஆறுதலுண்டாயிற்று. பிழைத்தோமப்பா, என்று நினைத்துக் கொண்டேன். இவ்வளவு தான் கனவு. இந்தக் கனவின் பொருளென்ன? இது என்ன விஷயத்தைக் குறிப்பிடுகின்றது?" என்று கிருஷ்ணய்யங்கார் கேட்டார்.

"கனவுக்குப் பொருள் கண்டு பிடித்துச் சொல் லும் சாஸ்திரம் எனக்குத் தெரியாது" என்று சொன் னேன்.

கிருஷ்ணய்யங்காருக்குத் திருப்தி ஏற்படவில்லை. நான் கனவு சாஸ்திரத்திலேயே ஒரு வேளை நம்பிக்கையில்லாமல் இருக்கலாமென்று நினைத்து அவர் கொஞ்சம் முகத்தைச் சிணுக்கினார். பிறகு சொல்லுகிறார்:—

“அப்படி நினையாதேயுமையா, கனவுக்குப் பொருளுண்டு. பல முறை கனவிலே கண்டது நனவிலே நடப்பதை நான் பார்த்திருக்கிறேன்” என்றார்.

‘காலைச் சுற்றின பாம்பு கடித்தாலொழியத் தீராது’ என்று வசனம் சொல்லுகிறது. ஆதலால், நான் இவருக்கு ஏதேனும் விடை சொல்லித்தான் தீர வேண்டுமென்று கண்டு பிடித்துக் கொண்டேன். எனவே பின்வருமாறு சொன்னேன் :—

“அந்த வெடிப்புத்தான் உலக நிலை; அந்த சக்தி மந்திரமே தாரகம். அந்தப் பொந்து விடுதலை. அதற்குள் நுழைவது கஷ்டம். தெய்வ வெடியினாலே தள்ளினாலொழிய மனிதன் ஜீவன் முக்தி நிலையில் நுழைய முடியாது. உள்ளே நுழைந்து விட்டால் பிறகு அது விஸ்தாரமான அரமனையாகக் காணப்படும். அதற்குள்ளே நுழைந்தவர்களுக்கு அதன் பிறகு எவ்விதமான அபாயமுமில்லை. அதற்குள்ளே போனவர்கள் உண்மையாகவே பிழைத்தார்கள்” என்று சொன்னேன். கிருஷ்ணய்யங்கார் இதைக் கேட்டு மிகவும் சந்தோஷத்துடன் விடை பெற்றுச் சென்றார்.

## புதிய கோணங்கி.

### (அதாவது குடுகுடுப்பைக்காரன்)

வேதபுரத்தில் ஒரு புது மாதிரிக் குடுகுடுப்பைக் காரன் புறப்பட்டிருக்கிறான். உடுக்கைத் தட்டுவதிலே முப்பத்தைந்து தாளபேதங்களும், அவற்றிலே பல வித்தியாஸங்களும் காட்டுகிறான். தாள விஷயத்திலே மஹா கெட்டிக்காரன். உடம்பு மேலே துணிமூட்டை சுமந்து கொண்டு போவதில்லை. நல்ல வெள்ளை வேஷ்டி உடுத்தி, வெள்ளைச் சட்டை போட்டுக்கொண்டிருக்கிறான். தலையிலே சிவப்புத் துணியால் வளைந்து வளைந்து பெரிய பாகை கட்டியிருக்கிறான். பாகையைப் பார்த்தால் நெல்லூர் அரிசி மூட்டையிலே பாதி மூட்டையைப் போலிருக்கிறது. நெற்றியிலே பெரிய குங்குமப் பொட்டு. மீசையும் கிருதாவுமாக மிகவும் விரிந்த பெரிய முகத்துக்கும் அவனுடைய சிவப்பு நிறத்துக்கும் அந்தக் குங்குமப் பொட்டு நன்றாகப் பொருந்தி யிருக்கிறது. ஆள் நெட்டை; தடியன். காலிலே ஹைதராபாது ஜோடு மாட்டியிருக்கிறான். நேற்றுக் காலையிலே, இவன் நம்முடைய வீதி வழியாக வந்தான். உடுக்கையிலே தாள விஸ்தாரம் நடக்கிறது. பெரிய மிருதங்கக்காரன் வேலை செய்வது போலே செய்கிறான். நல்ல கெட்டிக்காரன். அவன் சொன்னான் :—

“குடுகுடு குடுகுடு குடுகுடு குடுகுடு ;
நல்ல காலம் வருகுது ; நல்ல காலம் வருகுது ;
ஜாதிகள் சேருது ; சண்டைகள் தொலையுது ;
சொல்லடி, சொல்லடி, சக்தி மாகாளீ,

வேதபுரத்தாருக்கு நல்லகுறி சொல்லு!
தரித்திரம் போகுது, செல்வம் வருகுது;
படிப்பு வளருது; பாவம் தொலையுது;
படிச்சவன் சூதும் பாவமும் பண்ணினால்
போவான், போவான்; ஐயோவென்று போவான்.
வேதபுரத்திலே வியாபாரம் பெருகுது;
தொழில் பெருகுது; தொழிலாளி வாழ்வான்;
சாத்திரம் வளருது; சூத்திரந் தெரியுது;
யந்திரம் பெருகுது; தந்திரம் வளருது;
மந்திர மெல்லாம் வளருது, வளருது!
குடுகுடு குடுகுடு குடுகுடு குடுகுடு,
சொல்லடீ, சொல்லடீ, மலையாள பகவதீ.
அந்தரி, வீரி, சண்டிகை; சூலி!
குடுகுடு குடுகுடு"

இப்படி அவன் சொல்லிக்கொண்டு போவதை நான் மெத்தையிலிருந்து கேட்டேன். இதென்னடா புதுமையாக இருக்கிறதென்று ஆச்சரியத்துடன் அவனை நிற்கச் சொன்னேன். நின்றான். கீழே இறங்கிப் போய், அவனை ஸமீபத்திலே அழைத்து "எந்த ஊர்?" என்று கேட்டேன். "சாமி, குடுகுடுக்காரனுக்கு ஊரேது, நாடேது? எங்கேயோ பிறந்தேன், எங்கேயோ வளர்ந்தேன். எங்கெல்லாமோ சுற்றிக் கொண்டு வருகிறேன்" என்றான். அப்போது நான் சொன்னேன்:—

"உன்னைப் பார்த்தால் புதுமையாகத் தெரிகிறது. சாதாரணக் கோணங்கிகளைப் போலில்லை. உன்னு

டைய பூர்வோத்தரங்களைக் கூடிய வரையில் ஸவிஸ்தாரமாகச் சொல்லு. உனக்கு நேர்த்தியான சரிகை வேஷ்டி கொடுக்கிறேன்" என்றேன். அப்போது, குடுகுடுக்காரன் சொல்லுகிறான்:—"சாமி, நான் பிறந்த இடம் தெரியாது. என்னுடைய தாயார் முகம் தெரியாது. என்னுடைய தகப்பனுருக்கு இதுவே தொழில். அவர் தெற்குப் பக்கத்தைச் சேர்ந்தவர். "ஒன்பது கம்பளத்தார்" என்ற ஜாதி. எனக்குப் பத்து வயதாக இருக்கும்போது, தஞ்சாவூருக்கு என் தகப்பனுர் என்னை அழைத்துக்கொண்டு போனார். அங்கே வைசூரி கண்டு செத்துப்போய் விட்டார். பிறகு நான் இதே தொழிலினுல் ஜீவனம் செய்துகொண்டு பல தேசங்கள் சுற்றி ஹைதராபாத்துக்குப் போய்ச் சேர்ந்தேன். அப்போது எனக்கு வயது இருபதிருக்கும். அங்கே ஜான்ஸன் என்ற துரை வந்திருந்தான். நல்ல மனுஷ்யன். அவன் ஒரு "கம்பெனி ஏஜெண்டு." இந்தியாவிலிருந்து தாசிகள், நட்டுவர், கழைக்கூத்தாடிகள், செப்பிடுவித்தைக்காரர், ஜாலக்காரர் முதலிய பல தொழிலாளிகளைச் சம்பளம் கொடுத்துக் கூட்டிக்கொண்டு போய், வெள்ளைக்காரர் தேசங்களிலே, பல இடங்களில் கூடாரமடித்து வேடிக்கை காண்பிப்பது அந்தக் கம்பெனியாரின் தொழில். விதிவசத்தினுல் நான் அந்த ஜான்ஸன் துரை கம்பெனியிலே சேர்ந்தேன். இங்கிலாந்து, பிரான்ஸ் முதலிய ஐரோப்பிய தேசங்களிலே ஸஞ்சாரம் செய்திருக்கிறேன். அமெரிக்காவுக்குப் போயிருக்கிறேன். இரண்டு வருஷங்களுக்கு முன்பு சண்டை

தொடங்கினபோது, மேற்படி "கம்பெனி" கலைந்து போய் விட்டது. எங்களுக்கெல்லாம் பணம் கொடுத்து இந்தியாவுக்கு அனுப்பி விட்டார்கள். உயிருள்ளவரை போஜனத்துக்குப் போதும்படியான பணம் சேர்த்து வைத்திருக்கிறேன். ஆனாலும், பூர்வீகத் தொழிலைக் கைவிடுவது நியாயமில்லை என்று நினைத்து இங்கு வந்த பின்னும் பலவூர்களில் சுற்றி, இதே தொழில் செய்து வருகிறேன்.

ஐரோப்பா முதலிய தேசங்களில் சுற்றின காலத்தில் மற்றக் கூத்தாடிகளைப் போலே வீண் பொழுது போக்காமல், அவ்விடத்துப் பாஷைகளைக் கொஞ்சம் படித்து வந்தேன். எனக்கு இங்கிலீஷ் நன்றாகத் தெரியும். வேறு சில பாஷைகளும் தெரியும். அனேக புஸ்தகங்கள் வாசித்திருக்கிறேன். இங்கு வந்து பார்க்கையிலே அவ்விடத்து ஜனங்களைக் காட்டிலும் இங்குள்ளவர்கள் பல விஷயங்களிலே குறைவுபட்டிருக்கிறார்கள்.

நம்முடைய பாரம்பரைத் தொழிலை வைத்துக் கொண்டே ஊரூராகப் போய் இங்குள்ள ஜனங்களுக்குக் கூடியவரை நியாயங்கள் சொல்லிக்கொண்டு வரலாமென்று புறப்பட்டிருக்கிறேன். இது தான் என்னுடைய விருத்தாந்தம்" என்றான்.

ஒரு ஜரிகை வேஷ்டி எடுத்துக் கொடுக்கப் போனேன்; போன தீபாவளிக்கு வாங்கினது; நல்ல வேஷ்டி.

"சாமி, வேண்டியதில்லை" என்று சொல்லிவிட்டு அவன் மறுபடி உடுக்கை யடித்துக்கொண்டு போய் விட்டான். போகும்போதே சொல்லுகிறான் :—

"குடுகுடு, குடுகுடு, குடுகுடு, குடுகுடு,
சாமிமார்க்கெல்லாம் தைரியம் வளருது,
தொப்பை சுருங்குது ; சுறுசுறுப்பு விளையுது,
எட்டு லச்சுமியும் ஏறி வளருது,
பயந் தொலையுது, பாவந் தொலையுது,
சாத்திரம் வளருது, சாதி குறையுது,
நேத்திரம் திறக்குது, நியாயந் தெரியுது,
பழைய பயித்தியம் படீலென்று தெளியுது,
வீரம் வருகுது, மேன்மை கிடைக்குது,
சொல்லடீ சக்தி, மலையாள பகவதி,
தர்மம் பெருகுது, தர்மம் பெருகுது."

என்று சொல்லிக்கொண்டே போனான். அவன் முதுகுப்புறத்தை நோக்கி, தெய்வத்தை நினைத்து, ஒரு கும்பிடு போட்டேன்.

---

## கடல்.

ஒரு நாள் மாலையில் நான் வேதபுரம் கடற்கரையில் தனி யிடத்தில் மணல் மேலே போய்ப் படுத்துக்கொண்டிருந்தேன். பகலில் நெடுந்தூரம் நடந்த இளைப்பினால் அப்படியே தூங்கிப் போய்விட்டேன். அந்தத் தூக்கத்திலே கண்ட கனவை எழுதுகிறேன்.

நடுக் கடலில் ஒரு தீவு; அதனிடையே பெரிய அரமனை. அரமனைக்கருகே சிங்காரத் தோட்டம். அதில் ஒரு நீரோடை, அதனருகே புல்லாந் தரை

மேல் பதினாறு வயதுள்ள ஒரு கன்னிகை உட்கார்ந்திருந்தாள். அவள் என்னைக் கண்ட மாத்திரத்தில் எழுந்து அரமனைக்குள் ஓடிப்போய் விட்டாள். நான் அவ்வழியைப் பின் தொடர்ந்து சென்றேன். போகிற வழியில் ஒரு பெரிய பாம்பு கிடந்தது. என்னைக் கண்டவுடன் படத்தைத் தூக்கி என் மேலே பாய்ந்து கடிக்க வந்தது. நான் ஓடினேன். அது என்னைத் துரத்திக்கொண்டு வந்தது. ஓடி யோடிக் கடற் கரைக்கு வந்து சேர்ந்தேன். பாம்பு காலுக்கு மிகவும் சமீபமாக வந்தது. கடலுக்குள்ளே குதித்தேன். கடலிலே புயற்காற்று ஓரலையைத் தூக்கி மூன்று பனை யளவு தூரம் மேலே எறிகிறது. மற்றோரலை மூன்று பனையளவு பள்ளத்தில் வீழ்த்துகிறது. எப்படியோ சாகாமல் அந்த அலைக்குத் தப்பி விட்டேன். நெடு நேரத்துக்கப்பால் அலை அடங்கிற்று. நான் நீச்சை விடவில்லை. எப்படியோ நீந்திக்கொண்டு வருகிறேன். ஆனால் கரை தென்படவில்லை. பிறகு கைகளில் நோவுண்டாயிற்று. என்னால் நீந்த முடியவில்லை. என்னுடைய குல தெய்வத்தின் பெயரை உச்சரித்தேன். அங்கே ஒரு கிழவன் தோணி விட்டுக்கொண்டு வந்தான். "அண்ணே, அண்ணே, என்னை உன்னுடைய தோணியில் ஏற்றிக்கொள்ளு. நான் புயற் காற்றில் அடிபட்டு மிகவும் நொந்து போயிருக்கிறேன்" என்று சொன்னேன். அவன் தனது தோணியில் ஏற்றிக் கொண்டான். தோணியை விட்டுக்கொண்டு கடலிலே போகிறோம்; போகிறோம்; வழி தொலையவே யில்லை.

"அண்ணே, கரை சேர இன்னும் எத்தனை காலம் செல்லும்? எனக்குப் பசி கண் அடைக்கிறதே. நான் என்ன செய்வேன்!" என்று சொன்னேன். அந்தக் கிழவன் தின்பதற்குக் கொஞ்சம் அரிசி மாவும், ஒரு மிடறு தண்ணீரும் கொடுத்தான். இளைப்பாறி அப்படியே கண்ணயர்ந்தேன். (கனவுக்குள்ளே ஒரு தூக்கம்.) கொஞ்சம் ஆயாஸம் தெளிந்தவுடனே கண்ணை விழித்துப் பார்த்தேன்; கரை தெரிந்தது. கிழவன் என்னைக் கறையிலிறக்கி விட்டு, மறுபடி தனது தோணியைக் கடலிலே செலுத்திக்கொண்டு போனான்.

நான் அவனிடம் ஏதெல்லாமோ கேள்வி கேட்டேன். அவன் ஒன்றுக்கும் மறுமொழி சொல்லவில்லை. கண்ணுக் கெட்டும்வரை அவன் தோணியைப் பார்த்துக்கொண்டிருந்தேன். மறுபடி அந்தத் தீவுக்குள் கொஞ்சதூரம் போனவுடனே பழைய அரமனை தெரிந்தது. அதனருகே சிங்காரத் தோட்டம், அந்த நீரோடை, அந்தப் பெண்ணும் முன்போலவே புல்லாந் தரைமேல் உட்கார்ந்து கொண்டிருக்கிறாள். என்னைக் கண்டவுடன் மறுபடி யெழுந்து தன் வீட்டை நோக்கி யோடினாள். நான் தொடர்ந்து போகவில்லை. தொடர்ந்து போனால் முன் போலவே வழியில் பாம்பு கிடக்குமென்று நினைத்து மிகவும் பயங் கொண்டவனாய், அதிவேகமாகக் கடற்கரையை நோக்கி ஓடிச் சென்றேன். ஓடும்போதே பாம்பு துரத்திக்கொண்டு வருகிறதா என்று பல முறை திரும்பிப் பார்த்தேன். பாம்பு வரவில்லை. கரைக்கு வந்து சேர்ந்தவுடனே

இந்தத் தீவிலிருந்து எப்படியேனும் வெளியேறிப் போகலாமென்று யோசித்தேன். அந்தப் பெண் யாரென்று தெரிந்து கொண்டு பிறகு தான் அந்தத் தீவிலிருந்து புறப்பட வேண்டுமென்று மற்றொரு யோசனை யுண்டாயிற்று. அப்போது பசியும் களைப்பும் அதிகமாக இருந்தபடியால் அவற்றைத் தீர்க்க ஏதேனும் வழியுண்டா என்று சுற்றிப் பார்த்தேன். கரையோரமாகவே நெடுந்தூரம் நடந்து வந்தபோது அங்கே ஒரு குடிசை தென்பட்டது. அந்தக் குடிசைக்குள்ளே போய் நுழைந்தேன். அதற்குள்ளே ஒரு பிள்ளையார் வைத்திருந்தது. அந்த மூர்த்தியின் முன்னே ஓரிலையில் சோறு, கறி, பாயஸம், பக்ஷணம் முதலியனவும், ஒரு குடத்தில் நீரும், பக்கத்தில் புஷ்பம், சந்தனம் முதலிய பூஜா த்ரவ்யங்களும் வைத்திருக்கக் கண்டேன். எனது பசியின் கொடுமையினால் அந்த ஆஹாரத்தைத் தின்றுவிடலா மென்று யோசித்தேன். பிறகு சிந்தனை பண்ணிப் பார்த்தேன். "போன ஜன்மத்தில் என்ன பாவம் பண்ணியோ இந்த ஜன்மத்தில் இந்தத் தீவில் வரவும், இத்தனை கஷ்டப் படவும் ஹேது வுண்டாயிற்று. இப்போது பசித் துன்பத்தைப் பெரிதாக எண்ணி, எந்த மஹானோ ஸ்வாமி பூஜைக்காக வைத்திருக்கும் திருவமுதை அபகரித்தால், இன்னும் பாவ மேற்படும். ஆதலால் அந்தக் காரியம் செய்யக்கூடாது என்று தீர்மானம் செய்து கொண்டேன். பசி தாங்கவில்லை; நாமே பூஜை நைவேத்தியம் முடித்து விட்டுப் பிறகு அந்த உணவைக்

கொள்ளலா மென்று நினைத்து ஸ்நானம் செய்ய இடம் கிடைக்குமா என்று பார்க்கும் பொருட்டு வெளியே வந்து சிறிது தூரம் சுற்றிப் பார்த்ததில் அங்கே ஒரு சுனை யிருந்தது. அதில் ஸ்நானம் செய்து ஸந்தி முதலிய கர்மங்களை முடித்து விட்டு மறுபடி குடிசைக் குள்ளே போய்ப் பார்க்கையில் பிள்ளையார் மாத்திரந் தானிருந்தது. சோறு வடை தண்ணீர் பூ சந்தனம் ஒன்றையும் காணவில்லை. எனக்கு வயிற்றெரிச்சல் பொறுக்க முடியவில்லை. "பிள்ளையாரே, பிள்ளையாரே, உனக்கு எங்கள் வேதபுரி சேர்ந்தவுடனே முப்பத்து மூன்று தேங்காய் உடைத்துப் பூஜை செய்கிறேன். எனக்கிந்த ஆபத்து நேரத்தில் உதவி செய்ய மாட் டாயா?" என்று வேண்டி வருத்தப்பட்டேன்.

இந்த நிலையில் எனது கனவு தடைப்பட்டது. பல குழப்பங்களுண்டாயின. செய்தி நினைப்பில்லை. பிறகு மறுபடியும் நான் கடலலைகளின்மீது மிதந்து செல்வது கண்டேன். யுகப்ரளயம் போலே யிருந்தது. என் கைகள் புடைத்தன. கண் தெரியவில்லை. பிரக்ஞை சரியில்லை. கடலைத் திவலை திவலையாக உடைத்து நாசம் செய்து விடவேண்டு மென்ற நோக்கத்துடன் வாயு புடைப்பது போலிருந்தது. அந்த சமயத்தில் எனதுடம்பைக் கடலலைகள் பந்தாடினது. என்னுயி ரைக் கால தூதர் பந்தாடுவது போலே தோன்றிற்று. அப்போது மீண்டும் குலசக்தியின் பெயரை ஸ்மரித்து, விநாயகரை நினைத்துப் "பிள்ளையாரே, என்னை வேத புரத்துக் கரை சேர்த்துவிட்டால் உமக்கு மூவாயி

ரத்து முந்நூறு தேங்காய் உடைக்கிறேன். காப்பாற்ற வேண்டும், காப்பாற்ற வேண்டும்" என்று என்னை அறியாமல் கூவினேன். சிறிது நேரத்துக்குள் புயற்காற்று நின்றது. அங்கே ஒரு தோணி வந்தது; தோணியின் அழகு சொல்லி முடியாது. மயில் முகப்பும், பொன்னிறமும் கொண்டதாய் அன்னம் நீந்தி வருவது போலே மெதுவாக என்னருகில் வந்த அத் தோணியிடையே ஒரு மறக்குமாரன் ஆஸனமிட்டு வீற்றிருந்தான். அவன் முகத்திலொளி தீயொளி போலே விளங்கிற்று. தோணியைக் கண்டவுடனே நான் கை கூப்பினேன். அப்போது தோணிக்காரனிடம் என்னை யேற்றிக்கொள்ளும்படி அவன் கட்டளை யிட்டான். அவர்கள் என்னை யேற்றிக்கொண்டனர். அந்தத் தோணியில் ஏறினவுடனே என் உடம்பிலும், மனதிலுமிருந்த துன்பங்களெல்லாம் நீங்கிப் போயின. என் உடம்பைப் பார்த்தால் ராஜா வுடை தரித்திருக்கிறது. பதினாறு வயதுப் பிள்ளை யாகவே நானு மிருந்தேன். தோணியிடை யிருந்த மன்னன் கரத்திலே வேல் தெரிந்தது. அப்போது கண்ணை விழித்தேன். வேதபுரத்துக் கடற்கரை; மாலை வேளை; மணல்மீது நான் படுத்திருப்பது கண்டேன்.

நம்பிக்கை யுண்டாகவில்லை. கண்ணை நன்றாகத் துடைத்துப் பார்த்தேன். தீவும், புயற்காற்றும், கனவென்று தெரிந்துகொண்டேன். அந்தத் தீவில் என்னைக் கண்டவுடன் ஓடி மறைந்த பெண்ணின் வடிவம் என் கண் முன்னே நிற்பது போலிருந்தது. பிறகு

தோணியிலே கண்ட மன்னன் வடிவம் தெரிந்தது........ வீடு வந்து சேர்ந்தேன்.

வேதபுரத்தில் மௌனச் சாமியார் என்றொருவர் இருக்கிறார். அவரிடம் எனது கனவைச் சொல்லி, அந்தத் தீவிலே கண்ட பெண் யாரென்று கேட்டேன். "உன்னை யார் காப்பாற்றிய தென்பதை நீ அறியவில்லை. அந்தப் பெண் உன்னிடம் அன்பு கொண்டாள். இரண்டாமுறை தோணியிலே தோன்றிய இளவரசன் கையில் ஒரு வேல் இருந்தது கண்டனையா? அதுவே உனக்குப் பெண்ணாகத் தோன்றிற்று. உன்னைக் கவலைக் கடலில் வீழ்த்திய பெண்ணே பிறகு வேலாகத் தோன்றி உன்னைக் காத்தாள்" என்று சொன்னார். சக்தியே வேலென்றும் அதுவே உயிருக்கு நல்ல துணை யென்றும் தெரிந்து கொண்டேன். சீக்கிரத்தில் நல்ல நாள் பார்த்து வேதபுரத்திலுள்ள ஏழைப் பிள்ளையாருக்கு மூவாயிரத்து முன்னூறு தேங்காய் உடைக்க வேண்டுமென்று தீர்மானம் செய்திருக்கிறேன்.

---

## கடற்கரை யாண்டி.

ஒரு நாள், நடுப்பகல் நேரத்திலே, நான் வேதபுரத்தில் கடற்கரை மணலின் மேல் அலைக்கு எதிரே போய் உட்கார்ந்திருந்தேன். காலை முதலாகவே

வானத்தை மேகங்கள் மூடி மந்தாரமாக இருந்தபடி யால் மணல் சுடவில்லை. உச்சிக்கு நேரே ஸூர்யன். மேகப் படலத்துக்குட்பட்டு சந்தேகத்தால் மறைக்கப் பட்ட ஞானத்தைப் போல் ஒளி குன்றி யிருந்தான். அலைகள் எதிரே மோதின. வடகீழ்த் திசையிலிருந்து சில்லென்று குளிர்ந்த காற்று வீசிற்று. குருட்டு வெயில் கடல்மீது படுவதனால், அலைகளைப் பார்க்கும் போது கொஞ்சம் கண் கூசிற்று. சிறிது தொலையில் ஒரு வெளி நாட்டு வியாபாரக் கப்பல் வந்து நின்றது. நானும் பொழுது போகாமல், ஒரு தோணிப் புறத் திலே யிருந்து கடலையும் அலையையும் பற்றி யோசனை செய்து கொண்டிருந்தேன். 'அடா! ஓயாமல், ஓ-யா-மல், எப்போதும் இப்படி ஓலமிடுகிறதே! எத் தனை யுகங்களாயிற்றோ! விதியன்றோ இந்தக் கடலை இப்படி யாட்டுவது? விதியின் வலிமை பெரிது.'

'விதியினால் அண்டகோடிகள் சுழல்கின்றன. விதிப்படியே அணுக்கள் சலிக்கின்றன. மனுஷ்யர், தேவர், அசுரர் முதலிய பல கோடி ஜீவராசிகளின் மனங்களும், செயல்களும் விதிப்படி நடக்கின்றன. இந்த ஸூர்யன் விதிக்குக் கட்டுப்பட்டிருக்கிறான். மேகங்களெல்லாம் விதிப்படி பிறந்து, விதிப்படி யோடி, விதிப்படி மாய்கின்றன' இவ்வாறு யோசனை செய்து கொண்டிருக்கையிலே, அங்கொரு யோகி வந் தார். இவருக்கு வேதபுரத்தார் "கடற்கரையாண்டி" என்று பெயர் சொல்லுவார்கள். ஏழைகள் இவரைப் பெரிய சித்தரென்றும், ஞானி யென்றும் கொண்டாடு வார்கள். கண்ட இடத்தில் சோறு வாங்கித் தின்பார்.

வெயில் மழை பார்ப்பது கிடையாது. சில மாதங்கள் ஓரூரிலிருப்பார். பிறகு வேறெங்கேனும் போய், ஓரிரண்டு வருஷங்களுக்குப் பின் திரும்பி வருவார். இவருடைய தலையெல்லாம் சடை. அரையிலொரு காவித் துணி. வேதபுரத்தில் தங்கும் நாட்களிலே இவர் பெரும்பாலும் கடலோரத்தில் உலாவிக்கொண் டிருப்பார். அல்லது, தோணிகளுக்குள்ளே படுத்துத் தூங்குவார். இந்தக் கடற்கரை யாண்டி நடுப் பகலில் நான் அலைகளைப் பார்த்து யோசனை செய்வது கண்டு புன்சிரிப்புடன் வந்து என்னருகே மணலின் மேல் உட்கார்ந்து கொண்டு, "என்ன யோசனை செய் கிறாய்?" என்று கேட்டார்.

"விதியைப் பற்றி யோசனை செய்கிறேன்" என் றேன். "யாருடைய விதியை?" என்று கேட்டார்.

"என்னுடைய விதியை; உம்முடைய விதியை; இந்தக் கடலின் விதியை; இந்த உலகத்தின் விதியை" என்று சொன்னேன். அப்போது கடற்கரை யாண்டி சொல்லுகிறார்:—

"தம்பி, உனக்கும், கடலுக்கும், உலகத்துக்கும் விதி தலைவன். எனக்கு விதி கிடையாது. ஆதலால் உங்கள் கூட்டத்தில் என்னைச் சேர்த்துப் பேசாதே" என்றார்.

"எதனாலே?" என்று கேட்டேன்.

அப்போது, அந்த யோகி மிகவும் உரத்த குரலில், கடலோசை தணியும்படி பின் வரும் பாட்டை ஆச் சரியமான நாட ராகத்தில் பாடினார்.

"சேல்பட் டழிந்தது
செந்தூர் வயற் பொழில்;
தேங்கடம் பின்
மால் பட் டழிந்தது
பூங்கொடி யார் மனம்
மாமயிலோன்
வேல் பட் டழிந்தது
வேலையும், சூரனும்
வெற்புமவன்
கால் பட் டழிந்த திங்
கென் றலை மேலயன்
கை யெழுத்தே!"

கந்தரலங்காரத்தில் நான் பலமுறை படித்திருக்கும் மேற்படி பாட்டை அந்த யோகி பாடும்போது, எனக்குப் புதிதாக இருந்தது. மேலெல்லாம் புளகமுண்டாய் விட்டது. முதலிரண்டடி சாதாரணமாக உட்கார்ந்து சொன்னார். மூன்றாவது பதம் சொல்லுகையில் எழுந்து நின்று கொண்டார். கண்ணும், முகமும் ஒளி கொண்டு ஆவேசம் ஏறிப்போய் விட்டது. "வேல் பட்டழிந்தது வேலை (கடல்)" என்று சொல்லும் போது சுட்டு விரலால் கடலைக் குறித்துக் காட்டினார். கடல் நடுங்குவது போல் என் கண்ணுக்குப் புலப்பட்டது.

பிறகு சொன்னார் :—

"தெய்வத்தின் வேலாலே கடல் உடைந்தது, மலை தூளாய் விட்டது. சூரபத்மன் சிதறிப் போனான்.

அந்த முருகனுடைய திருவடி என் முடிமீது தொட்டது. நான் விடுதலை கொண்டேன். 'விடுதலைப் பட்டது பாச வினை விலங்கே.' "

இங்ஙனம் அவர் சொல்லிக் கொண்டிருக்கையில் மழை வந்து விட்டது. நானெழுந்து வீட்டுக்குப் புறப்பட்டேன். அவர் அப்படியே அலையில் இறங்கி ஸ்நானம் செய்யப் போனார். நான் மணலைக் கடந்து சாலையில் ஏறும்போது, கடற்புறத்திலிருந்து சிங்கத்தின் ஒலி போலே 'விடுதலை; விடுதலை; விடுதலை' என்ற ஒலி கேட்டது.

---

## செய்கை.

வேதபுரத்தில் வேதபுரீசர் ஆலயம் என்ற சிவன் கோவில் இருக்கிறது. அந்தக் கோயிலில் எழுந்தருளியிருக்கும் சுப்பிரமணியக் கடவுளுக்குப் பல அடியார் ரத்ந மிழைத்த வேல் சாத்தும் கிரியை சென்ற திங்கட்கிழமை மாலையிலே நிகழ்ந்தது. அன்று காலையில் ஸ்வாமிக்குப் பலவிதமான அபிஷேகங்கள் நடந்தன. சந்தனபிஷேகம் நடக்கும் ஸமயத்தில் நான் ஸந்நிதிக்குப் போய்ச் சேர்ந்தேன். எனக்கு முன்னாகவே என்னுடைய ஸ்நேஹிதர் பிரமராய அய்யர் அங்கு வந்து தரிசனம் பண்ணிக்கொண்டிருந்தார்.

"சூரபத்மனை அடித்த உஷ்ணம் அமரும் பொருட்டாக எம்பெருமான் சந்தனபிஷேகம் செய்து கொள்ளுகிறான்" என்று பிரமராய அய்யர் சொன்னார்.

அந்த முருகனுடைய திருவடி என் முடிமீது தொட்டது. நான் விடுதலை கொண்டேன். 'விடுதலைப் பட்டது பாச வினை விலங்கே.' "

இங்ஙனம் அவர் சொல்லிக் கொண்டிருக்கையில் மழை வந்து விட்டது. நானெழுந்து வீட்டுக்குப் புறப்பட்டேன். அவர் அப்படியே அலையில் இறங்கி ஸ்நானம் செய்யப் போனார். நான் மணலைக் கடந்து சாலையில் ஏறும்போது, கடற்புறத்திலிருந்து சிங்கத்தின் ஒலி போலே 'விடுதலை; விடுதலை; விடுதலை' என்ற ஒலி கேட்டது.

---

## செய்கை.

வேதபுரத்தில் வேதபுரீசர் ஆலயம் என்ற சிவன் கோவில் இருக்கிறது. அந்தக் கோயிலில் எழுந்தருளியிருக்கும் சுப்பிரமணியக் கடவுளுக்குப் பல அடியார் ரத்ந மிழைத்த வேல் சாத்தும் கிரியை சென்ற திங்கட்கிழமை மாலையிலே நிகழ்ந்தது. அன்று காலையில் ஸ்வாமிக்குப் பலவிதமான அபிஷேகங்கள் நடந்தன. சந்தனுபிஷேகம் நடக்கும் ஸமயத்தில் நான் ஸந்நிதிக்குப் போய்ச் சேர்ந்தேன். எனக்கு முன்னாகவே என்னுடைய ஸ்நேஹிதர் பிரமராய அய்யர் அங்கு வந்து தரிசனம் பண்ணிக்கொண்டிருந்தார்.

"சூரபத்மனை அடித்த உஷ்ணம் அமரும் பொருட்டாக எம்பெருமான் சந்தனுபிஷேகம் செய்து கொள்ளுகிறான்" என்று பிரமராய அய்யர் சொன்னார்.

யானல் அவனுக்கு நாட்டியம் முதலிய தெய்வ கலைகள் இயற்கையிலே சித்தியாகும்."

இங்ஙனம் பிரமராய அய்யர் பேசிக்கொண்டிருக்கையில் அவ்விடத்துக்கு மேல்படி கோயில் தர்மகர்த்தாவாகிய வீரப்ப முதலியாரும் வந்து சேர்ந்தார். வீரப்ப முதலியார் நல்ல தீரன்; பல பெரிய காரியங்களை எடுத்து ஸாதித்தவர். இவருடைய குமாரன் மஹா வீரனென்று போர்க் களத்தில் கீர்த்தி யடைந்திருக்கிறன். இவர் வந்தவுடனே ஸம்பாஷணை கொஞ்சம் மாறுபட்டது. ஏதேதோ விஷயங்கள் பேசிக்கொண்டிருந்தார்கள். அப்போது கோவில் பணிவிடைக்காரன் ஒருவன் கையிலே மஞ்சள் காயிதங்கள் கொண்டு வந்து ஆளுக்கொன்று வீதம் கொடுத்தான். அதென்ன காயித மென்றால், அன்று மாலை கோயிலில் நடக்கப் போகிற பெரிய பாளையம் மடாதிபதியின் உபந்நியாசத்துக்கு எல்லாரும் வந்து "சிறப்பிக்க வேண்டும்" என்ற அழைப்புக் காயிதம்.

அந்தக் காயிதத்தின் மகுடத்தில் ஒரு விருத்தம் எழுதி யிருந்தது. அவ்விருத்தத்தின் பின்னிரண்டடிகள் பின் வருமாறு:—

"தோகை மேல் உலவும் கந்தன்
சுடர்க் கரத்திருக்கும் வெற்றி
வாகையே சுமக்கும் வேலை
வணங்குவ தெமக்கு வேலை."

(மயிலின் மேலே உலவுகின்ற கந்தனுடைய கையில் வெற்றிமாலை சூடி நிற்கும் வேலாயுதத்தை வணங்குவதே நம்முடைய தொழில்.)

இவ்விரண்டு பாதங்களையும் படித்துப் பார்த்து விட்டு பிரமராய அய்யர் "நல்ல பாட்டு" என்றார். வீரப்ப முதலியார் பின் வருமாறு ப்ரஸங்கம் செய்ய லானார் :—

"கேளும் காளிதாஸரே, பிரமராய அய்யரே, நீரும் கேளும். தெய்வத்தைப் போற்றுவதே நம்முடைய வேலை யென்றும், அதைத் தவிர நமக்கு வேறு எவ்விதமான தொழிலும் கிடையாதென்றும் சொல்லிக் கொண்டிருப்போர் சோம்பரில் முழுகிப் போய்த் தம்முடைய வாணுளையும் வீணுகச் செய்து பிறரையும் கெடுக்கிறார்கள், செய்கை பிரதானம். செய்கையை விடுதல் பாவம். கடவுள் நமக்கு ஐம்புலன்களையும், அறிவையும் கொடுத்து எப்போதும் உழைப்பினலேயே தனக்கும் பிறர்க்கும் நன்மை தேடும்படி ஏற்பாடு செய்திருக்கிறார். அதற்கு மாறுகச் செய்கை யற்றுச் சும்மா இருப்பதை இன்பமென்று நினைப்போர் நாசத்தை அடைவார்கள். தெய்வம், கிய்வம், எல்லாம் வீண் பேச்சு. வேலை செய்தவன் பிழைப்பான்; வேலை செய்யாதவன் செத்துப் போவான்" என்றார். அப்போது பிரமராய அய்யர் :—

சோம்பேரி தெய்வத்தின் பெயரை ஒரு முகாந்தரமாகக் காட்டித் தன்னுடைய சோம்பரை ஆதரிப்பதாகச் சொன்னீர்கள், இருக்கலாம். அதினலே தெய்வத்தை நம்பிச் செய்கைப் பொறுப்பில்லாமல் இருப்போரெல்லாம் சோம்பேறிகளென்று நினைப்பது குற்றம். உண்மை அப்படியில்லை. இயற்கையின் வலிமை

யிலே இயற்கையின் கொள்கைப்படி, இயற்கையே மனிதரின் செயல்களை யெல்லாம் நடத்துகிருன். இது மறுக்க முடியாத ஸத்யம். இதை உணர்ந்தவன் ஞானி; இந்த ஞான முண்டாகித் தான் செய்யும் செய்கைகளுக்குத் தான் பொறுப்பில்லை யென்றும் தெய்வமே பொறுப்பென்றும் தெரிந்து கொண்டு நடக்கும் பெரியோர் சோம்பரிலே முழுகிக் கிடப்ப தில்லை. அவர்கள் அக்நியைப் போலே தொழில் செய் வார்கள். எப்போதும் ஆனந்தத்திலே இருப்பதனுல் அவர்களிடம் அற்புதமான சக்திகள் பிறக்கும். அந்த சக்திகளைக் கொண்டு அவர்கள் செய்யும் தொழில் உலகத்தாருக்குக் கணக்கிட முடியாத நன்மைகளைச் செய்யும். பகவான் கீதையிலே என்ன சொல்லுகிருர்? தெய்வமே செய்கிறது. தான் செய்வதாக நினைப்பவன் மூடன். ஆதலாலே முன் பின் யோசனை செய்யாமல் அப்போதப்போது நேரிடும் தர்மத்தை அனல் போலே செய்யவேண்டும். ஆதலால், ஹே அர்ஜுனு!

“ வில்லினை யெடடா—கையில்
வில்லினை யெடடா—அந்தப்
புல்லியர் கூட்டத்தை பூழ்தி செய்திடடா!
வாடி நில்லாதே—மனம்
வாடி நில்லாதே—வெறும்
பேடியர் ஞானப் பிதற்றல் சொல்லாதே!
ஒன்றுள துண்மை—என்றும்
ஒன்றுள துண்மை—அந்தக்
கொன்றி டொண்ணுது குறைத்தலொண்ணுது!

துன்பமுமில்லை—கொடுந்
துன்பமுமில்லை—அதில்
இன்பமுமில்லை பிறப்பிறப் பில்லை!

படைகளுந் தீண்டா—அதைப்
படைகளுந் தீண்டா—அனல்
சுடவு மொண்ணுது புனல் நனையாது!

செய்தலுன் கடனே—அறம்
செய்தலுன் கடனே—அதில்
எய்துறும் விளைவினில் எண்ணம் வைக்காதே
வில்லினை யெடடா"

என்று பகவான் சொன்னுர்.

ஆதலால் பக்தனுக்குத் தொழிலிலே பொறுப் பில்லை, ஆனல் தொழிலுண்டு. அது தெய்வத்தாலே கொடுக்கப்படும். உண்மையான தெய்வபக்தி யுடையவர்கள் செய்யும் செய்கையினுல் கிருதயுகம் விளையும். அவர்கள் எவ்விதமான செய்கையும் தமக்கு வேண்டிய தில்லை யென்று உதறி விட்டவுடனே பகவான் அவர்களைக் கருவியாகக் கொண்டு மஹத்தான செய்கைகளைச் செய்வான்." என்று பிரமராய அய்யர் சொன்ஞர்.

அப்போது வீரப்ப முதலியார் என்னை நோக்கி "உமது கருத்தென்ன?" என்று கேட்டார். நான் "எனக்கெனச் செயல் யாதொன்று மில்லை" என்ற முன்ஞேர் பாடலை எடுத்துச் சொல்லி சக்தி நாமத்தைக் கூறி, "நான் செய்கை யற்று நிற்கின்றேன். பராசக்தி என் மூலமாக எது செய்வித்தாலும்

அவளுடைய இஷ்டமே யன்றி என்னுடைய இஷ்ட மில்லை" என்றேன்.

இந்த சமயத்தில் தண்டபாணிக்குப் பூஜை நடந்து தீபாராதனையாய்க் கொண்டிருப்பதாக ஒரு வன் வந்து சொன்னான். எல்லாரும் எழுந்து ஸேவிக் கப் புறப்பட்டோம். சபை கலைந்தது.

---

## சும்மா.

## I

நேற்று ஸாயங்காலம் நான் தனியாக மூன்றாவது மெத்தையில் ஏறி உட்கார்ந்திருந்தேன். நான் இருக் கும் வீட்டில் இரண்டாவது மெத்தையிலிருந்து மூன் றாம் மெத்தைக்கு ஏணி கிடையாது. குடக்கூலி வீடு. அந்த வீட்டுச் செட்டியாரிடம் படி (ஏணி) கட்டும்படி எத்தனையோ தரம் சொன்னேன். அவர் இன்றைக் காகட்டும், நாளைக்காகட்டும் என்று நாளைக் கடத்திக் கொண்டு வருகிறார். ஆதலால் மூன்றும் மெத்தைக்கு ஏறிப்போவது மிகவும் சிரமம். சிறிய கைச்சுவர் மேல் ஏறிக்கொண்டு அங்கிருந்து ஒரு ஆள் உயரம் உந்த வேண்டும். மூன்றுங் கட்டின் சுவரோரத்தைக் கையால் பிடித்துக்கொண்டு கைச்சுவர் மேலிருந்து உந்தும்போது கொஞ்சம் கை வழுகிவிட்டால் ஒன் றரை ஆள் உயரம் கீழே விழுந்து மேலே காயம்படும். நான் தனிமையை விரும்புவோன். ஆகலால், சிரமப் பட்டேறி அடிக்கடி மூன்றுங் கட்டிலே போய் உட் கார்ந்திருப்பது வழக்கம். இந்த மார்கழி மாதத்தில்

குளிர் அதிகமானபடியால் வெயில் காய்வதற்கும் அதி ஹிதமாம். இங்ஙனம் நேற்று மாலை நான் வெயில் காய்ந்து கொண்டிருக்கையிலே குள்ளச் சாமியாரும், வேணு முதலியும் வந்து சேர்ந்தார்கள். அவர்கள் இரண்டாங்கட்டு வெளி முற்றத்தில் வந்து நின்று கொண்டு என்னைக் கைதட்டிக் கூப்பிட்டார்கள். நான் இறங்கிவரும் பொருட்டாக வேஷ்டியை இடுப்பில் வரிந்து கட்டினேன். அதற்குள் குள்ளச் சாமியார் என்னை நோக்கி "நீ அங்கேயே இரு, நாங்கள் வருகி றோம்" என்று சொன்னார்.

இந்தக் குளளச் சாமியாரைப்பற்றி முன்னொரு முறை எழுதியிருப்பது ஞாபகமிருக்கலாம். இவர் கலியுக ஜடபரதர், மஹா ஞானி, ஸர்வஜீவ தயாபரன், ராஜயோகத்தால் மூச்சைக் கட்டி ஆளுகிற மஹான், இவர் பார்ப்பதற்குப் பிச்சைக்காரன் போலே கந் தையை உடுத்திக் கொண்டு தெருக்களில் உலாவுவார். இவருடைய மஹிமை ஸ்திரீகளுக்கும் குழந்தைகளுக் கும் மாத்திரம் எப்படியோ தெரிந்திருக்கிறது. தெரு வில் இவர் நடந்து செல்லுகையில் ஸ்திரீகள் பார்த்து இவரைக் கை யெடுத்துக் கும்பிடுவார்கள். குழந்தைக ளெல்லாம் இவரைக் கண்டவுடன் தாயை நோக்கி ஓடுவது போலே ஓடி இவருடைய முழங்காலை மோர்ந்து பார்க்கும். இவர் பேதைச் சிரிப்புச் சிரித்துக் குழந்தைகளை உச்சி மோர்ந்து பார்ப்பார் ஆனால் ஸாமான்னிய ஜனங்களுக்கு அவருடைய உண் மையான மஹிமை தெரியமாட்டாது. கண்மூடி

திறக்கு முன்னுகவே கைச்சுவர் மேல் ஒரு பாய்ச்சல் பாய்ந்து அங்கிருந்து மேல் மெத்தைக்கு இரண்டாம் பாய்ச்சலில் வந்து விட்டார். இவரைப் பார்த்து இவர் போலே தானும் செய்ய வேண்டுமென்ற எண்ணங் கொண்டவனுய் வேணு முதலி ஜாக்கிரதையாக ஏருமல் தானும் பாய்ந்தான். கைப்பிடிச் சுவர்மேல் சரியாகப் பாய்ந்து விட்டான். அங்கிருந்து மேல் மெத்தைக்குப் பாய்கையில் எப்படியோ இடறித் தொப்பென்று கீழே விழுந்தான். இடுப்பிலேயும் முழங்காலிலேயும் பலமான அடி. ஊமைக் காயம். என் போன்றவர்களுக்கு அப்படி அடி பட்டால் எட்டு நாள் எழுந்திருக்க முடியாது. ஆனுல் வேணு முதலி நல்ல தடியன். "கொட்டாப்புளி ஆஸாமி." ஆதலால் சில நிமிஷங்களுக்குள்ளே ஒருவாறு நோவைப் பொறுத்துக்கொண்டு மறுபடி ஏறத் தொடங்கினுன்.

குள்ளச் சாமியார் அப்போது என்னை நோக்கி:—நாமும் கீழே இறங்கிப் போகலாம் என்று சொன்னுர். சரி யென்று நாங்கள் வேணு முதலியை ஏறவேண்டா மென்று தடுத்து விட்டுக் கீழே இறங்கி வந்தோம். இரண்டாங் கட்டு வெளி முற்றத்திலேயே மூன்று நாற்காலிகள் கொண்டு போட்டு உட்கார்ந்து கொண் டோம்.

அப்போது வேணு முதலி என்னை நோக்கி "அங்கே தனியாக ஹனுமாரைப் போலே போய்த் தொத்திக்கொண்டு என்ன செய்தீர்?" என்று கேட் டான்.

“சும்மா தான் இருந்தேன்” என்றேன்.

வந்துவிட்டதையா வேணு முதலிக்குப் பெரிய கோபம். பெரிய கூச்சல் தொடங்கி விட்டான்:—

“சும்மா, சும்மா, சும்மா, சும்மா இருந்து சும்மா இருந்து தான் ஹிந்து தேசம் பாழாய்க் குட்டி சுவராய்ப் போய்விட்டதே? இன்னும் என்ன சும்மா? எவனைப் பார்த்தாலும் இந்த நாட்டில் சும்மா தான் இருக்கிறான். லக்ஷ லக்ஷ லக்ஷமாகப் பரதேசி, பண்டாரம், ஸந்யாசி, சாமியார் என்று கூட்டம் கூட்டமாகச் சோம்பேறிப் பயல்கள். கஞ்சா அடிக்கிறதும், பிச்சை வாங்கித் தின்கிறதும், சும்மா உலாவுகிறதும் தான் அந்தப் பயல்களுக்கு வேலை. இரண்டு வேளை ஆஹாரம் ஒருவனுக்கு இருந்தால், அவன் தொழில் செய்யும் வழக்கம் இந்த தேசத்திலே கிடையாது. ஜமீந்தார், மிட்டாதார், பண்ணையார், மிராசுதார், இனாம்தார், ஜாகீர்தார், மடாதிபதிகள், ராஜாக்கள் எல்லாருக்கும் சும்மா இருப்பது தான் வேலை. சோம்பேறிப் பயல்களுடைய தேசம்” என்று பலவிதமாக வேணு முதலி ஜமாய்க்கிற சமயத்தில் குள்ளச்சாமி மேற்கு முகமாக ஸூர்யனை நோக்கித் திரும்பிக் கொண்டு: “சும்மா இருப்பதுவே சுட்டற்ற பூரணம் என்றெம்மால் அறிதற் கெளிதோ பராபரமே” என்ற தாயுமானவர் கண்ணியைப் பாடினார். வேணு முதலி அவரை நோக்கி:—“சாமியாரே, நீர் ஏதோ ராஜயோகி என்று காளிதாஸர் சொல்லக் கேள்விப்பட்டேன். உம்முடன் நான் பேசவில்லை, காளிதாஸரிடம் நான்

சொல்லுகிறேன். நீர் ஸந்யாஸி யென்று சொல்லி ஜன்மத்தையே மரத்தின் ஜன்மம் போலே யாதொரு பயனுமில்லாமல் வீணாகச் செலவிடும் கூட்டத்தைச் சேர்ந்தவர். மரமாவது பிறருக்குப் பழங்கள் கொடுக்கும், இலை கொடுக்கும், விறகு கொடுக்கும். உங்களை மரத்துக் கொப்பாகச் சொல்லியது பிழை. உங்களாலே பிறருக்கு நஷ்டம்; மரத்தால் பிறருக்கு எத்தனையோ லாபம்" என்றான். இங்ஙனம் வேணு முதலி சொல்லிக்கொண்டிருக்கும் போதே, குள்ளச் சாமியார் :—

"சும்மா இருக்கச் சுகம் சுகமென்று சுருதியெல்லாம்
அம்மா நிரந்தரம் சொல்லவுங் கேட்டு அறிவின்றியே
பெம்மான் மவுனி மொழியையுந் தப்பி என் பேதமையால்
வெம்மாயக் காட்டில் அலைந்தேன் அந்தோ என் விதி
[வசமே!"

என்று தாயுமானவருடைய பாட்டொன்றைச் சொன்னார்.

வேணு முதலிக்குக் கீழே விழுந்த நோவு பொறுக்க முடியவில்லை. அந்தக் கோபம் மனதில் பொங்குகிறது. அத்துடன் சாமியார் சிரித்துச் சிரித்துப் பாட்டு சொல்வதைக் கேட்டு அதிகக் கோபம் பொங்கிவிட்டது. வேணு முதலி சொல்லுகிறான் :— "ஓய் சாமியாரே, நீர் பழைய காலத்து மனுஷ்யன்; உம்முடன் நான் தர்க்கம் செய்ய விரும்பவில்லை. என்னுடைய ஸாமர்த்தியம் உமக்குத் தெரியாது. நான் பன்னிரண்டு பாஷைகளிலே தேர்ச்சியுடையவன்.

உமக்குத் தமிழ் மாத்திரம் தெரியும். நான் இந்த யுத்தம் முடிந்தவுடன் அமெரிக்காவுக்கும் ஐரோப்பாவுக்கும் போய் அங்கெல்லாம் இந்த மதத்தை ஸ்தாபனம் செய்யப் போகிறேன். நீர் தெருவிலே பிச்சை வாங்கித் தின்று திண்ணை தூங்குகிற பேர்வழி. உமக்கும் எனக்கும் பேச்சில்லை. தேசத்துக்காகப் பாடுபடுவதாக 'ஹம்பக்' பண்ணிக்கொண்டிருக்கிற காளிதாஸர்—இந்த விதமான சோம்பேறிச் சாமியார்களுடன் கூடிப் பொழுது கழிப்பது எனக்கு மிகுந்த ஆச்சர்யத்தை விளைவிக்கிறது. உங்களிடமிருந்து தான் அவர் இந்தச் சும்மா இருக்கும் தொழில் கற்றுக் கொண்டார் போலும்!'' என்று வேணு முதலி இலக்கணப் பிரயோகங்களுடன் பேசத் தொடங்கினன்.

மறுபடி சாமியார் :—

"சும்மா இருக்கச் சுகம் உதய மாகுமே
இம்மாயா யோகம் இனி எனடா—தம்மறிவின்
சுட்டாலே யாகுமோ சொல்ல வேண்டாம் கர்ம
நிஷ்டா சிறு பிள்ளாய் நீ."

என்ற தாயுமானவருடைய வெண்பாவைப் பாடினர்.

அப்போது வேணு முதலி என்னை நோக்கி "ஏனையா! காளிதாஸரே, இந்தச் சாமியார் உமக்கு எத்தனை நாட் பழக்கம்?" என்று கேட்டான்.

நான் ஜவாப் சொல்லாமல் "சும்மா" இருந்து விட்டேன். அப்பொழுது குள்ளச்சாமியார் சொல்லத் தொடங்கினர் :—

அத்துடன் இந்தக் கதையே வெகு நீளம். அது சுருக்கிச் சொன்னாலும் இரண்டு பாகங்களுக்குள்ளே தான் சொல்ல முடியும். நாலைந்து பாகம் ஆனாலும் ஆகக்கூடும்.

அவ்வளவு நீண்ட கதையை இத்தனை காயிதப் பஞ்சமான காலத்தில் ஏன் சொல்லப் புறப்பட்டீர் என்றாலோ அது போகப்போக ஆச்சர்யமான கதை, அற்புதமான கதை! இதைப் போலே கதை நான் இதுவரை எழுதினது கிடையாது. நான் வேறு புஸ்தகங்களிலே படித்ததும் கிடையாது. நீங்கள் கேட்டால் ஆச்சர்யப்படுவீர்கள். எழுந்து கூ கூ கூ என்று கூவி ஆடிப்பாடிக் குதிக்கத் தொடங்குவீர்கள். நான் கேட்கத் தகாத அற்புதத்தைக் கேட்டேன், காணத் தகாத அற்புதத்தைக் கண்டேன். ஆதலால் உலகத்திலே இதற்கு முன் எழுதப்பட்ட கதைகள் எல்லாவற்றிலும் அற்புதத்திலும் அற்புதமான கதையை உங்களுக்குச் சொல்லப் புறப்பட்டேன். ஆனால் இந்த வ்யாஸம் நீண்டு போய் விட்டதே; அடுத்த பாகத்தில் தானே சொல்ல முடியும். நான் வாக்குத் தவறமாட்டேன். இரண்டாம் பாகம் சீக்கிரம் உங்களுக்குச் சொல்லுகிறேன். கொஞ்சம் பொறுமையுடன் இருங்கள்.

சும்மா முதற் பாகம் முற்றிற்று.

## சும்மா




## II

அப்போது குள்ளச் சாமியார் சொல்லுகிறார்:—"கேள் தம்பி, நான் சும்மா இருக்கும் கக்ஷியைச் சேர்ந்தவன். நீ சொல்லியபடி ஸந்யாஸிகள் சும்மா இருந்ததினால் இந்தத் தேசம் கெட்டுப் போகவில்லை. அதர்மம் செய்ததினால் நாடு சீர் கெட்டது. ஸந்யாஸிகள் மாத்திரம் அதர்மம் செய்யவில்லை. இல்லறத்தார் அதர்மம் தொடங்கியது துறவறத்தாரையும் சூழ்ந்தது. உண்மையான யோகிகள் இன்னும் இந்த தேசத்தில் இருக்கிறார்கள். அவர்களாலே தான் இந்த தேசம் ஸர்வ நாசமடைந்து போகாமல் இன்னும் தப்பிப் பிழைத்திருக்கிறது. இப்போது பூமண்டலம் குலுங்கிப் பல ராஜ்யங்களும் சரிந்து கொண்டிருக்கையிலே ஹிந்து தேசம் ஊர்த்வ முகமாக மேன்மை நிலையை நோக்கிச் செல்லுகிறது. தானும் பிழைத்தது. உலகத்தையும் உஜ்ஜீவிக்கும்படி செய்யலாம் என்ற தைரியம் ஹிந்து தேசத்தின் மனதில் உண்டாயிருக்கிறது. இதற்கு முன் இப்படி எத்தனையோ ப்ரளயங்களில் இருந்து தப்பிற்று. சில தினங்களுக்கு முன்பு ஜகதீச சந்திர வஸு கல்கத்தாவில் தம்முடைய நவீன சாஸ்த்ராலயத்தை ப்ரதிஷ்டை செய்யும்போது என்ன சொன்னார்—வாசித்துப் பார்த்தாயா? "பாபிலோனிலும், நீல நதிக் கரையிலும் இருந்த நாகரீகங்கள் செத்து மறு ஜன்ம மடைந்துவிட்டன. ஹிந்துஸ்தானம் அன்று போலவே இன்றும் உயிரோடிருக்கிறது.

ஏனென்றால் எல்லா தர்மங்களிலும் பெரிய தர்மமாகிய ஆத்ம பரித்யாகம் இந்த தேசத்தில் சாகாதபடி இன்னும் சிலரால் அனுஷ்டிக்கப்பட்டு வருகிறது" என்று ஜகதீச சந்திர வஸு சொன்னார்.

இங்ஙனம் குள்ளச் சாமியார் சொல்லி வருகையில் வேணு முதலி "சாமியாரே! உமக்கு இங்கிலீஷ் தெரியுமா? நீர் பத்திரிகை வேறே வாசிக்கிறீரா? ஜகதீச சந்திர வஸு பேசிய விஷயம் உமக்கெப்படித் தெரிந்தது?" என்று கேட்டான். அப்போது குள்ளச் சாமியார் சொல்லுகிறார்:—"அநாவசியக் கேள்விகள் கேட்காதே. நான் சொல்வதைக் கவனி: ஹிந்து தேசத்தினுடைய ஜீவனை யுக யுகாந்தரங்களாக அழியாதபடி பாதுகாத்து வருவோர் அந்த யோகிகளே. கடோரமான கலியில் உலகம் தலை கீழாகக் கவிழ்ந்து போகும் ஸமயத்தில் கூட ஹிந்துஸ்தானம் அழியாமல் தானும் பிழைத்து மற்றவர்களையும் காக்கக்கூடிய ஜீவ சக்தி இந்நாட்டிற்கு இருப்பது அந்த யோகிகளின் தபோபலத்தாலன்றி வேறில்லை. ஹா, ஹா, ஹா, ஹா! பலவிதமான லேஹ்யங்களைத் தின்று தலைக்கு நூறு, நூற்றைம்பது பெண்டாட்டிகளை வைத்துக் கொண்டு தடுமாறி, நாள் தவறாமல் ஒருவருக்கொருவர் நாய்களைப் போலே அடித்துக்கொண்டு, ஹிமயமலைக்கு வட புறத்திலிருந்து அன்னியர் வந்தவுடனே எல்லாரும் ஈரச் சுவர் போலே இடிந்து விழுந்து ராஜ்யத்தை அன்னியர் வசமாகத் தந்த உங்கள் ராஜாக்களுடைய வலிமையினால் உங்கள் தேசம் பிழைத்திருக்கிறதென்று

நினைக்கிறாயா? போது விடிந்தால் எவன் செத்துப் போவான், ஸபண்டீகரணம், பிராமணர்க்கு போஜனங்கள் பண்ணலாம் என்று சுற்றிக்கொண்டு, வேத மந்திரங்களைப் பொருள் தெரியாமல் திரும்பத் திரும்பச் சொல்லிக்கொண்டிருந்த உங்கள் பிராமணர்களால் இந்த தேசம் சாகாத வரம் பெற்று வாழ்கிறதென்று நினைக்கிறாயா? உங்கள் வைசியருடைய லோபத் தன்மையால் இந்த நாடு அமரத் தன்மை கொண்டதா? சூத்திரருடைய மௌட்யத்தாலா? பஞ்சமருடைய நிலைமையாலா? எதால் ஹிந்துஸ்தானத்துக்கு அமரத் தன்மை கிடைத்ததென்று நீ நினைக்கிறாய்?

“அடா, வேணு முதலி, கவனி. நீ யுத்தம் முடிந்த பிறகு அமெரிக்காவுக்கும், ஐரோப்பாவுக்கும் போய் ஹிந்து தர்மத்தை நிலை நாட்டப் போவதாகச் சொல்லுகிறாய். நீ ஹிந்துஸ்தானத்து மஹா யோகிகளின் மஹிமை தெரியாமல் ஹிந்து மதத்தை யெப்படி நிலை நிறுத்தப் போகிறாய்,—அதை நினைக்கும்போதே எனக்கு நகைப்புண்டாகிறது.

“அடா, வேணு முதலி, கேள். ஹிந்துஸ்தானத்து மஹா யோகிகளின் மஹிமையால் இந்த தேசம் இன்னும் பிழைத்திருக்கிறது. இனி இந்த மண்ணுலகம் உள்ள வரை பிழைத்திருக்கவும் செய்யும். அடா வேணு முதலி, பார்! பார்! பார்!”

இங்ஙனம் குள்ளச் சாமி சொன்னவுடன் நானும் வேணு முதலியும் அவரை உற்றுப் பார்த்தோம்.

குள்ளச் சாமி நெடிய சாமி ஆய்விட்டார்.

நாலே முக்கால் அடிபோல் தோன்றிய குள்ளச் சாமி ஏழே முக்கால் அடி உயரம் வளர்ந்து விட்டார்.

ஒரு கண்ணைப் பார்த்தால் சூரியனைப் போல் இருந்தது. மற்றொரு கண்ணைப் பார்த்தால் சந்திரனைப் போல் இருந்தது. முகத்தின் வலப்புறம் பார்த்தால் சிவன்போல் இருந்தது. இடப்புறம் பார்த்தால் பார்வதியைப் போலவே இருந்தது. குனிந்தால் பிள்ளையார் போலிருந்தது. நிமிர்ந்து பார்க்கும்போது விஷ்ணுவின் முகத்தைப் போலே தோன்றிற்று. அப்போது குள்ளச் சாமி சொல்லுகிறார் :—

"அடா, வேணு முதலி, கேள். நான் ஹிந்துஸ்தானத்து யோகிகளுக்கெல்லாம் தலைவன். நான் ரிஷிகளுக்குள்ளே முதலாவது ரிஷி. நான் தேவர்களுக்கெல்லாம் அதிபதி. நானே பிரமா, நானே விஷ்ணு, நானே சிவன், நான் ஹிந்துஸ்தானத்தை அழியாமல் காப்பாற்றுவேன், நான் இந்த பூமண்டலத்தில் தர்மத்தை நிலை நிறுத்துவேன்.

"நான் கிருதயுகத்தை ஸ்தாபனம் செய்வேன். நானே பரம புருஷன். இதற்கு முன் ஆசார்யர்கள் உங்களிடம் என்ன சொன்னார்கள்? எல்லா உயிரும் ஒன்று. ஆதலால் காக்கை, புழு முதலிய ஜந்துக்களிடம் குரூரமில்லாமல் கருணை பாராட்டுங்கள் என்றனர்.

"அடா, வேணு முதலி, கவனி.

"சைவாசார்யர் வைஷ்ணவத்தை விலக்கினர் வைஷ்ணவாசார்யர் சைவத்தை விலக்கினர்.

“நான் ஒன்று செய்வேன்.

“காக்கையைக் கண்டால் இரக்கப்படாதே, கும்பிடு. கைகூப்பி நமஸ்காரம் பண்ணு! பூச்சியைக் கும்பிடு! மண்ணையும் காற்றையும் விழுந்து கும்பிடு! என்று நான் சொல்லுகிறேன்.

“நான் வேதத்திலே முன் சொன்ன வாக்கை இப்போது அனுபவத்திலே செய்து காட்டப் போகிறேன். புராணங்களை யெல்லாம் விழுங்கி ஒன்றாக நாட்டப் போகிறேன். ஹிந்து தர்மத்தைக் கூட்டப் போகிறேன். அடா, வேறு முதலி கேள், மண்ணும், காற்றும், ஸூர்யனும், சந்திரனும், உன்னையும் என்னையும் சூழ்ந்து நிற்கும் உயிர்களும், நீயும் நானும் தெய்வமென்று வேதம் சொல்லிற்று. இவை தான் தெய்வம். இதைத் தவிர வேறு தெய்வமில்லை. நம்முன்னே காண்பது நாராயணன். இதை நம்முள்ளே நாட்டி இதை வணங்கி இதன் தொழுகைக் கனியில் மூழ்கி, அங்கு மானுடன் தன்னை முழுது மறந்து விடுக.

“அப்போது தன்னிடத்து நாராயணன் நிற்பான். இந்த வழியை நான் தழுவியபடியால் மனுஷ்யத் தன்மை நீங்கி அமரத்தன்மை பெற்றேன். ஆதலால் நான் தேவனாய்விட்டேன். இவைதான் தெய்வம். இதைத் தவிர வேறு தெய்வமில்லை. தேவர்களுக்குள்ளே நான் அதிபதி, என் பெயர் விஷ்ணு; நானே சிவன் மகன் குமாரன், நானே கணபதி, நான் அல்லா, யேஹோவான், நானே பரிசுத்த ஆவி, நானே யேசு கிருஸ்து, நானே கந்தர்வன், நானே அஸுரன், நான் புருஷோத்தமன், நானே ஸமஸ்த ஜீவராசிகளும்.

“ நானே பஞ்ச பூதம்! அஹம் ஸத்! நான் கிருத யுகத்தை ஆக்ஞாபிக்கிறேன்! ஆதலால் கிருதயுகம் வரு கிறது. எந்த ஜந்துவும், வேறு எந்த ஜந்துவையும் ஹிம்சை பண்ணுமலும் எல்லா ஜந்துக்களும் மற்றெல்லா ஜந்துக்களையும் தேவதா ரூபமாகக் கண்டு வணங்கும்படிக்கும் விதியுண்டானுல் அதுதான் கிருத யுகம். அதை நான் செய்வேன். அடா வேணு முதலி! நான் உன் முன்னே நிற்கிறேன், என்னை அறி” என்று குள்ளச்சாமி சொன்னர். நான் அத்தனைக்குள்ளே மூர்ச்சை போட்டு விழுந்து விட்டேன்.

சுமார் அரை மணி நேரத்துக்குப் பின்பு எனக்கு மறுபடி பிரக்ஞை ஏற்பட்டது. அப்போது பார்க்கிறேன். வேணு முதலி என் பக்கத்தில் மூர்ச்சை போட்டுக் கிடக்கிருன். பிறகு அவனுக்குச் சிகித்ஸை செய்து நான் எழுப்பினேன்.

குள்ளச் சாமியார் எங்கே யென்று வேணு முதலி என் பத்தினியிடம் கேட்டான்.

அவள் சொன்ஞள்:—“குள்ளச்சாமி இப்படித் தான் கீழே இறங்கிவந்தார். கொஞ்சம் பாயசமும் ஒரு வாழைப்பழமும் கொடுத்தேன். வாங்கித் தின்ருர். குழந்தைகளுக்கும் எனக்கும் விபூதி பூசி வாழ்த்தி விட்டுப் போனர். ‘நீங்கள் மெத்தையிலே என்ன பேசிக் கொண்டிருந்தீர்கள்?’ என்று கேட்டேன். அதற்கு ‘இரட்டை பாஷை யென்ருல் அர்த்த மென்ன? என்பதைப்பற்றி அந்த வேணு முதலி மடையன், தர்க்கம் பண்ணுகிருன்’ என்று சொல்லிச் சிரித்து விட்டுப் போனர்” என்று சொன்ஞள்.

---

# காற்று.

## I

### தேவ தரிசனம்.

மணல், மணல், மணல். பாலைவனம். பல யோஜனை தூரம் ஒரே மட்டமாக நான்கு திசையிலும் மணல்.

மாலை நேரம்.

அவ் வனத்தின் வழியே ஒட்டகங்களின் மீதேறி ஒரு வியாபாரக் கூட்டத்தார் போகிறார்கள்.

வாயு, சண்டனாகி வந்துவிட்டான்.

பாலை வனத்து மணல்களெல்லாம் இடை வானத்திலே சுழல்கின்றன. ஒரு க்ஷணம் யமவாதனை; வியாபாரக் கூட்டம் முழுதும் மணலிலே அழிந்து போகிறது.

வாயு கொடியவன். அவன் ருத்ரன். அவனுடைய ஓசை அச்சந் தருவது.

அவன் செயல்கள் கொடியன. அவனை வாழ்த்துகின்றோம்.

வீமனும் அனுமானும், காற்றின் மக்கள் என்று புராணங்கள் கூறும்.

உயிருடையன வெல்லாம் காற்றின் மக்களே என்பது வேதம்.

உயிர்தான் காற்று.

பூமித் தாய் உயிரோடிருக்கிறாள். அவளுடைய மூச்சுத்தான் பூமிக் காற்று.

காற்றே உயிர். உயிர்களை அழிப்பவனும் அவனே.

காற்றே உயிர். எனவே, உயிர்கள் அழிவதில்லை. சிற்றுயிர் பேருயிரோடு சேர்கிறது.

மரண மில்லை.

அகில வுலகமும் உயிர் நிலையே.

தோன்றுதல், வளர்தல், மாறுதல், மறைதல் எல்லாம் உயிர்ச் செயல்.

உயிரை வாழ்த்துகின்றோம்.

காற்றே, வா.

மகரந்தத் தூளைச் சுமந்து கொண்டு, மனதை மயக்கும் இனிய வாசனையுடன் வா.

இலைகளின் மீதும் நீர் நிலைகளின் மீதும் உராய்ந்து மிகுந்த ப்ராண-ரஸத்தை எங்களுக்குக் கொண்டு வந்து கொடு.

காற்றே வா.

எமது உயிர் நெருப்பு நீடித்து நின்று நல்ல ஒளி தரும் வண்ணம், நன்றாக வீசு.

சக்தி குறைந்து போய் அதனை அவித்து விடாதே.

பேய் போலே வீசி அதை மடித்து விடாதே.

மெதுவாக, நல்ல லயத்துடன் நெடுங்காலம் நின்று வீசிக்கொண்டிரு.

உனக்குப் பாட்டுக்கள் பாடுகிறோம்.

உன்னை வாழ்த்துகிறோம்.

சிற்றெறும்பைப் பார். எத்தனை சிறியது! அதற்குள்ளே கை, கால், வாய், வயிறு எல்லா அவயவங்களும் கணக்காக வைத்திருக்கிறது.

யார் வைத்தனர்? மஹா சக்தி.

அந்த உறுப்புக்களெல்லாம் நேராகவே தொழில் செய்கின்றன.

எறும்பு உண்ணுகிறது, உறங்குகிறது, மணம் புரிகின்றது, குழந்தை பெறுகிறது, ஓடுகிறது, தேடுகிறது, போர் செய்கிறது, நாடு காக்கிறது.

இதற்கெல்லாம் காற்றுதான் ஆதாரம்.

மகா சக்தி காற்றைக் கொண்டுதான் உயிர் விளையாட்டு விளையாடுகிறாள்.

காற்றைப் பாடுகிறோம்.

அஃதே அறிவிலே துணிவாக நிற்பது.

உள்ளத்திலே சலனமாவது.

உயிரில் உயிர், உடம்பில் வலிமை.

வெளி யுலகத்தில் அதன் செய்கையை அறியாதார் யார்? அறிவார் யார்? காற்றுத் தேவன் வாழ்க.

மழைக்காலம். மாலை நேரம். குளிர்ந்த காற்று வருகிறது.

நோயாளி உடம்பை மூடிக்கொள்ளுகிறான், பயனில்லை.

காற்றுக்கு அஞ்சி உலகத்திலே இன்பத்துடன் வாழ முடியாது.

உயிர் காற்றின் அதற் கஞ்சி வாழ்வதுண்டோ? காற்று நம்மீது வீசுக.

அது நம்மை நோயின்றிக் காத்திடுக.

மாலைக் காற்று நல்லது. கடற் காற்று மருந்து. ஊர்க் காற்றை மனிதர் பகைவனாக்கி விடுகின்றனர்.

அவர்கள் காற்றுத் தெய்வத்தை நேரே வழி படுவதில்லை.

அதனால், காற்றுத் தேவன் சினமெய்தி அவர்களை அழிக்கின்றான்.

காற்றுத் தேவனை வணங்குவோம்.

அவன் வரும் வழியிலே சேறு தங்கலாகாது. நாற்றம் இருக்கலாகாது. அழுகின பண்டங்கள் போடலாகாது. புழுதி படிந்திருக்கலாகாது.

எவ்விதமான அசுத்தமும் கூடாது.

காற்று வருகிறான்.

அவன் வரும் வழியை நன்றாகத் துடைத்து நல்ல நீர் தெளித்து வைத்திடுவோம்.

அவன் வரும் வழியிலே சோலைகளும் பூந்தோட்டங்களும் செய்து வைப்போம்.

அவன் வழியிலே கற்பூரம் முதலிய நறும் பொருள்களைக் கொளுத்தி வைப்போம்.

அவன் நல்ல மருந்தாகி வருக.
அவன் நமக்கு உயிராகி வருக.
அமுதமாகி வருக.
காற்றை வழிபடுகின்றோம்.
அவன் சக்தி குமாரன்.
மஹாராணியின் மைந்தன்.
அவனுக்கு நல்வரவு கூறுகின்றோம்.
அவன் வாழ்க.

## காற்று.

## II

ஒரு வீட்டு மேடையிலே ஒரு பந்தல், ஓலைப் பந்தல், தென்னோலை; குறுக்கும் நெடுக்குமாக ஏழெட்டு மூங்கில் கழிகளை சாதாரணக் கயிற்றினால் கட்டி, மேலே தென்னோலைகளை விரித்திருக்கிறது.

ஒரு மூங்கிற் கழியிலே கொஞ்சம் மிச்சக் கயிறு தொங்குகிறது. ஒரு சாண் கயிறு.

இந்தக் கயிறு ஒரு நாள் சுகமாக ஊசலாடிக் கொண்டிருந்தது. பார்த்தால் துளி கூடக் கவலை இருப்பதாகத் தெரியவில்லை.

சில சமயங்களில் அசையாமல் "உம்" மென்றிருக்கும். கூப்பிட்டால் கூட ஏனென்று கேட்காது.

இன்று அப்படியில்லை. "குஷால்" வழியிலிருந்தது. எனக்கும் இந்தக் கயிற்றுக்கும் ஸ்நேஹம். நாங்கள் அடிக்கடி வார்த்தை சொல்லிக் கொள்வதுண்டு.

"கயிற்றினிடத்தில் பேசினால் அது மறுமொழி சொல்லுமா?"

பேசிப் பார். மறுமொழி கிடைக்கிறதா இல்லையா என்பதை.

ஆனால் அது சந்தோஷமாக இருக்கும் ஸமயம் பார்த்து வார்த்தை சொல்ல வேண்டும். இல்லாவிட்டால் முகத்தைத் தூக்கிக்கொண்டு சும்மா இருந்துவிடும்; பெண்களைப் போல.

எது எப்படி யிருந்தாலும் இந்த வீட்டுக் கயிறு பேசும். அதில் சந்தேகமே யில்லை.

ஒரு கயிறு சொன்னேன்? இரண்டு கயிறுண்டு.

ஒன்று ஒரு சாண். மற்ருென்று முக்கால் சாண்.

ஒன்று ஆண், மற்ருென்று பெண். கணவனும், மனேவியும்.

அவை யிரண்டும் ஒன்றை யொன்று மோஹப் பார்வைகள் பார்த்துக் கொண்டும், புன்சிரிப்புச் சிரித்துக்கொண்டும், வேடிக்கைப் பேச்சுப் பேசிக்கொண்டும் ரசப் போக்கிலே இருந்தன.

அத்தருணத்திலே நான் போய்ச் சேர்ந்தேன். ஆண் கயிற்றுக்குக் கந்தன் எனப் பெயர். பெண் கயிற்றுக்குப் பெயர் "வள்ளியம்மை". (மனிதர்களேப் போலவே துண்டுக் கயிறுகளுக்கும் பெயர் வைக்கலாம்).

கந்தன் வள்ளியம்மைமீது கையைப் போட வருகிறது. வள்ளியம்மை சிறிது பின் வாங்குகிறது. அந்த சந்தர்ப்பத்திலே நான் போய்ச் சேர்ந்தேன்.

"என்ன, கந்தா, ஸௌக்கியந்தானு? ஒருவேளே நான் ஸந்தர்ப்பம் தவறி வந்துவிட்டேனே என்னவோ? போய் மற்ருெரு முறை வரலாமா?" என்று கேட்டேன்.

அதற்குக் கந்தன்:—"அட போடா, வைதிக மனுஷன்! உன் முன்னே கூட லஜ்ஜையா? என்னடி வள்ளி, நமது ஸல்லாபத்தை ஐயர் பார்த்ததிலே உனக்குக் கோபமா?" என்றது.

"சரி, சரி, என்னிடத்தில் ஒன்றும் கேட்க வேண்டாம்" என்றது வள்ளியம்மை.

அதற்குக் கந்தன் கட கடவென்று சிரித்து, கை தட்டிக் குதித்து நான் பக்கத்தி லிருக்கும் போதே வள்ளியம்மையைக் கட்டிக்கொண்டது.

வள்ளியம்மை கீச்சுக் கீச்சென்று கத்தலாயிற்று. ஆனால் மனதுக்குள்ளே வள்ளியம்மைக்கு சந்தோஷம். நாம் சுகப்படுவதைப் பிறர் பார்ப்பதிலே நமக்கு சந்தோஷந் தானே?

இந்த வேடிக்கை பார்ப்பதிலே எனக்கு மிகவும் திருப்திதான். உள்ளதைச் சொல்லி விடுவதிலே என்ன குற்றம்? இளமையின் சல்லாபம் கண்ணுக்குப் பெரியதோர் இன்பமன்றோ?

வள்ளியம்மை அதிகக் கூச்சலிடவே, கந்தன் அதை விட்டு விட்டது.

சில க்ஷணங்களுக்குப் பின் மறுபடி போய்த் தழுவிக் கொண்டது.

மறுபடியும் கூச்சல்; மறுபடியும் விடுதல்; மறுபடியும் தழுவல்; மறுபடியும் கூச்சல்; இப்படியாக நடந்துகொண்டே வந்தது.

"என்ன கந்தா, வந்தவனிடத்தில் ஒரு வார்த்தை கூடச் சொல்ல மாட்டேனென்கிறாயே? வேறொரு சமயம் வருகிறேன். போகட்டுமா?" என்றேன்.

"அட போடா! வைதிகம்! வேடிக்கைதானே பார்த்துக்கொண்டிருக்கிறாய். இன்னும் சிறிது நேரம் நின்றுகொண்டிரு. இவளிடம் சில வியவஹாரங்கள் தீர்க்க வேண்டியிருக்கிறது. தீர்ந்தவுடன் நீயும் நானும் சில விஷயங்கள் பேசலாம் என்றிருக்கிறேன். போய் விடாதே இரு" என்றது.

நின்று மேன்மேலும் பார்த்துக்கொண்டிருந்தேன்.

சிறிது நேரம் கழிந்தவுடன் பெண்ணும் இன்ப மயக்கத்திலே நான் நிற்பதை மறந்து நாணத்தை விட்டு விட்டது.

உடனே பாட்டு. நேர்த்தியான துக்கடாக்கள். ஒரு வரிக்கு ஒரு வர்ணமெட்டு; இரண்டே 'சங்கதி,' பின்பு மற்றொரு பாட்டு.

கந்தன் பாடி முடிந்தவுடன் வள்ளி, இது முடிந்தவுடன் அது; மாறி, மாறிப் பாடி—கோலாஹலம்.

சற்று நேரம் ஒன்றை யொன்று தொடாமல் விலகி நின்று பாடிக்கொண்டே யிருக்கும். அப்போது வள்ளியம்மை தானாகவே போய்க் கந்தனைத் தீண்டும். அது கழுவிக்கொள்ள வரும். இது ஓடும்—கோலா ஹலம்!

இங்ஙனம் நெடும் பொழுது சென்றபின் வள்ளி யம்மைக்குக் களியேறி விட்டது.

நான் பக்கத்து வீட்டிலே தாகத்துக்கு ஜலம் குடித்து விட்டு வரப் போனேன். நான் போவதை அவ் விரண்டு கயிறுகளும் கவனிக்கவில்லை.

நான் திரும்பி வந்து பார்க்கும் போது வள்ளி யம்மை தூங்கிக்கொண்டிருந்தது. கந்தன் என் வரவை எதிர் நோக்கி யிருந்தது. என்னைக் கண்டவுடன் "எங் கடா போயிருந்தாய்? வைதிகம்! சொல்லிக்கொள் ளாமல் போய்விட்டாயே" என்றது.

"அம்மா நல்ல நித்திரை போலிருக்கிறதே?" என்று கேட்டேன்.

ஆஹா! அந்த க்ஷணத்திலே கயிற்றிலிருந்து வெடித்து வெளிப்பட்டு என் முன்னே நின்ற தேவ

னுடைய மஹிமையை என் னென்று சொல்வேன்! காற்றுத் தேவன் தோன்றினான். அவன் உடல் விம்மி விசாலமாக இருக்குமென்று நினைக்கிறேன்.

வயிர ஊசிபோல ஒளி வடிவமாக இருந்தது.

"நமஸ்தே வாயோ, த்வமேவ ப்ரத்யக்ஷம் ப்ரஹ்மாஸி."

காற்றே போற்றி, நீயே கண்கண்ட பிரமம்.

அவன் தோன்றிய பொழுதிலே வான முழுதும் ப்ராண சக்தி நிரம்பிக் கனல் வீசிக்கொண்டிருந்தது. ஆயிர முறை அஞ்சலி செய்து வணங்கினேன்.

காற்றுத் தேவன் சொல்வதாயினன்:—"மகனே, ஏதடா கேட்டாய்? அந்தச் சிறிய கயிறு உறங்குகிறதா என்று கேட்கிறாயா? இல்லை, அது செத்துப் போய்விட்டது. நான் ப்ராண சக்தி. என்னுடன் உறவு கொண்ட உடல் இயங்கும். என் உறவில்லாதது சவம். நான் ப்ராணன். என்னாலே தான் அச்சிறு கயிறு உயிர்த்திருந்து சுகம் பெற்றது. சிறிது களைப் பெய்தியவுடனே அதை உறங்க—இறக்க—விட்டு விடுவேன். துயிலும் சாவுதான். சாவும் துயிலே. நான் விளங்குமிடத்தே அவ்விரண்டும் இல்லை. மாலையில் வந்து ஊதுவேன். அது மறுபடி பிழைத்துவிடும். நான் விழிக்கச் செய்கிறேன். அசையச் செய்கிறேன். நான் சக்தி குமாரன். என்னை வணங்கி வாழ்க." என்றான்.

"நமஸ்தே வாயோ; த்வமேவ ப்ரத்யக்ஷம் ப்ரஹ்மாஸி; த்வமேவ ப்ரத்யக்ஷம் ப்ரஹ்ம வதிஷ்யாமி."

# வண்ணான் தொழில்.

வேதபுரத்தில் குள்ளச்சாமி என்றொரு பரதேசி யிருக்கிறார். அவருக்கு வயது ஐம்பதோ, அறுபதோ, எழுபதோ, எண்பதோ யாருக்கும் தெரியாது. அவருடைய உயரம் நாலரை அடியிருக்கும், கருநிறம். குண்டு சட்டியைப் போல் முகம். உடம்பெல்லாம் வயிரக்கட்டை போலே நல்ல உறுதியான பெயர்வழி.

அவருக்கு வியாதி யென்பதே கிடையாது. சென்ற பத்து வருஷங்களில் ஒரே தடவை அவர் மேலே கொஞ்சம் சொரிசிரங்கு வந்தது. பத்து நாளிருந்து நீங்கி விட்டது. அந்த மனுஷ்யன் ஜடபாதருடைய நிலைமையிலே யிருப்பதாகச் சொல்லலாம். பேசினால் பயித்தியக்காரன் பேசுவது போலிருக்கும். இழுத்திழுத்து, திக்கித் திக்கி, முன் பின் சம்பந்தமில்லாமல் விழுங்கி விழுங்கிப் பேசுவார். தெருவிலே படுத்துக் கிடப்பார். பசித்தபோது எங்கேனும் போய்ப் பிச்சை வாங்கிச் சாப்பிடுவார். கள் குடிப்பார். கஞ்சாத் தின்பார். மண்ணிலே புரளுவார். நாய்களுடன் சண்டை போடுவார்.

வீதியிலே பெண் பிள்ளைகளுக் கெல்லாம் அவரைக் கண்டால் இரக்கமுண்டாகும். திடீரென்று ஒரு வீட்டுக்குள் நுழைந்து, அந்த வீட்டிலிருக்கும் குழந்தைகள் நெற்றியிலே திருநீற்றைப் பூசிவிட்டு ஓடிப்போவார். யாராவது திட்டினாலும், அடித்தாலும் பொறுத்துக்கொண்டு உடனே அவ்விடத்தை விட்டு ஓடிப்போய் விடுவார்.

ஸாமானிய ஜனங்கள் அவருக்கு நூறு வயதுக்கு மேலே ஆகிவிட்டதென்றும், நெடுங்காலமாக, இப்போதிருப்பது போலவே, நாற்பதைம்பது வயது போலே தான் இருக்கிறாரென்றும் சொல்லுகிறார்கள். ஆனால் இந்த வார்த்தை எவ்வளவு தூரம் நிச்சயமென்பதை நிர்ணயிக்க இடமில்லை.

அவர் கையால் விபூதி வாங்கிப் பூசிக் கொண்டால் நோய் தீர்ந்து விடுமென்ற நம்பிக்கையும் பலர் கொண்டிருக்கிறார்கள்.

மேற்படி குள்ளச்சாமியார் ஒருநாள் தாம் வீதியில் நடந்து வரும்போது, முதுகின் மேலே கிழிந்த பழங் கந்தைகளை யெல்லாம் ஒரு பெரிய அழுக்கு மூட்டை கட்டிச் சுமந்து கொண்டு வந்தார். இந்தச் சாமியாரைக் கண்டால் நான் கும்பிடுவது வழக்கம். அப்படியே கும்பிட்டேன். ஈயென்று பல்லைக் காட்டிப் பேதைச் சிரிப்புச் சிரித்தார். கண்ணைப் பார்த்தால் குறும்பு கூத்தாடுகிறது.

"ஏ சாமி, உனக்கென்ன பயித்தியமா? கந்தைகளைக் கட்டி ஏன் முதுகிலே சுமக்கிறாய்?" என்று கேட்டேன்.

"நீ நெஞ்சுக்குள்ளே சுமக்கிறாய், நான் முதுகின் மேலே சுமக்கிறேன்" என்று சொல்லி ஓடிப்போய் விட்டார். உடனே நான் பொருள் தெரிந்து கொண்டேன். அஞ்ஞானப் பழங் குப்பைகளையும், பழங் கவலைகளையும், பழந் துன்பங்களையும், பழஞ் சிறுமைகளையும் மனதில் வீணைச் சுமந்து திரியும் ஸாமான்ய

மனிதனுடைய அறிவீனத்தை விளக்கும் பொருட்டு ஷை சாமியார் இந்த திருஷ்டாந்தத்தைச் சொன்னு ரென்று தெரிந்து கொண்டேன்.

பின்னெரு நாள் அவரிடம் பரிகாசமாக நான் "சாமி, இப்படிப் பிச்சை வாங்கித் தண்டச் சோறு தின்று கொண்டு ஜீவனம் பண்ணுகிருயே, ஏதேனும் தொழில் செய்து பிழைக்கக் கூடாதா?" என்று கேட்டேன். அந்தப் பரதேசி சொல்லுகிருர்:—

"தம்பி, நானும் தொழில் செய்து தான் பிழைக்கிறேன். எனக்கு வண்ணன் வேலை. ஐம்புலன்களாகிய கழுதைகளை மேய்க்கிறேன். அந்தக்கரண மான துணி மூட்டைகளை வெளுக்கிறேன்" என்ருர்.

ஆம், பரிசுத்தப் படுத்துகிறவனே ஆசார்யன். அவனுடைய சொல்லை மற்றவர் ஆசரிக்க வேண்டும். மேலே சாமியாருடைய புற நடைகள் குடும்பம் நடத்தும் கிருஹஸ்தர்களுக்குத் தகுதி யல்ல. ஆனல் அவருடைய உள்ள நடையை உலகத்தார் பின்பற்ற வேண்டும். ஐம்புலன்களாகிய கழுதைகளை மீறிச் செல்லாதபடி கட்டுப் படுத்தி ஆள வேண்டும், உள்ளத்தை மாசில்லாதபடி சுத்தமாகச் செய்து கொள்ளவேண்டும்.

அழுக்குத் தீர்க்கும் தொழில் செய்வோர் நமது தேசத்தில் மாகாணத்துக்கு லக்ஷம் பேர் வேண்டும். ஹிந்துக்கள் தற்காலத்தில் குப்பைக்குள் முழுகிப் போய்க் கிடக்கிருர்கள். வீட்டையும், தெருவையும் சுத்தமாக வைத்துக் கொள்ளவில்லை. ஜலதாரைகளை ஒழுங்குபடுத்தவில்லை. கிணறுகளையும், குளங்களையும்,

சுனைகளையும் சுத்தமாக வைத்துக் கொள்ளவில்லை. கோயிற் குளங்களில் ஜலம் புழுத்து நெளிகிறது. நாற்றம் குடலைப் பிடுங்குகிறது.

மனுஷ்யா பிவிருத்தி யாவது யாது?

புழுதியை நீக்கித் தரையைச் சுத்த மாக்குதல். அழுக்குப் போகத் துணியையும், நாற்ற மில்லாதபடி குளத்தையும், பொதுவாக எல்லா விஷயங்களையும் சுத்தமாக்கி வைத்துக் கொள்ளுதல்.

நான் மேற்படி சாமியாரிடம், "சாமியாரே, ஞான நெறியிலே செல்ல விரும்புவோன் முக்கியமாக எதை ஆரம்பத் தொழிலாகக் கொள்ள வேண்டும்?" என்று கேட்டேன்.

குள்ளச்சாமி சொல்லுகிறார்:—

"முதலாவது, நாக்கை வெளுக்க வேண்டும். பொய் சொல்லக்கூடாது. புறஞ் சொல்லக் கூடாது. முகஸ்துதி கூடாது. தற்புகழ்ச்சி கூடாது. வருந்தச் சொல்லலாகாது. பயந்து பேசக்கூடாது. இதுதான் வண்ணான் தொழில் ஆரம்பம். பிறகு அந்தக்கரணத்தை வெளுத்தல் சுலபம். சில இடங்களில் பொய் சொல்லித் தீரும்படியாக இருந்தால், அப்போது மௌனத்தைக் கொள்ள வேண்டும். மௌனம் ஸர்வார்த்த ஸாதகம். அதை விட்டுப் பேசும்படி நேர்ந்தால் உண்மையே சொல்ல வேண்டும். உண்மை விரதம் தவறக்கூடாது. தவற வேண்டிய அவசியமில்லை; உண்மை கூறினால் தீங்கு நேரிடுமென்று நினைப்போர் தெய்வம் உண்மை யென்பதை அறியமாட்டார்கள்.

தெய்வம் உண்மை. அதன் இஷ்டப்படி உலகம் நடக்கிறது. ஆதலால் பயப்படுகிறவன் மூடசிகாமணி. அந்தக்கரணத்தை வெளுத்தலாவது அதிலுள்ள பயத்தை நீக்குதல். அந்தக்கரணத்தை சுத்தி செய்துவிட்டால் விடுதலை யுண்டாகும்'' என்றார்.

பின்னுமொரு ஸமயம் மேற்படி குள்ளச்சாமி என்னிடம் வந்து, "தம்பி, நீ இலக்கணக்காரனுச்சுதே! 'வண்ணான்' என்ற வார்த்தையை உடைத்துப் பொருள் சொல்லுவாயா?'' என்று கேட்டார்.

நான் நகைத்து:—"சாமி, உடைக்கிற இலக்கணம் எனக்குத் தெரியாது" என்றேன்.

அப்போது குள்ளச்சாமி சொல்லுகிறார்:—"வண்—ஆன்: வண்ணான். ஆன் என்பது ரிஷபம். வள்ளலாகிய ரிஷபம் நந்திகேசுரர். அவருடைய தொழில் சுத்தஞான மூர்த்தியாகிய சிவனைச் சுமந்து கொண்டிருத்தல். தமிழ் நாட்டு ஞானாசார்யர்களுக்கு ஆதிமூர்த்தியும் வள்ளலுமாகி நிற்கும் இந்த நந்தி பகவானுடைய தொழிலாகிய ஆசார்யத் தொழிலையே நான் வண்ணான் தொழிலென்று சொல்லுகிறேன். எனக்கு வண்ணான் தொழில்'' என்று மேற்படி குள்ளச்சாமி சொன்னார்.

---

## கலியுக கடோற்கசன்.

வேதபுரத்தில் கலியுக கடோற்கசன் என்பதாக ஒருவன் கிளம்பியிருக்கிறான். பழைய துவாபரயுகத்துக் கடோற்கசனுடைய சரித்திரம் எல்லாருக்கும்

தெரியும். அரக்கு மாளிகையிலிருந்து பாண்டவர் தப்பி ஓடும்போது இடும்ப வனத்தில் தங்கினார்கள். அங்கிருந்த இடும்பாசுரன் என்ற ராக்ஷஸன் அவர் களைப் பிடித்துத் தின்ன வந்தான். அந்த இடும்பனை வீமன் கொன்றுவிட்டான். பிறகு அவன் தங்கை யாகிய இடும்பி என்ற ராக்ஷஸி வீமன்மேல் காதல் கொண்டு தன்னை மணந்து கொள்ளச் சொல்லி வற் புறுத்தினாள். மற்ற ஸஹோதரர் நால்வரும் பிரமசாரி களாக இருக்கையில் தான் முதலாவது ஒரு ராக்ஷஸி யைப் போய்க் கலியாணம் பண்ணிக்கொள்வதில் வீமனுக்கு சம்மதமில்லை. இடும்பி குந்தியிடம் போய் முறையிட்டழுதாள். குந்தி வீமனை நோக்கி:—"மகனே, ஒரு ஸ்திரீ வந்து காதல் கூறுமிடத்து அவளை மறுப் பது க்ஷத்ரிய தர்மமில்லை, ஆண் மக்கள் அங்ஙனம் செய்யலாகாது, ஆதலால், நீ இந்த ராக்ஷஸியைக் கல் யாணம் பண்ணிக் கொள்க" என்று கட்டளையிட்டாள். தாய் சொல்லுக் கிணங்கி வீமன் இடும்பியைக் கல்யா ணம் பண்ணிக்கொண்டான். இவ்விருவருக்கும் பிறந்த பிள்ளையே துவாபரயுக கடோற்கசன். இவன் வீமனுக்கு ஸமமான பலமும் பராக்ரமமும் உடையவனென்று வேதவியாசர் தெரிவிக்கிறார். இது நிற்க. நமது கலியுக கடோற்கசனைக் கவனிப்போம். இவன் வேதபுரத்தில் ஒரு சாராயக் கடையிலே பணவசூல் குமஸ்தாவாக இருக்கும் ராமசாமி நாயக்கர் என்பவருடைய மகன். இவனுக்கு இப்போது வயது சுமார் இருபது இருக்க லாம். சாராயக் கடையில் ப்ராந்தி, விஸ்கி, ஜின் முதலிய ஐரோப்பியச் சாராயங்கள் விற்கிறார்கள்.

வேதபுரத்தில் குடி மும்முரம். ஆனபடியால் மேற்படி கடைக்குப் பற்று வரவு ஜாஸ்தி. அங்கு பண வசூல் காரனாகிய ராமசாமி நாயக்கருக்கு மாதம் எட்டு ரூபாய் சம்பளம். தெலுங்கு பேசும் நாயக்கர். நல்ல க்ஷத்திரிய வம்சம். தெலுங்கு ராஜ்யம் போன பிறகு கெட்டுப் போய்த் தாழ்ந்த நிலைமைக்கு வந்திருக்கும் நாயடு கூட்டத்தைச் சேர்ந்தவர்.

மேற்படி ராமசாமி நாயக்கர் மகனுக்குத் தாய் தந்தையர் வைத்த பெயர் கோவிந்தராஜுலு. அவன் தானாக வைத்துக்கொண்ட பெயர் கலியுக கடோற்கசன்.

அவன் உயரம் ஐந்தே கால் அடி யிருக்கலாம். குண்டுருளை போலே வயிரமான உடம்பு. இவன் மேலே மோட்டார் வண்டி ஓட்டலாம். மாட்டு வண்டி விடலாம். இவன் தலை ரோமத்தில் முந்நூறு ராத்தல் கல் தொங்க விடலாம். இவன் தலையிலே நாற்பது பேரடங்கிய பெரிய தொட்டிலை நிறுத்தி வைக்கலாம். இவன் இரண்டு விரல்களைக் கொண்டு மஹா பாரதப் புஸ்தகத்தைக் கிழித்துப் போடுவான். இவன் பல்லி னால் கல்லைப் பேர்த்துப் போடுவான். இவன் நகத் தால் கதவைப் பிளப்பான்.

வயது இருபதுக்கு மேல் ஆகவுமில்லை. நேற்றுக் காலையில் இந்தப் பையன் என்னைப் பார்க்கும் பொருட் டாக வந்திருந்தான். முதலாவது, தன்னுடைய தொழில்களை எல்லாம் என் வீட்டில் செய்து காட்டி னான். நான் மிகவும் ஆச்சரியப்பட்டேன்.

பிறகு இவனுடைய புத்தி எந்த நிலைமையில் இருக்கிறதென்பதைப் பரிசோதனை செய்யும் பொருட்டாக அவனுடன் சிறிது நேரம் ஸம்பாஷணை செய்து பார்த்தேன். அவன் கையில் ஒரு குறிப்புப் புஸ்தகம் (பாக்கெட் நோட்புக்) வைத்துக்கொண்டிருந்தான். அதைப் பார்த்தால் சின்ன பைபிலோ அல்லது டைரி (தினசரி)யோ என்று ஐயப்படும்படியாக இருந்தது. "கையில் என்ன; டைரி புஸ்தகமா?" என்று கேட்டேன். அந்தப் பையன் ஹீ என்று பல்லைக் காட்டிக் கொண்டு, "இல்லெங்க; மந்திரவாதப் புஸ்தகங்கள்" என்றான்.

"நான் வாசிக்கலாமா?" என்று கேட்டேன். "வாசிக்கலாம்" என்று சொல்லி அந்தப் புஸ்தகத்தை என் கையில் கொடுத்தான். அது அச்சிட்ட புஸ்தகமன்று. அவன் கையால் எழுதியது. "பல ஊர்களில் ஸஞ்சாரம் பண்ணினேன். பல ஸாதுக்களிடம் கேட்ட மந்திரங்களை யெல்லாம் இதில் எழுதி வைத்திருக்கிறேன். நான் அவர்களுக்கு (அந்த ஸாதுக்களுக்குப்) பத்திரம் தயார் பண்ணிக் கொடுப்பேன்." என்று கலியுக கடோற்கசன் சொன்னான். "பத்திரமா? அதென்ன?" என்று கேட்டேன்.

அவன் சொல்லுகிறான்:—"அதைப் பாமர ஜனங்கள் கஞ்சா இலை என்றும் சொல்லுவார்கள். ஸாதுக்களுக்கு மனதை ஒரு நிலையில் நிறுத்தி பிரமத்திலே கொண்டு சேர்க்க அது உபயோகங்க. மைசூரில் நான் போன மாஸம் போயிருந்தேனுங்க. அங்கே

பெரிய சாமியாருங்க, அவர் தான் எனக்கு ஆஞ்ஜ னேயர் மந்திரம் கற்றுக் கொடுத்தாருங்க. அவர் ஒரு நாளைக்கு ஒன்றரை ரூபாய் கஞ்சா வாங்கிப் புகை குடிப்பாருங்க. அவர் மனதை உள்ளே கொண்டு கிறுத்தினல் பிறகு அதை வெளியே இழுப்பது கஷ் டங்க" என்ருன்.

இவன் இப்படிச் சொல்லிக் கொண்டிருக்கையில் எனக்கு அந்தப் புஸ்தகத்தைப் பார்க்க வேண்டும் என்ற அவா அதிகப்பட்டது. புஸ்தகத்தைக் கையி லெடுத்துத் திறந்தபோது அதிலிருந்து பொல பொல வென்று இருபது, முப்பது துண்டுக் காயிதங்கள் உதிர்ந்தன. எனக்கு ஆராய்ச்சியிலே பிரியம் அதிக மானபடியால் முதலாவது அந்தத் துண்டுக் காயிதங் களைப் பரிசோதனை செய்து பார்த்துவிட்டுப் பிறகு புஸ்தகத்துக்குள்ளே நுழைவோம் என்று யோசித்து அந்தக் காயிதங்களைப் பார்த்தேன். அவற்றின் விவரம் பின்வருமாறு:—

முதலாவது:—"ஹோம்ரூல் ஸ்டாம்ப்" மூன்று இருந்தது.

அதில் ஒவ்வொரு ஸ்டாம்புக்கு நடுவிலும் அனி பெஸன்ட் அம்மாள் தலை போட்டிருக்கிறது. சுற்றி "தெய்வத்துக்காகவும், தேசத்துக்காகவும், ராஜாவுக் காகவும், சிறைப்பட்டவர்" என்றெழுதி யிருந்தது. அதைச் சூழ நான்கு புறத்திலும் இங்கிலீஷ், தெலுங்கு, உர்து, நாகரி, கன்னட லிபிகளில் "ஹோம் ரூல்" என்றெழுதி யிருந்தது.

இரண்டாவது:—ஒரு சின்ன டிக்கட். அதில் இங்கிலீஷ் பாஷையில் “மிஸ் தாரா; இந்தியன் லேடி ஸாண்டோ” என்று ஒரு புறத்திலும், வெளிச் சீட்டு (ஔட் பாஸ்) என்று மற்றொரு புறத்திலும் போட்டிருந்தது.

மூன்றாவது :—ஒரு லேசான காயிதத்தைப் போன்ற செப்புத் தகடு. அதில் ஏதோ சக்கரம். சேதுக்கும் பொருட்டு வைத்துக் கொண்டிருப்பதாகக் கடோற்கசன் சொன்னான்.

நாலாவது:—ராமமூர்த்தி ஸர்க்கஸ் ஆட்ட ஜாப்தா.

ஐந்தாவது :—ஒரு கிறிஸ்தவப் பையனுடைய நேர்த்தியான புகைப் படம். அவன் யாரென்று கேட்டதற்குத் தன்னுடைய ஸ்னேகித னென்றும், இரும்பாலையில் வேலை பார்க்கிறா னென்றும், தன்னைப் போலவே குஸ்தி வகையறாத் தொழில்களில் பழக்க முடையவ னென்றும், அவனுக்குக் கலியுக கும்பகர்ணன் என்று பெயர் வைக்கலா மென்றும் கடோற்கசன் சொன்னான்.

ஆறாவது :—மறுபடியும் ஒரு டிக்கட். அதில் இங்க்லீஷில் “எடிஸன் கினேமாடோக்ராப் கம்பனி. ஒரு ஆளை உள்ளே விடு” என்றெழுதி யிருந்தது.

ஏழாவது :—ஸிகரட் பெட்டியிலிருந் தெடுத்த துர்க்கை படம். அதில் தேவி மஹிஷாஸுரனைக் கொல்லுகிறாள். பக்கத்தில் விநாயகருடைய தலை மாத்திரம் தெரிகிறது. உடம்பெல்லாம் மறைந்திருக்கிறது. சின்ன சுப்பிரமணியன் ஒன்றிருக்கிறது. அம்மனுக்குப்

பதினாறு கைகள் போடுவதற்குப் பதிலாக எட்டுக் கை போட்டிருந்தது.

எட்டாவது:—இரண்டு சிங்கங்களுடன் ஒரு மனிதன் சண்டை போடுவது போல ஒரு படம். பத்திரிகையிலிருந்து கத்தரித்தது.

ஒன்பதாவது:—யேசுகிறிஸ்து, மாட்டுக் கொட்டகையில் பிறந்து வைக்கோல் மேலே போட்டுக் கிடப்பதாக குழந்தை யுருவங் காட்டிய படம்.

பத்தாவது :—ஸாதாரண வருஷத்து மார்கழி மாதம் 18-ஆம் தேதி முதல் விரோதிகிருது வருஷத்துச் சித்திரை மாஸம் 16-ஆம் தேதி வரையில் 'ஏகாதசி', 'ஷஷ்டி' பிரதோஷம், கரிநாள், யமகண்டம், ராகுகாலம், குளிகை காலம், வாரசூலை இவற்றின் அட்டவணை.

பதினோராவது :—இனி மேன்மேலும் அடுக்கிக் கொண்டு போனால் படிப்பவர்களுக்குப் பொறுமையில்லாது போய் விடு மென்ற அச்சத்தால் இங்கு மேற்படி கீழே யுதிர்ந்த துண்டுக் காயிதங்களைப் பற்றிய முழு விவரங்களும் தெரிவிக்காமல் விடுகிறேன். அதில் அநேகம் கடோற்கசனுடைய ஸ்நேஹிதர்களுடைய மேல் விலாஸம், ஒரு சிறு துண்டுக் காயிதத்தில் குங்குமம் சுற்றி யிருந்தது. அது கோயிலில் கொடுத்த தென்றும், அம்மன் ப்ரஸாத மென்றும் கடோற்கசன் விளக்கினான்.

இனி அவன் மந்திரவாதப் புஸ்தகத்துள் எழுதி யிருந்த விநோதங்களில் சிலவற்றை இங்கு காட்டுகிறேன்.

## கணபதி மந்திரம்.

ஓம் கணபதி ; ஐயும் கணபதி ; கிளியும் கணபதி ; ஸவ்வும் கணபதி ; வா ; வா ; ஸகல ஜனங்களும் ; போகங்களும் ; ஸகல லோக சித்தியும், உமக்கு வசிய மானது போல் எனக்கு வசியமாகவும். சுவா ஹா.

## பஞ்சாட்சரம்.

ஹரி ஓம் சிவய நம.

## அனுமார் மந்திரம்.

ஓம் அனுமந்தா, ஆஞ்சனேயா, நமோ நாராய ணய, சிரஞ்சீவியாகக் காத்து ரக்ஷித்து வா. கிளியும், ஸவ்வும், என் எதிரிகளை வென்று என்னைக்கா, கா, கா, ஸ்வாஹா!

## புருஷ வசியத்துக்கு மந்திரம்.

நிலத்திலே முளைத்தவளே, நீலப்பூ பூத்தவளே, மனத்துக் கவலை தீர்த்தவளே, மன்னன் சிறை மீட்ட வளே, குடத்துத் தண்ணீர் பாலாக வேண்டும். கோவிந்தராஜு என்னைக் கண்டா கும்பிட வேண்டும். நான் ஒரு புலியாக வேணும், அவன் ஒரு பசுவாக வேணும். புலியைக் கண்ட பசு நடுங்கினாற் போல் நடுங்கி ஒடுங்கி வணங்கி நிற்க ஸ்வாகா! இந்த மந்தி ரத்தை ஆயிரம் உரு ஏற்றவேண்டும். வேளைச் செடி யின் வடக்கே போகிற வேரில் ஞாயற்றுக் கிழமை சூரியன் கிளம்புகிற ஸமயத்தில் மஞ்சள் துண்டைக் கட்டிப் பதினாறு விசை மந்திரத்தை ஜபித்து பிறகு வேர் அறுமல் பிடுங்கி வெள்ளித் தாயித்தில் மஞ்சளை நீக்கி வேரைச் செலுத்திக் கட்டிக்கொள்ள வேண்டும்.

### ஸகல வியாதிகளுக்கும் மந்திரம்.

*ஓம், ரீங், அங், இந்தப்படிக்கு விபூதியில் எழுதி ஆயிரத்தெட்டு உரு ஜபித்து சூடன் கட்டியை அதின் மேலே வைத்துக் கொடுக்க வியாதி தீரும். இது கை கண்டது.*

### சிறங்கு கண்டவுடன் செய்கிற மந்திரம்.

*மசிமா மசி ; நசி மா நசி !*

### சிறங்கு நைய மந்திரம்.

*கசி ; நசி !*

### பழுத்தபின் உடைக்கும் மந்திரம்.

*நஞ்சு, பிஞ்சு, நாசமதாகிப் பிஞ்சு நஞ்சு போக ஸ்வாஹா !*

### இராஜாவை வசியம் பண்ண மந்திரம்.

*வசீகரா, வசீகரா, ராஜ வசீகரா, அச்சிட்ட பங்காளா, தக்ஷிணாமூர்த்தி, தூர்க்கா தேவதாயை நம. இதற்கு ஆயிரத்தெட்டு செய்யவும்.*

### மற்றுமொரு இராஜ வசிய மந்திரம்.

*அய்யும், கிலியும், ஸவ்வும், ஸவ்வும் கிளியும், ஐயும், நவகோடி சித்தர் சாயம் நசி, நசி ; ஸர்வ மூலிகையும் இன்ன ராஜாவும் வசி, வசி.*

*இந்த மந்திரங்களைத் தவிர, மேற்படி கலியுக கடோற்கசனுடைய நோட் புக்கில் இன்னும் இது போலவே முப்பது நாற்பது மந்திரங்களும், பலவிதமான சக்கரங்களும் இருந்தன. அந்த மந்திரங்களையும் சக்கரங்களையும் இப்போது புஸ்தகத்தில் முழுதும் விஸ்தாரமாகச் சொல்லப் போனால் நெடுந்தூரம் இந்த வியாசம்*

அளவுக்கு மிஞ்சி நீண்டு விடும். எனினும் நமது ஹிந்து தர்மத்தையும், மந்திர மஹிமையையும், இடைக் காலத்து மூட ராஜாக்களும், அயோக்யப் பூஜாரி, பண்டார, மந்திர வாதிகளும் எவ்வளவு கேலிக்கிட மாகச் செய்துவிட்டார்க ளென்பதை விளக்க, மேற் கூறிய திருஷ்டாந்தங்களே போதுமென்று நினைக்கி றேன். இன்னும் அவனுடைய குறிப்புப் புஸ்தகத்தில் போகப் போகப் பெருங் கேலியாக இருந்தது. எனக்கு அவற்றை யெல்லாம் பார்க்கும்போது சிரிப் பொரு பக்கம் வந்தது. தலை யொரு பக்கம் கிறுக்கிற்று.

ஹிந்துக்களுடைய மூல பலமாகிய மந்திர சாஸ்த் திரத்தை இடைக்காலத்து மூடர் இவ்வளவு சீர் கெடுத்து வைத்திருப்பதையும், அதைத் தற்காலத்து மூடர்களிலே பலர் நம்புவதையும் நினைக்கும்போது எனக்கு மிகவும் வருத்த முண்டாயிற்று.

அதை நான் பார்வையிட்டுக் கொண்டிருக்கையில் குள்ளச்சாமி என்ற வேதபுரத்து ஞானி வந்தார். அவரிடம் அதைக் கொடுத்தேன். அவர் அந்தப் புஸ்த கத்தை வெளி முற்றத்துக்குக் கொண்டு போனர். அங்கிருந்து நெடுநேரமாகத் திரும்பி வரவில்லை. என்ன செய்கிறார், பார்ப்போமென்று சொல்லி நான் எழுந்து வெளி முற்றத்துக்கு வந்தேன். என்னுடன் கலியுக கடோற்கசனும் வந்தான். அங்கு போய்ப் பார்த் தால், குள்ளச்சாமி அந்தப் புஸ்தகத்தில் மண் எண் ணெயை விட்டுத் தீயைக் கொளுத்தி எரிய விட்டு வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தார். குழந்தைகள்

பக்கத்தில் நின்று வேடிக்கை பார்த்தனர். எனக்குச் சிரிப்பு வந்தது. கடோற்கசன் கோவென் றழுதான். குள்ளச்சாமி பெரிய ஞானி யென்றும், பரம புருஷ னென்றும், அவர் செய்தது பற்றி வருத்தப்படக்கூடா தென்றும் சொல்லி நான் கடோற்கசனைத் தேறுதல் சொல்லி அனுப்பினேன். போகும்போது அவன் பைக் குள் குள்ளச்சாமியார் ஒரு பொற்காசு போட்டார். நான் ஒரு துண்டுக் காயிதத்தில் "ஓம் சக்தி" என்ற மந்திரத்தை எழுதி அவன் பைக்குள் போட்டேன்.

பொற் காசைக் கண்டவுடன் கடோற்கசன் கொஞ்சம் ஸந்தோஷ மடைந்து புன்சிரிப்பு கொண் டான். அப்போது குள்ளச்சாமி சொல்லுகிறார் :—

"எல்லாம் தெய்வம்"—"தர்மமே மஹா மந்தி ரம்" "உண்மைக்கு ஜயமுண்டு" "எல்லாரையும் வசப்படுத்த வேண்டுமானால், எல்லாரையும் தெய்வ மாக நினைத்து மனதார வணங்க வேண்டும்." இந்த விஷயங்களை யெல்லாம் இந்த தேசத்தில் பரவும்படி செய் என்றார்.

---

## கத்திச் சண்டை.

மார்கழி மாஸத்து நாலாம் வாரம். அதாவது, குளிர் ஜாஸ்தி. அதிலும், வேதபுரம் கடற்கரைப் பட்டணம். குளிர் மிகவும் ஜாஸ்தி. ஒரு நாள் ராத்திரி நான் குளிருக்குப் பயந்து சுகாதார சாஸ்த்ரத்தைக் கூடப் பொருட்டாக்காமல், என் அறைக்குள் நாலு ஜன்னல்களையும் சாத்தி முத்திரை வைத்துவிட்டுப் படுத்துக் கொண்டிருந்தேன்.

விடிய இரண்டு ஜாமம் இருக்கும்போது விழித்துக் கொண்டேன். அதற்கும் குளிர்தான் காரணம். வாடை குளு குளு வென்று வீசுகிறது. வடபுறத்து ஜன்னலின் கதவுகள் காற்றில் தாமாகவே திறந்து கொண்டன. எழுந்து போய் ஜன்னலை நேராக்குவோமென்று யோசித்தால் அதற்கும் சோம்பராக இருந்தது. போர்வையை நீக்கிவிட்டு இந்தக் குளிரில் எவன் எழுந்து போய் ஜன்னலைச் சாத்துவான்? என்ன செய்வோம் என்று ஸங்கடப்பட்டுக்கொண்டே படுத்திருந்தேன். மழை இதற்குள்ளே பெரிதாக வந்து விட்டது. மழை கள கள வென்று கொட்டுகிறது. வாடைக் காற்று வந்து பல்லைக் கட்டுகிறது.

உயிரை வெறுத்து தைரியத்துடன் எழுந்து போய் ஜன்னலைச் சாத்துவோம் என்று சொல்லி யெழுந்தேன்.

அப்போது ஒரு பண்டாரம் சங்கூதிச் சேகண்டி யடித்துப் பாடிக்கொண்டு வந்தான். மார்கழி மாசத்தில் வருஷந்தோறும் ஒரு வள்ளுவன் வந்து பாதி ராத்திரி நேரத்திலேயே வேதபுரத்து வீதிகளில் எல்லாம் திருவாசகம் பாடிக்கொண்டு சங்கூதிக்கொண்டு சேகண்டி யடித்துக்கொண்டு சுற்றுவது வழக்கம். அவன் தான் இந்த வருஷமும் வந்துகொண்டிருப்பானென்றெண்ணி நான் ஆரம்பத்தில் ஒரு நிமிஷம் கவனியாமல் இருந்தேன். பிறகு கணீர் என்று பாட்டுச் சத்தம் காதில் வந்து மதுரமாக விழுந்தது. அடா இது பழைய வள்ளுவனுடைய குரலில்லை. இது ஏதோ

புதிய குரலாக இருக்கிறதென் றெண்ணி நான் குளி ரையும் கவனியாமல் ஜன்னல் ஓரத்திலே கொஞ்சம் நின்றேன். மழை கொட்டுகிறது. அறைக்குள்ளே எனக்கு கைகால் விரைய லெடுக்கிறது.

அந்தப் பண்டாரம் வஸந்த காலத்தில், மாலை நேரத்தில், பூஞ் சோலையில் ராஜகுமாரன் ஒருவன் காற்று வாங்கிக்கொண்டு ஒய்யாரமாக நடப்பது போலே (அந்தப் பண்டாரம்) அந்த மழையில் நடந்து செல்லுகிறான். பிரமானந்தமாகத் திருவாசகம் பாடு கிறான் :—

" பூசுவதும் வெண்ணீறு பூண்பதுவும் பொங்கரவம்
பேசுவதும் திருவாயால் மறை போலும் காணேடி!"

இந்தப் பாட்டை அவன் பாடின ராகம் என் மனதை விட்டு இப்போதுகூட நீங்கவில்லை. மனுஷ்ய கானம்போலில்லை. தேவகானம் போலே யிருந்தது. "ஹே! யாரப்பா பண்டாரம், நில்லு!" என்று சொல்லிக் கூவினேன். அவன் நின்றான். "நீ போன வருஷம் திருப்பள்ளி யெழுச்சி பாடி வந்தவனைத் தோன்ற வில்லையே? நீ யார்?" என்று கேட்டேன். "நான் போன வருஷம் பாடினவனுடைய மகன். நான் பாடினது திருச்சாழல்" என்றான். இவன் அதிக ப்ரஸங்கி என்று தெரிந்து கொண்டு, "உன் பெயரென்ன?" என்று கேட்டேன். "என் பெயர் செட்டை மாடன்" என்று சொன்னான். "சரி போ" என்று சொன்னேன். அவன் இரண்டடி முன்னே

போய் மறுபடி திரும்பி வந்து:—"ஐயரே, உம்முடைய பெயர் என்ன?" என்று கேட்டான்.

"என் பெயர் காளிதாசன்" என்று சொன்னேன்.

"ஓஹோ! பத்திரிகைக்குக் கதைகள் எழுதுகிறீரே, அந்தக் காளிதாஸன் நீர்தானோ?" என்றான்.

"ஓஹோ! இவன் பத்திரிகை படிக்கிறான்" என்றெண்ணி வியப்புற்று, நான் அவனிடம் "தம்பி, நெட்டை மாடா; உனக்கு சங்கீதம் யார் கற்றுக் கொடுத்தார்கள்? நீ இதுவரை எந்த ஊரிலே வளர்ந்தாய்?" என்று கேட்டேன். அப்போது நெட்டை மாடன் சொல்லுகிறான்:—

"ஏ, ஐயரே, நான் மழையில் நிற்கிறேன். நீ அறைக்குள் நின்று கொண்டு என்னிடம் நீண்ட கதை பேசுகிறாயே. மேல் தளத்திலிருந்து கீழே இறங்கிவா; வாசல் திண்ணையில் உட்கார்ந்துகொண்டு பேசலாம். நானும் உன்னிடத்தில் பல கேள்விகள் கேட்கவேண்டுமென்று நெடுநாளாக யோசனை பண்ணிக் கொண்டிருந்தேன். இறங்கி வருவீரா?" என்று கேட்டான்.

"இவன் என்னடா! வெகு விசேஷத்தனாகத் தெரிகிறதே!" என்று நான் ஆச்சர்யப்பட்டுக் கீழே இறங்கி வருவதாக ஒப்புக் கொண்டேன். அவன் வாசல்படி யேறித் திண்ணையில் உட்கார்ந்தான். நான் கீழே போகையில் ஒரு மழை லாந்தர் கொளுத்திக் கொண்டு போனேன். அவன் கையிலும் ஒரு மழை லாந்தர் கொண்டு வந்திருந்தான். திண்ணையில் போய் உட்கார்ந்த உடனே நாங்கள் இருவரும் ஒருவரை

யொருவர் ஏற இறங்கப் பார்த்துக் கொண்டோம். அவன் தலை சுத்த மொட்டை; உடம்பு ஒற்றை நாடி; சதைப்பற்றுக் கிடையாது. ஆனால் உறுதியான உடம்பு; மேலே துணி கிடையாது. இடுப்பில் மாத்திரம் ஒரு துணி கட்டிக்கொண்டிருந்தான். மேலெல்லாம் மழைத் தண்ணீர் ஓடுவதை அவன் துடைக்கவில்லை. குளிரினால் அவன் முகம் விகாரப்படவில்லை. அவனைப் பார்த்தவுடனே எதனாலேயோ ஹம்ஸ பக்ஷியின் ஞாபகம் வந்தது. ஹாம்! ஆமாம்! அவன் முன்பு நடந்து செல்லக் கண்டபோது நான் என் மனதில், 'இவன் என்னடா, அன்ன நடை நடக்கிறான்!' என்று நினைத்துக் கொண்டேன். மேலும் இவன் ஆஸாமியைப் பார்த்தால் கோயில் அன்ன வாஹனம் எத்தனை பொறுமையும், இனிமையுமாகத் தோன்றுமோ அத்தனை பொறுமையும் இனிமையுமான முக வசீகர முடையவனாக இருந்தான்.

நான் அப்போது அவனை நோக்கி:—"என்னிடம் ஏதோ கேள்விகள் கேட்க வேண்டுமென்று நெடுங் காலம் யோசனை செய்து கொண்டிருந்ததாகச் சொன்னாயே, கேள்" என்றேன்.

அப்போது நெட்டை மாடன் சொல்லுகிறான்:—

"உன்னிடம் கேள்விகள் கேட்க வேண்டுமென்ற விருப்ப மிருந்ததாக நான் தெரிவிக்கவில்லை. உன்னிடம் ஸம்பாஷணை செய்ய வேண்டுமென்ற விருப்ப மிருந்ததாகச் சொன்னேன். நீ ஏதாவது கேள்வி கேள். நான் ஜவாப் சொல்லுகிறேன். அதுதான்

எனக்குகந்த ஸம்பாஷணை" என்றான். "இதென்ன ஸங்கடம்" என்று யோசித்து, நான் இவனிடம் முன் கேட்ட கேள்விகளைத் திரும்பவும் கேட்டேன். "நீ சங்கீதம் எங்கே படித்தாய்? இத்தனை காலம் எந்த ஊரில் இருந்தாய்?" என்று வினவினேன்.

நெட்டை மாடன் சொல்லுகிறான் :—"அறிவூர் வீணை ரகுநாத பட்டர் மகன் அஞ்ஜனேய பட்டரிடம் நான் சங்கீதம் வாசித்தேன். இதுவரை அந்த ஊரிலே தான் வாஸம் செய்தேன்" என்றான்.

அப்போது நான் கேட்டேன்:—"தம்பி, நெட்டை மாடா, நீ ஜாதியில் வள்ளுவனாயிற்றே! ரகுநாதபட்டர், அஞ்ஜனேய பட்டர் என்ற பெயர்களைப் பார்த்தால் அவர்கள் பிராமணராகத் தோன்றுகிறதே! உங்கள் ஜாதியார் பிராமணருக்கு ஸமீபத்தில் வந்தால் கூட தீண்டல் தோஷம் என்று சொல்லுவது வழக்க மாயிற்றே. அப்படி யிருக்க நீ அவர்களிடம் ஸங்கீதம் எப்படிப் படித்தாய்?" என்றேன்.

அதற்கு நெட்டை மாடன் சொல்லுகிறான் :—"நீ கேட்ட கேள்விக்கு ஜவாப் சொல்ல வேண்டு மானல் என்னுடைய கதையை ஆரம்பத்திலிருந்தே தொடங்கிச் சொல்ல வேண்டும். அவ்வளவு தூரம் பொறுமையுடன் கேட்பாயா?" என்றான்.

"கேட்கிறேன்" என்று சொல்லி உடம்பாடு தெரிவித்தேன். அப்போது நெட்டை மாடன் சொல்லு கிறான் :—

"நான் வேதபுரத்தில் இருபத்தாறு வருஷங்களுக்கு முன் பிறந்தேன். என் தகப்பனார் சோற்றுக்கில்லாமல் நான் நாலு வயதுப் பையனாக இருக்கும்போது ஒரு ஸர்க்கஸ் கம்பெனியாருக்கு என்னை விற்று விட்டார். அந்தக் கம்பெனியில் சூராதி சூரத்தனமான வேலைகள் செய்து மிகுந்த கீர்த்தி ஸம்பாதித்தேன். பன்னிரண்டு வயதாக இருக்கும்போது அறிவூருக்குப் போனேன். அந்தக் கம்பெனித் தலைவரான மஹாராஷ்ட்ரப் பிராமணருக்கு என்னிடம் மிகுந்த அபிமானம். அறிவூர் என்பது மலை நாட்டில் ஒரு பெரிய ஜமீந்தாருடைய ராஜதானி நகரம். அந்த ஊரில் ஸர்க்கஸ் இரண்டு மாஸம் ஆடிற்று. அப்போது என்னுடைய எஜமானாகிய ராயருக்கு வயதாய் விட்டபடியால் சீக்கிரத்தில் கம்பெனியை கலைத்து விட்டுப் பண்டரிபுரத்துக்குப் போய் அங்கு வீடு வாங்கித் தனது முதுமைப் பருவத்தை ஹரி பக்தியில் செலவிட வேண்டுமென்ற யோசனை பண்ணிக் கொண்டிருந்தார். அவருக்கும் ஜமீந்தாருக்கும் மிகுந்த நட்புண்டாயிற்று. ஜமீந்தார் கத்திச் சண்டையில் கெட்டிக்காரனாகவும் வயதில் குறைந்தவனாகவும் தனக்கொரு பக்கச் சேவகன் வேண்டுமென்று விரும்பினார். என்னுடைய எஜமானாகிய ராயர் என்னை சிபார்சு பண்ணினார். இதற்கிடையே எனது தகப்பனாருக்கும் எஜமான் ராயருக்கும் அடிக்கடி கடிதப் போக்கு வரவு நடந்து கொண்டு வந்தது. எனது தகப்பனாரும் என்னை அடிக்கடி பல ஊர்களில் வந்து பார்த்துக்கொண்டிருந்தார். அறிவூர் ஜமீந்தார் எனக்கு அரண்மனையிலே

சோறு போட்டு மகன் போலே வளர்த்தார். ஸங்கீதம் அந்த ஸமஸ்தானத்து பாகவதராகிய அஞ்சனேய பட்டரிடம் படித்தேன். யோகாப்யாசம் பண்ணி யிருக்கிறேன். கத்திச் சண்டையிலே பேர் வாங்கி யிருக்கிறேன். ஆறு பாஷை பேசுவேன். பாடுவேன். நாட்டிய மாடுவேன். மிருதங்க மடிப்பேன். ஆனை யேற்றம், குதிரை யேற்றம், கழைக் கூத்து, மல் வித்தைகள்—எனக்குப் பல தொழிலும் தெரியும்'' என்று சொன்னான்.

இதற்குள் பொழுது விடிந்து விட்டது. நல்ல ஸூர்யோதயத்தில் அவன் முகத்தைப் பார்க்கும் போது நல்ல சுந்தர ரூபமுடையவனாக இருந்தான்.

அப்போது நான் அவனை நோக்கி:—“ நீ இன்று நம்முடைய வீட்டிலேயே காலை நேரம் போஜனம் செய்துகொள். உன்னுடைய கத்தி சுற்றும் திறமையை எனக்குக் கொஞ்சம் காண்பி '' என்றேன். சரி யென்று ஸம்மதப் பட்டான். பின்பு சொல்லுகிறான் :—“ எனக்கு சரியாகக் கத்தி சுழற்றக் கூடியவர்கள் இந்த ஊரில் ஒரே மனுஷ்யன் தான் இருக்கிறார். நான் போய் என் வீட்டிலிருந்து கத்திகளை யெடுத்துக்கொண்டு அவரையும் அழைத்துக் கொண்டு வருகிறேன்'' என்று சொல்லி விடை பெற்றுக்கொண்டு போய், மறுபடி ஐந்து......மணி யிருக்கும்போது வந்தான். இவன் பட்டாக் கத்தி, உண்மையான,...... சண்டைக் கத்திகள் கொண்டு வருவானென்று நான் நினைத்திருந்தேன். இரண்டு மொண்ணை வாள்—வெண்

ணையை வெட்டும் ஸர்க்கஸ் கத்திகள் கொண்டு வந்தான். தனக்கு எதிர் நின்று சண்டை போடக்கூடிய வீராதி வீரனை என்னிடம் அழைத்து வருவதாக அவன் வாக்குக் கொடுத்தபடி அந்த மனிதனைத் தேடிப் பார்த்ததாகவும், அகப்படவில்லை என்றும், மற்றொரு நாள் கூட்டி வருவதாகவும் இன்று தான் மாத்திரம் தனியே கத்தி வீசிக் காண்பிப்பதாகவும் சொன்னான். சரியென்று சொல்லி நான் அவனுக்கு முதலாவது காபியும், இட்டலியும் கொண்டு வந்து வைத்து சாப்பிடச் சொன்னேன். பாதி சாப்பிட்டுக் கொண்டிருந்தான். அப்போது குள்ளச் சாமியார் என்ற யோகீசுரர் அங்கே வந்தார். அவரைக் கண்டவுடன் நெட்டை மாடன் எழுந்து ஸலாம் பண்ணி,—'ஜராம், ராம் மஹாராஜ்!' என்றான். அவரும் இவனைக் கண்டவுடன், 'ராம், ராம்' என்றார். பிறகு நெடுநேரம் இருவரும் மலையாள பாஷையில் பேசிக் கொண்டார்கள். எனக்கு மலையாளம் அர்த்தமாகாத படியால் நான் அவர்களுடைய ஸம்பாஷணையை கவனிக்கவில்லை. குள்ளச் சாமியாரை நான் குருவென்று நம்பியிருக்கிற படியால் அவருக்கும் கடையிலிருந்து வாழைப்பழம் வாங்கிக்கொண்டு வந்து பாலும் பழமும் கொடுத்தேன். இரண்டு பேரும் சாப்பிட்டு முடித்தார்கள். கீழ்த் தளத்தில் சாப்பிட்டார்கள். பிறகு நான் வெற்றிலைத் தட்டைக் கையில் எடுத்துக் கொண்டு மேல் மாடியில் பூஜா மண்டபத்துக்குப் போகலாம் என்று கூறி அழைத்து வந்தேன். இருவரும் மேல் மாடிக்கு வந்தார்கள். நான் ஊஞ்சலின்மீது அவர்கள் இருவரையும்

வீற்றிருக்கும்படி செய்து தாம்பூலம் கொடுத்தேன். இருவரும் தாம்பூலம் போட்டுக் கொண்டார்கள். பிறகு ஒரு க்ஷணத்துக்குள்ளே நெட்டை மாடன் வெளி முற்றத்திலிருந்து ஒரு நாற்காலி யெடுத்துக் கொண்டு வந்தான். அதன் மேலே ஏறிக்கொண்டு ஊஞ்சல் சங்கிலிகளைக் கழற்றினான். அடுத்த க்ஷணத்துக்குள் ஊஞ்சலையும் கழற்றினான். அடுத்த க்ஷணத்துக்குள் ஊஞ்சலையும் சங்கிலிகளையும் கொண்டு சுவரோரத்தில் போட்டு விட்டான். பிறகு நெட்டை மாடன் என்னை நோக்கி " எனக்கு ஸமானமாகக் கத்தி வீசத் தெரிந்தவர் இந்த ஊரில் ஒருவர்தானுண்டு என்று சொன்னேனே, அவர் யாரெனில் இந்தச் சாமியார் தான் " என்று குள்ளச் சாமியாரைக் காட்டினான். நான் ஆச்சரியத்தால் ஸ்தம்பிதனாய் விட்டேன்.

ஒரு க்ஷணத்துக்குள் அந்த இருவரும் தலைக்கொரு கத்தியாக எடுத்துக்கொண்டு வீசத் தொடங்கி விட்டார்கள். நெடுநேரம் அவர்களுக்குள்ளே கத்திச் சண்டை நடந்தது. அதைப் பார்த்து நான் பிரமித்துப் போய் விட்டேன். அத்தனை ஆச்சர்யமாக அவ்விருவரும் கத்தி சுழற்றினார்கள். ஒருவருக்கும் காயமில்லை. ஆனால் நடுவே நடுவே இவன் தலை போய் விடுமோ அவன் தலை போய்விடுமோ என்று எனது நெஞ்சு படக்குப் படக்கென்று புடைத்துக் கொண்டிருந்தது.

பிறகு இருவரும் கத்தியைக் கீழே வைத்து விட்டுக் கொஞ்சமேனும் ஆயாசமில்லாமல் மறுபடியும் மலையாளத்தில் ஸம்பாஷணை செய்யத் தொடங்கி விட்

டார்கள். கொஞ்சம் பொழுது கழிந்த பின்பு நெட்டை மாடன் போய்விட்டான். குள்ளச் சாமியார் என்னை நோக்கிச் சொல்லுகிறார். "தம்பி, காளிதாஸா, இந்த நெட்டை மாடன் ராஜயோகத்தினால் சித்தத்தைக் கட்டினவன். இவனுக்கு ஈசன் யோகசித்திக்கு வாட்போரை வழியாகக் காண்பித்தான். இவனுக்கு நிகராக வாள் சுழற்றுவோர் இந்தப் பூமண்டலத்தில் யாரும் கிடையாது. ஆனால் இவன் தன்னைக் கொல்ல வந்த பாம்பையும் கொல்லக் கூடாதென்ற அஹிம்ஸா விரதத்தைக் கைக்கொண்ட மஹா யோகியாதலால், கொலைத் தொழிலுக்குரியதான கூர்வாளை இவன் கையினால் தீண்டுவது கிடையாது. உடம்பு நன்றாக வசமாக்கும்படி செய்கிற ஹடயோக வித்தைகளில் ஒன்றாக அதை நினைத்து உன் போன்ற அபிமானிகளுக்கு மாத்திரம் தனது திறமையை ஸர்க்கஸ் கத்தி வைத்துக் கொண்டு காண்பிப்பான். வள்ளுவர் குலத்தில் நம் ஊரிலேயே இப்படி ஒரு மஹான் இருப்பது உனக்கு ஆச்சர்யமாகத் தோன்றலாம். இனிமேல் இதற்கெல்லாம் ஆச்சர்யப்படாதே. ஹிந்துஸ்தானத்துப் பரதேசி பண்டாரங்களை யெல்லாம் மிகுந்த மதிப்புடன் போற்று. பரதேசி வேஷத்தைக் கண்டால் கும்பிடு போடு. எந்தப் புற்றில் எந்தப் பாம்பிருக்குமோ? உனக்கு மேன்மேலும் மஹான்கள் தரிசனம் தருவார்கள்" என்றார்.

நான் ஹிந்துஸ்தானத்தின் மஹிமையை நினைத்து வந்தே மாதரம் என்று வாழ்த்திக் குள்ளச் சாமியாரைக்

கையெடுத்துக் கும்பிட்டேன். அவர் "ஜீவ" என்று வாழ்த்தி விட்டு, விடை பெற்றுக்கொண்டு சென்றார்.

---

## "வளர் பிறை" குழந்தைக் கதை

ரவீந்திரநாத டாகூருடைய வங்காளிப் பாட்டை இங்கிலீஷ் படுத்திய நூல்களில் "வளர் பிறை" என்பதொன்று. குழந்தைகளைப் பற்றிய பாட்டு. மிகவும் சாமர்த்யமாக எழுதியிருக்கிறார்.

சில மொழி பெயர்ப்புக்கள் காட்டுகிறேன்:—

"நான் எங்கிருந்து வந்தேன்? நீ என்னை எங்கே பொறுக்கி யெடுத்தாய்?" என்று குழந்தை தாயினிடம் கேட்டது. அதற்குத் தாய் சொல்லுகிறாள்—

"என் செல்வமே,

"எனது நெஞ்சிடை விருப்பமாய் மறைந்து நீ நின்றாய், நான் விளையாட்டுப் பெண்ணாக விளையாடிய பொம்மைகளிலே நீ இருந்தாய்.

"களி மண்ணாலே நான் ஸ்வாமி பண்ணிப் பண்ணி யழித்த போது உன்னைத்தான் பண்ணினேன்.

"வீட்டுக் குலதெய்வத்துடன் நீ கோயில் கொண்டிருந்தாய். அதனை வணங்குகையில், நின்னையே வணங்கினேன்."

"விளையாட்டுப் பண்டங்கள்" என்று மற்றொரு பாட்டு. அதில் தந்தை சொல்லுகிறான்:—

"குழந்தாய், குச்சிகளையும், மண் பண்டங்களையும், வைத்துக் கொண்டு அவற்றுடனே கலக்கும் வித்

தையை நான் மறந்து விட்டேன். எனது விளையாட்டுக்கு விலையேறிய பண்டங்கள் வேண்டிப் பொன்னும் வெள்ளியும் திரளாகக் குவிக்கிறேன். நீ கண்ணிலகப் பட்ட பொருளை யெல்லாம் வைத்துக் கொண்டு ரஸமான விளையாட்டுக்கள் படைக்கிறாய், என்றும் பெறக் கூடாதனவற்றை வேண்டி நான் வலிமையையும் நேரத்தையும் செலவிடுகிறேன்!''

"மேகங்களும் அலைகளும்'' என்பதொரு பாட்டு. அதிலே குழந்தை சொல்லுகிறது :—

"அம்மா! அலைக்குள்ளே வாழ்வோர் என்னைக் கூப்பிடுகிறார்கள்.

"'காலை முதல் இரவு வரை பாடுகிறோம். திக்குத் திசை யில்லாமல் எங்கும் சுற்றி வருகிறோம்' என்று சொல்லி என்னை யழைக்கிறார்கள்.

"'எப்படி உம்முடன் சேரலாம்?' என்றால்,

"'கரை யோரத்துக்கு வந்து கண்ணை மூடிக் கொள்ளு, அலைகள் வந்து உன்னைக் கொண்டு போகும்' என்கிறார்கள்.

"அதற்கு நான் :—'வீட்டில் அம்மா என்னை மாலையில் தேடுவாள். அவளை எப்படிப் பிரிந்து வருவேன்?' என்று கேட்டால் அவர்கள் சிரித்துக் கொண்டு ஓடிப்போகிறார்கள்.

"அம்மா, அதைக் காட்டிலும் நல்லதொரு விளையாட்டு எனக்குத் தெரியும், நான்தான் அலையாம், நீ ஏதோ ஒரு தேசத்துக் கடற்கரையாம்; நான்

உருண்டுருண்டு வந்து சிரிப்புடன் உன் மடிமேல் மோதுவேன்."

"செண்பகப்பூ" என்பதொரு பாட்டு.

அதில் ஒரு குழந்தை தான் தாய்க்குத் தெரியாதபடி செண்பகப் பூவாக மாறி உச்சிக் கொம்பின் மேல் ஏறியிருப்பதாகக் கற்பனை பண்ணி அதைத் தாயினிடம் ரஸமான கதையாகச் சொல்லுகிறது.

"வீரன்" என்ற பாட்டு மிகவும் நயமானது.

அதில் குழந்தை தனது தாயை நோக்கிப் பின் வரும் கற்பனையாய் சொல்லுகிறது. காட்டு வழியில் தாய் பல்லக்கில் ஏறிவர, அருகே தான் குதிரையேறி வருவதாகவும், அப்போது கள்ளர் வருவதாகவும், போரில், தான் அத்தனை கள்ளரையும் வெட்டிக் கொன்று துரத்தி யொழித்து விடுவதாகவும், அப்போது தாய், 'இந்தப் பிள்ளையைக் கூட்டி வந்ததனாலே பிழைத்தோம்,' என்றெண்ணுவதாகவும், ஊரார் உவப்பதாகவும், தமயன் கேட்டு இந்த வலிமையற்ற பிள்ளை இத்தனை செய்தானா என்று வியப்பதாகவும், கற்பனை மிகவும் நன்றாக அமைந்திருக்கிறது.

தெய்வமே தாயென்று நம்பி எவன் குழந்தை போல் நடக்கிறானோ அவனே ஞானி யென்பது மேற்படி நூலின் கருத்து.

---

## குழந்தைக் கதை

ராமபுரம் என்ற ஊரில் வடகோடித் தெருவில் ஒரு பெண் குழந்தை தன் வீட்டு மேடையில் ஒரு

நாற்காலியின் மேல் உட்கார்ந்து பச்சை நூலில் ஊசி கோர்த்துத் தையல் வேலை செய்து கொண்டிருந்தது. அப்போது நேர்த்தியான காலை வெயிலடித்தது. அவ் வீட்டைச் சுற்றி நாற்றிசைகளிலும் நெருங்கி வளர்ந் திருந்த தென்னை, முருங்கை, ஆத்தி, வாழை முதலிய பசுமரங்களின் இலைகள் இள வெயில் இன்பத்திலே களி கொண்டு நின்றன. காக்கை, புறா, கிளி, சிட்டுக் குருவி, நாகணவாய், ஓரிரண்டு மரங் குத்திக் குருவி கள் முதலிய பக்ஷிகள் ஓடிப் பறந்து விளையாடிக் கொண்டிருந்தன. மேலே பருந்துகளும் கருட பக்ஷிக ளும் வட்டமிட்டு வெயிலைத் தின்று கொண்டுலாவின.

இந்த ஸமயத்தில் தெருவில் ஒருவன் "வெல்லம் வாங்க வில்லையா, வெல்லம்" என்று கூவிக்கொண்டு வந்தான். அக்குழந்தை யிருந்த வீட்டுக் கெதிர் வீட்டு வாயிலில் சுமார் நாற்பது வயதுடையவராகத் தோன் றிய க்ருகஸ்த ரொருவர் நின்று கொண்டிருந்தார். அவர் பார்வைக்கு வேளாளரைப் போலிருந்தார். அந்த முதலியார் வெல்ல வியாபாரியை நோக்கி:—"ஏ, யாரப்பா வெல்லம், இங்கே கொண்டு வா" என்றார். வெல்ல வியாபாரி நாட்டுப்புறத்தான். அவனுக்குச் சுமார் முப்பது வயதிருக்கும், முழங்காலுக்கு மேல் இடுப்புவரை ஓர்முழக்குத் துணியை வளையக் கட்டிக் கொண்டிருந்தான். அவன் ஒரு பெரிய பிரப்பங் கூடையில் வெல்லத்தை வைத்துத் துணியால் மூடி அதைத் தலைச் சும்மாட்டின் மேலே சுமந்து கொண்டு வந்தான். முதலியார் வீட்டு வெளித் தாழ்வாரத்தில்

கூடையை இறக்கினான். அப்போது அங்கு பக்கத்து வீட்டிலிருந்து ஒரு செட்டிச்சியம்மா வந்து சேர்ந்தாள். இவளுக்கு நாற்பத்தைந்து வயதிருக்கும்; விதவை, சிவப்புத் துணி கட்டியிருந்தாள்.

ரவீந்த்ர நாத டாகூர் சொல்வது போல் இவளுடைய தலை மயிர் முக்காற் பங்கு பழமாகவும், காற் பங்கு காயாகவு மிருந்தது. அதாவது, முக்காற்பங்கு நரை; பாக்கி நரையில்லை.

செட்டிச்சி வந்து குனிந்து கூடை மீதுள்ள துணியை விலக்கினாள். "தொடாதேயம்மா, தொடாதேயம்மா" என்று வெல்ல வியாபாரி கத்தினான். அதற்குள் வேறு சில செட்டிச்சிகளும் அங்கு வந்து கூடிவிட்டனர்.

சத்தம் அதிகப்பட்டது. பலவிதமாக விலை பேசலாயினர். "பணத்துக்கு எத்தனை கட்டி? இன்னும் இரண்டு போடு......அட, போ, மூன்று காசுக்குப் பால் மாறுதே......அடீ, நீ வாடீ, நாம் கடைத் தெருவில் போய் வாங்கிக் கொள்ளலாம்" என்று நானாவிதமான ஸம்பாஷணைகள் நிகழ்ந்தன. வியாபாரம் நடக்கவில்லை. ஸ்திரீகளின் கூட்டம் அதிகப்பட்டவுடனே, முதலியார் அங்கிருந்து சற்றே விலகிக் கொண்டார். அப்போது அந்த முதலியாருடைய நண்பராகிய ஒரு கிழவர் அங்கு வந்து சேர்ந்தார். அவ்விருவரும் ஸம்பாஷணை செய்யலாயினர்.

நான் அந்த வீதியில் ஒரு வேலையாகப் போயிருந்தேன். ஒரு மனிதருக்காகக் காத்திருக்கும்படி

நேரிட்டது. அக் குழந்தை தையல் வேலை செய்து கொண்டிருந்த வீட்டுக்குக் கீழே ரஸ்தாவில் நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தேன்.

அப்போது அந்த முதலியார் சொன்னார். "வெல்லம் விலை விஷம் போலேறி விட்டது. அட, வெல்லம் மாத்திரமா; பெருங்காயம் முதல் பலாப்பழம் வரை, உப்பைத் தொட்டுக் கற்பூரம் வரை எல்லாச் சாமான்களுக்குந் தான் விலை ஒரேயடியாக பின்னுக் கேறி விட்டது. தெருவிலே கீரை கொத்தமல்லி கொண்டு வருங் கிழவி கூடப் போன வருஷத்துக்கு இவ்வருஷம் மூன்று மடங்கு ஸாமான் குறைவாகப் போடுகிறாள். இந்தக் குட்டிச் சுவராக, மண்ணாகப் பாழாகிப் போகிற ஜெர்மனிக்காரன் எப்போது தான் சண்டையை நிறுத்துவானோ?" என்று முதலியார் பெருமூச்சு விட்டார்.

உடனே அந்தக் கிழவர் சொல்லுகிறார்:—"ஜெர்மனியானுக்கு பலமான அடி! நம்முடைய வீட்டுக்குப் பக்கத்தில் ஒருவர் இஸ்திரிக்கடை வைத்திருக்கிறார். அவருக்குத் தினந்தோறும் 'சுதேசமித்திரன்' பத்திரிகை வருகிறது. அவர் அதைப் படித்து ஸாயங்காலம், ஸாயங்காலம் நமக்கு விஷயங்களெல்லாம் சொல்லுவார். ஜெர்மனி ராஜா சிங்காதனத்தை விட்டு நீங்கி விட்டானாம். நேசக் கக்ஷியார் சீக்கிரம் பெர்லின் நகரத்தைப் பிடித்துக் கொள்வார்களாம். ஜெர்மனியான் ஸமாதானம் கேட்டானாம். அது நேரே நம்முடைய இங்கிலீஷ்காரரிடம் கேட்காமல் அமெரிக்காவிலே

போய்க் கேட்டானும். அமெரிக்காவில் ராஜாவே கிடையாதாமே! ஒரு பள்ளிக்கூடத்து வாத்தியாரை அங்கே நாலைந்து வருஷத்துக்கு 'ஆக்டிங்' காக ராஜா மாதிரி வைத்திருக்கிறார்களாம். அவர் ஜெர்மன் ராஜாவுக்குப் பதில் வார்த்தையாக உன்னைத் தூள் தூளாகச் செய்த பிறகு தான் சமாதானமே யொழிய அதுவரை ஸமாதானத்தைப் பற்றி உச்சரிக்கக் கூடாதென்று சொல்லி விட்டாராம். நல்ல வாத்தியார் அவர்" என்று கிழவர் சொன்னார்.

அப்போது முதலியார்:—"அப்படியானால் சண்டை ஸமீபத்தில் முடியப் போகிறதில்லை. நேசக் கக்ஷியால் தம்முடைய பூமி யெல்லாம் மீட்டுக் கொண்டு அப்பால் ஜர்மனியின் எல்லைமேல் படை யெடுத்துப் போய் பர்லின் நகரத்தைப் பிடுங்க வேண்டுமானால் அதற்கு இன்னும் குறைந்த பக்ஷம் இரண்டு மூன்று வருஷமாவது செல்லாதா?" என்றார்.

அது கேட்டுக் கிழவர்:—"ஹூம், ஹூம், ஹூம், ஜெனரல் (f) போஷ் என்ற நேசக்கக்ஷி ஸேனாதிபதி மஹா, மஹா, மஹா வீரராம். அமெரிக்காவிலிருந்து எண்ணத் தொலையாத புதுத் துருப்புகள் வந்திருக்கின்றனவாம். இன்னும் நாலைந்து மாதத்தில் ஜர்மனி துவையலாய்ப் போய்விடும், பார்த்துக் கொண்டேயிரும்" என்று சொன்னார்.

இங்ஙனம் இவர்கள் பேசிக் கொண்டிருக்கையிலே, வெல்ல வியாபாரியைச் சூழ ஸ்த்ரீகளின் கூட்டம் பெருங் கூட்டமாய் விட்டது.

மேடையின் மீது தையல் வேலை செய்துகொண்டு தெருவை நோக்கி யிருந்த குழந்தை ஏதோ பராக்காக இருக்கையிலே, ஒரு காக்கை அந்தக் குழந்தையின் கையைத் தீண்டிக்கொண்டு பாய்ந்து செல்ல அதனால் அக்குழந்தை பயந்து கையிலிருந்த நூல் நழுவி விட்டது. அந்த நூல் என் தலைமேல் வந்து விழுந்தது. அதை நான் அப்படியே தரையில் விழாதபடி கையால் பிடித்துக் கொண்டேன். இதைக் கண்டு குழந்தை மகிழ்ச்சி யடைந்து அந் நூலை என்னிடமிருந்து வாங்கிக் கொள்ளும் பொருட்டாகக் கீழே யிறங்கி ரஸ்தாவுக்கு வந்தது.

அந்த பெண் குழந்தைக்கு சுமார் எட்டு அல்லது ஒன்பது வயதிருக்கும். மிகவும் அழகான ரூபம். செவப்பு நிறம். ஒரே விதமாக வெள்ளையுமில்லை. சுத்த மஞ்சள் நிறமில்லை. அரை மஞ்சள்; காலை வெயிலின் நிறத்தை அந்தக் குழந்தையின் நிறத்துக்கு ஒப்பிட லாம். அதன் முகத்தில் அற்புதமான தொரு நிலா வொளி வீசிற்று. மானே போல விழிகள். ஆஹா! அந்தக் குழந்தையின் விழிகளிலே தோன்றிய ஸௌந் தர்யத்தை நான் எங்ஙனம் வர்ணிப்பேன்! அதன் கண்களைப் பார்த்தால் ஒருவனுடைய பாவங்கள், பிணி கள், பயங்களெல்லாம் பறந்தோடிப்போய் விடும்.

அதன் கண்களை நோக்கி நான் வியந்து கொண் டிருக்கையிலே, அப் பெண், “நூலைக் கொடு” என்று கேட்டது.

“உன் பெயரென்ன?” என்று வினவினேன்.

"நூலைத் தா வென்றால் பெயரென்னவா! என் பெயர் பேரில்லாப் பூச்சி, நூலைத்தா" என்றது.

அப்போது நான் அக் குழந்தையை நோக்கி:—

"ஏ, பேரில்லாப் பூச்சி, உன் தந்தை பெயரென்ன?" என்றேன்.

அது மறுபடி "நூலைப் போடு, நூலைப் போடு" என்று கூவிற்று.

"உன்னுடைய உண்மையான பெயரைச் சொன்னாலன்றி, நான் இந்த நூலைத் தரமாட்டேன்" என்றேன்.

"என் பெயர் இப்போது சொல்ல மாட்டேன், நீ முதலாவது நூலைக் கொடு. பிறகு சொல்லுகிறேன்" என்றது குழந்தை.

இதற்குள் வெல்ல வியாபாரி போய் விட்டான். செட்டிச்சிகளின் கூட்டமுங் கலைந்து விட்டது. முதலியாரும் கிழவரும் எழுந்து வீட்டுக்குள்ளே போய் விட்டனர்.

தெருவில் சத்தத்தையே காணவில்லை. சாக்கடையோரத்தில் ஓரழகான சேவல் நின்று கொண்டு அகண்ட லோகத்துக்கும் தானே ராஜா வென்ற பாவனையுடன் "கொக் கொக் கோழி" என்று கூவிற்று.

வானத்திலே மரக் கிளைகளினின்றும் குருவிகளின் ஸங்கீதமும், காக்கைகளின் சுயக்குரலும் செவிப்பட்டன.

அக்குழந்தை என்னை நோக்கி மறுபடி:—"நூலைக் கொடுப்பாயா? மாட்டாயா? ஒரே வார்த்தை சொல்" என்றது.

" மாட்டேன் " என்றேன்.

அப்போது அக்குழந்தை என்னை மிகவுங் கோபத்துடன் நோக்கித் தரைமேல் எச்சிலுமிழ்ந்து விட்டுத் தன் வீட்டுக்குள்ளே சென்றது. சிறிது நேரத்துக்கெல்லாம் உள்ளே யிருந்து ஒரு மனிதனை அழைத்துக் கொண்டு வந்தது. அந்த மனிதனைப் பார்த்தால் ஒரு மகமதிய சுல்தானைப் போலிருந்தது. இடுப்பில் நிஜார். உடம்பின் மீது தழையத் தழைய ஒரு மஸ்லின் உடுப்பு. நெஞ்சு வரை தாடி தொங்குகிறது. ஜெர்மனி தேசத்து கெய்ஸர் மாதிரி மீசை வைத்துக் கொண்டிருந்தான். பச்சைப் பட்டுத் துணி யொன்றைத் தலையில் சுற்றிக் கொண்டிருந்தான்.

'குழந்தையைப் பார்த்தால் பிராமணக் குழந்தை போலிருக்கிறது. இவனைப் பார்த்தால் பச்சைப் பட்டாணித் துருக்கனைப் போலிருக்கிறது. இதென்னடா, ஆச்சர்யம்' என்று நான் சற்றே திகைப்பெய்தி நின்றேன். அப்போது அக் குழந்தை அவனிடம் என்னைச் சுட்டிக் காட்டி " இவர்தானப்பா, நூலை யெடுத்துக் கொண்டு தரமாட்டே னென்கிறார் " என்று சொல்லி அட்டஹாஸம் பண்ணிற்று. அதினின்றும் அக்குழந்தையின் பிதா, வந்த மனிதன் என்று தெரிந்து கொண்டேன்.

நூலைக் குழந்தையின் கையிலே கொடுத்து விட்டேன். அது நூலை வாங்கிக் கொண்டு மறுபடி 'மெத்தைக்கு ஏறிப் போய், வீதி யெதிரே நாற்காலியின் மீதிருந்து கொண்டு மீளவும் தையல் வேலை தொடங்கி விட்டது.

அந்த மனிதனுக்கு நான் என்னை அறியாமலே, மகமதிய ரீதியில் ஸலாம் பண்ணினேன். அவனும் சுத்தமான அரபி பாஷையில் "ஆலேகும் ஸ்லாம்" என்ருன். எனக்குக் கால்கள் ஸ்தம்பித்துப் போயின. கடைசி வரை இந்த ஆள் துருக்கன் தானே என்ன இழவோ? அப்படியானல், தெளிந்த பாண்டித்தமிழ் பேசும் மேற்படி பிராமணக் குழந்தை இவனை 'அப்பா' என்று கூப்பிட நியாயமில்லையே, இதென்ன விரோதம்! என்று யோசிக்கலானேன். இதனிடையே அந்த மனிதன் என்னை ஸம்பாஷணைக் கிழுத்தான்.

சிரித்துக் கொண்டே பேசுகிருன்:—"வாருங்கள்; ஹெ, ஹெ, ஹெ, ஹெ அந்தக் குழந்தையுடன் நாலுக் காகச் சண்டையா போட்டீர்கள்? இப்படி வாருங்கள். இந்தத் திண்ணையில் உட்காருங்கள். என்ன விசேஷம்? இங்கெதற்காகக் காத்துக் கொண்டிருக்கிறீர்கள்?" என்ருன்.

அப்போது நான்:—"சரிதான். இந்த மனிதனுக்குப் போது போகவில்லை. நம்மை பேச்சுக்கிழுக்கிருன். நாம் எதிர்பார்க்கிற ஆளும் வரக்காணேம். நமக்குப் போது போகவேண்டுமோ? இல்லையோ? இவனுடனே கொஞ்சம் பேசுவோம். இவனுடைய விஷயத்தையும் தெரிந்து கொள்ளலாம்" என்றெண்ணி அந்த வீட்டுத் திண்ணை மேற் போய் உட்கார்ந்தேன். எதிர்த்த திண்ணையின் மேல் அவன் உட்கார்ந்து கொண்டான். எங்களுக்குள்ளே பேச்சாரம்பித்தது. "தங்களைப் பார்த்தால் இஸ்லாமானவர் மாதிரி இருக்கிறதே, என்ன விசேஷம்?" என்று கேட்டேன்.

அதற்கவன் நகைப்புடன் :—“ இல்லை ; இல்லை ; நமக்கு மஹமதியருடைய ஸ்நேஹம் அதிகம். அதனால் வேஷம் இப்படி யிருக்கிறது. நான் சரியான சுதேசிப் பிராமணன் ” என்றான்.

இப்படி யிருக்கையில் அந்த வீட்டுக் குள்ளே இருந்து ஒரு ஸ்திரீ அங்கு வந்தாள். அவளைப் பார்த் தாலும் பெரும்பாலும் துருக்கச்சி போலே தானிருந் தது. தலையை மாத்திரம் மூடிக்கொள்ளவில்லை. நெற்றி யிலே ஒரு பச்சிலைப் பொட்டுக் குத்தி யிருந்தது. அவளைப் போல அழகு நான் பார்த்ததே கிடையாது. அவளை இத்தனை அற்புதமான ஸௌந்தர்யத்துடன் படைத்த பிரம தேவன் அவளுக்கு மூக்கு மாத்திரம் நிறைய வைக்க மறந்து போய் விட்டான். எனவே அவள் சீனத்தி போலவும், துருக்கச்சி போலவும், நானு விதமாகப் புலப்பட்டாள். அவளைக் கண்டவுடன் அந்தப் பிராமண ஸஹா:—“ மெத்தையில் நாற்காலிக ளெல்லாம் நேரே போட்டுவை ; இவரும் இங்கேதான் காபி சாப்பிடுவார். காபி யெல்லாம் தயாராய் விட்டதா ? ” என்று கேட்டான்.

“ தயாராய் விட்டது ” என்றாள்.

“ சரி மெத்தைக்கு வருகிறீர்களா ? ” என்று அவன் என்னை அழைத்தான். நான் ஸம்மதப்பட்டேன். மூன்று பேரும் மெத்தைக்குப் போய்ச் சேர்ந்தோம். மெத்தையிலே நீண்ட மாடம், அங்கு நீண்டதொரு மேஜையின் மேல் பழங்கள், ரொட்டி, பிஸ்கோத்து, ஒரு பெரிய காப்பிச் செம்பு, நாலைந்து வெண்கலக் கிண்

ணங்கள்—இவை யெல்லாம் அடுக்கி வைத்திருந்தன. நான்கு நாற்காலிகள் போட்டிருந்தன. குழந்தையையுஞ் சேர்த்து நாங்கள் நால்வருமாக இருந்து பழங்கள் முதலியவற்றைத் தின்று காபி குடித்தோம்.

அப்போது நான் அந்த பிராமணனை நோக்கி:—இவ்வளவு நேரமாயும் நான் உங்கள் பெயரை விசாரிக்கவில்லை. தங்களுடைய நாமதேய மென்ன ?'' என்று கேட்டேன்.

அதற்கவன் என்னை நோக்கி :—"உங்கள் பெயரென்ன ?'' என்றான்.

"என் பெயர் குமாரதேவ முதலியார்'' என்றேன்.

"தொழில் என்ன ?'' என்று கேட்டான்.

"பத்திரிகைகளுக்கு வியாஸங்க ளெழுதுவது என்னுடைய தொழில்'' என்றேன். "சரிதான்'' என்று சொல்லி ஒரு சுருட்டை எடுத்து முனையைக் கிள்ளி வாயிலே வைத்துக் கொண்டான். என்னிடம் ஒரு சுருட்டை நீட்டினான். "நான் சுருட்டுப் பிடிக்கும் வழக்கமில்லை'' என்று சொல்லி விட்டேன். அப்பால் தன் மனைவியை நோக்கி, அவன் "தீப் பெட்டி கொண்டு வா'' என்றான். அவள் கீழே யிறங்கிப் போய் ஒரு தீப் பெட்டியும், இரண்டு ரோஜாப்பூச் செண்டும், ஒரு தட்டில் வெற்றிலை, பாக்கு, சுண்ணாம்பு, லவங்கம், ஏலக்காய், ஜாதிக்காய், ஜாதிப் பத்திரிகளும் கொண்டு வந்து மேஜையின் மீது வைத்தாள்.

அந்த பிராமண ஸாஹப் சுருட்டுப் பிடிக்கலானான். நான் தாம்பூலம் தரித்துக் கொண்டேன்.

பிறகு நான் மறுபடி அந்தப் பிராமணனை நோக்கி:—"உங்களுடைய நாமதேயத்தை இன்னும் தெரிவிக்க வில்லையே" என்றேன்.

அப்போதவன்:—"என் பெயர் கங்காதர சாஸ்திரி" என்றான்.

"இந்தக் குழந்தையின் பெயரென்ன?" என்று கேட்டேன்.

"நித்ய கல்யாணி" என்றான்.

பிறகு காலையில், அந்தக் குழந்தையிடம் நான் பெயர் சொல்லும்படி கேட்ட போது அது சொல்ல மாட்டேனென்று ஸாஹஸம் பண்ணியதை கங்காதர சாஸ்திரியிடம் எடுத்துரைத்தேன்.

அப்போது கங்காதர சாஸ்திரி அந்தக் குழந்தையின் கீர்த்தி பிரதாபங்களை யெல்லாம் என்னிடம் விஸ்தரித்துச் சொல்லத் தொடங்கினான். "காக்கைக்குத் தன் குஞ்சு பொன் குஞ்சு" என்பது பழமொழி. அப்படி யிருக்க இத்தனை அழகும் முகத்தில் ஞானவொளியு முடைய அதன் பிதா புகழ்ச்சி புரிவது ஸகஜமே யாதலால், அவன் சொல்வதை யெல்லாம் நான் பொறுமையுடன் கேட்டுக் கொண்டிருந்தேன்.

கடைசியாக அவன்:—"மேலும் நம்முடைய நித்ய கல்யாணிக்கு ஸங்கீதத்தில் ஆச்சர்யமான ஞானம். கணக்கிலும் அப்படியே. இலக்கியத்திலும் அப்படியே. லௌகிக விஷயங்களிலும் இக்குழந்தைக்கு நல்ல ஞானமுண்டு. "சுதேசமித்திரன்" பத்திரிகையில் சண்டைத் தந்திகளை ஒன்று விடாமல் வாசித்துக்

கொண்டு வருகிறாள். பூ மண்டல விஷயங்களெல்லாம் நித்ய கல்யாணிக்கு ஸ்பஷ்டமாகத் தெரியும்" என்றான்.

இப்படி யிருக்கையில் வானத்தில் நான்கு புறங் களிலு மிருந்து மேகங்கள் வந்து சூழ்ந்து மழை பல மாகப் பெய்யத் தொடங்கிற்று.

அப்போது நான் காலையில், சிறிது நேரத்திற்கு முன்பு எதிர் முதலியாரும் கிழவரும் சண்டை விஷய மாகப் பேசியதை ஞாபகத்தில் கொண்டு அவர்க ளுடைய லௌகிக ஞானத்துக்கும் இக்குழந்தையின் ஞானத்துக்கு முள்ள தாரதம்யத்தைப் பரிசோதனை செய்வோம். மழையோ பலமாகப் பெய்கிறது. நாம் எதிர்பார்த்த மனிதன் இன்று வரமாட்டான். அந்தக் காரியத்தை நாளைக் கவனித்துக் கொள்ளலா மென்று யோசனை பண்ணி, அக்குழந்தையை நோக்கி, "பேரில் லாப் பூச்சி, இந்த யுத்தம் என்ன நோக்கங்களுடன் நடக்கிறது? சொல், பார்ப்போம்" என்றேன்.

"பூமிபாரங் குறைவதற்காக நடக்கிறது" என்றது.

"ஹூம். அதைக் கேட்கவில்லை யம்மா. ஜெர் மனியக் கக்ஷியார் என்ன நோக்கங்களுடன் போர் செய்கிறார்கள்? நம்முடைய நேசக் கக்ஷியார் என்ன கருத்துக்களுடன் யுத்தம் நடத்துகிறார்கள்?" என்று கேட்டேன்.

"நேசக் கக்ஷியாரை ஜயிக்க வேண்டு மென்ற கருத்துடன் ஜெர்மனி யுத்தம் நடத்துகிறது. ஜெர் மனியை ஜெயிக்க வேண்டு மென்கிற எண்ணத்துடன் நேசக் கக்ஷியார் யுத்தம் பண்ணுகிறார்கள்" என்று குழந்தை சொல்லிற்று.

" இது பொதுப்படையான வார்த்தை யன்றோ குழந்தாய்? இரு திறத்தாரின் யுத்த லக்ஷ்யங்கள் எவை?" என்று கேட்டேன்.

" பரஸ்பரம் வெற்றிபெற வேண்டு மென்பதே லக்ஷ்யம் " என்று அக் குழந்தை மீட்டும் சொல்லிற்று.

" அமெரிக்காவின் ஜனாதிபதியாகிய வில்ஸன் பண்டிதர் நேசக் கக்ஷியாரின் யுத்த லக்ஷ்யங்களைப்பற்றி என்ன சொல்லுகிறார்?" என்று கேட்டேன்.

" லார்ட் கர்ஸன் என்ன சொல்லுகிறார்?" என்று அக்குழந்தை என்னிடம் கேட்டது. அப்போது அக் குழந்தையின் தாய் புல்லாங்குழலைப் போன்ற குரலில் "பச்சைக் குழந்தையிடம் தொளைத்துத் தொளைத்துக் கேள்விகள் கேட்டால் அதற்கென்ன தெரியும்? அதன் பிதா அதை மித மிஞ்சிப் புகழ்ந்து பேசினார். அதை நம்பாதேயுங்கள். நித்ய கல்யாணி, நீ போய் பாடம் வாசி " என்றாள். குழந்தை புன்னகையுடன் குதித்தெழுந்து பாடம் படிக்கப் போய்விட்டது. இதற்குள் மழையும் நின்று விட்டது. நான் பின்னுமொரு முறை வெற்றிலை போட்டுக் கொண்டேன். அப்பால் மேற்படி கங்காதர சாஸ்திரியிடமும், அவர் மனைவியிடமும் விடை பெற்றுக்கொண்டு, வீடு வந்து சேர்ந்தேன். மேற்படி குழந்தையின் விஷயமாக அதன் தாய் சொல்லிய வார்த்தை மெய்யில்லை யென்றும், தந்தை சொல்லியதே சரி யென்றும், என் மனம் உறுதியாய்க் கருதலாயிற்று. எனினும் ஜனாதிபதி வில்ஸனைக் காட்டிலும் லார்ட் கர்ஸன் விஷயத்தில் அக்குழந்தைக்கு

அதிக மதிப் பேறப்பட்டிருப்பதை எண்ணு மிடத்தே எனக்கு வியப்புண்டாகிறது.

---

## உஜ்ஜயினீ.

"கண்ணே, நாம் சக்தி தர்மத்தைக் கைக்கொண்டோம். நமக்கு நீ சக்தி. நீ இறந்தால் நான் உடன் கட்டை ஏறுவேன்" என்று விக்கிரமாதித்த ராஜன் தன்னுடைய ப்ரியதனமாகிய ஸ்ரீமுகியினிடம் சொன்னான். அப்போது அவள் "உஜ்ஜயினீ புரத்து மாகாளி அருளாலே உனக்கு ஆயிரம் வயதுண்டு. அப்படி ஆயிரத்தில் ஒன்று குறைய நானும் இருப்பேன்" என்றாள்.

"எனக்கு வயது தொளாயிரத்துத் தொண்ணூற்றொன்பது தான் போதும்!" என்று விக்ரமாதித்தன் பெருமூச்சு விட்டான். அப்பொழுது ஸ்ரீமுகி சொல்லுகிறாள் :—

"காந்தா, நீ எனது குமாரன். என் சொற்படி கேள். தர்மம் பெண்ணால் ஏற்படுத்தப் பட்டது. விரதம், தவம், பூஜை, ஆஹாரம், வீடு, பள்ளிக்கூடம் அனைத்தும் ஏற்படுத்திக் கொடுத்தது பெண். தர்மம் பெண்ணால் உண்டானது. பெண் தாய். பெண்ணைத் தன்னில் பாதி யென்று கருதாமல், தனக்கு அது பகுதிப்பட்டிருக்கவும் வேண்டும், ஆனால் தான் அதைத் தன் பகுதியாகத் தானுக, நேசிக்கவும் மாட்டேன் என்று ஆண் நெடுங்காலமாகச் சொல்லி வருகிறது. அதற்காகப் பெண் பழி வாங்குகிறது. ஆணைப் பழி வாங்கி அந்தத் துயரத்தில் தானும் மடிகிறது.

"சிவன் பாதி, சக்தி பாதி போலச் சரி பாதியாக எப்போது ஆண் பெண்ணை ஒப்புக்கொள்ளுகிறதோ, அப்போது ஆணுக்குப் பெரிய வலிமை சித்திக்கிறது. கலியுக முடிவில் இது முற்றிலும் பரிபூரணமாக நிகழும்" என்றாள்.

"அப்போது நமது மஹாகாளி தேவிக்கு நாமமென்ன?" என்று விக்ரமாதித்தன் கேட்டான்.

அப்போது ஸ்ரீமுகி சொல்லுகிறாள் :—

"அப்போது மஹாகாளி தேவிக்கு நித்ய கல்யாணீ உஜ்ஜயிநீ என்று பெயர்."

"இதற்கு யாரெல்லாம் ஸாக்ஷி?" என்று விக்ரமாதித்தன் கேட்டான்.

"இதற்குத் தேவர் ஸாக்ஷி; பஞ்ச பூதங்கள் ஸாக்ஷி; மனுஷ்ய, ம்ருக, பக்ஷி, கீடாதி ஜந்து கணங்கள் ஸாக்ஷி; இதற்கு அந்த மஹாகாளியே ஸாக்ஷி" என்று ஸ்ரீமுகி சொன்னாள். "சரி" என்று சொல்லி விக்ரமாதித்தன் இருந்து விட்டான். மறுநாள் காலையில் இருவரும் ஆலயத்துக்குச் சென்றனர். அங்கே தேவியின் முடிமீது நித்ய கல்யாணீ உஜ்ஜயிநீ என்று வயிர எழுத்துக்களால் எழுதியிருந்தது. அதனைக் கண்டு இருவரும் தொழுது மகிழ்ச்சி யுற்றனர். மற்றை நாள் விக்ரமாதித்தன் தனது அரண்மனையில் ஒரு பொற்றூண் நாட்டி அதில்:—"பெண்ணைப் பேணுவோர் கண்ணைப் பேணுவார். பெண்ணுக்குக் கண் உண்டு. பெண் தாய். வந்தே மாதரம்" என்று எழுதி வைத்தான். மேற்படி கதை சாக்த சாத்திரத்திலே கூறப்பட்டது. அதை லோகோபகாரமாக வெளிப்படுத்துகிறேன்.

# மிளகாயப் பழச் சாமியார்.

வேதபுரத்துக்கு வடக்கே முத்துப்பேட்டையில் பெரும்பாலும் தெலுங்க நெசவுத் தொழிலாளரும், தமிழக் கைக்கோளரும் வாஸம் செய்கிறார்கள். அந்த ஊரில் நெசவுத்தொழிலே பிரதானம். "லுங்கிகள்" என்றும் "கைலிகள்" என்றும் சொல்லப்படும் மகமதியருக்கு அவசியமான கெட்டி சாயத்துணிகள் இங்கு மிகுதியாக நெய்யப்பட்டு, சிங்கப்பூர், பினங்கு முதலிய வெளித் தீவாந்தரங்களுக்கு ஏற்றுமதி செய்யப்படுகின்றன.

இந்த நெசவுத்தொழிலாளர் அத்தனை பேரும் அங்காளியம்மனுடைய அவதாரமென்பதாக ஒரு ஸ்திரீயை வணங்குகிறார்கள். அந்த ஸ்திரீ சுமார் நாற்பத்தைந்து வயதுடையவள். சரீரத்தில் நல்ல பலமும், வீரதீர பராக்ரமங்களும் உடையவள். இவளுடைய புருஷன் இறந்து போய் இருபத்தைந்து வருஷங்களாயின.

இவள் காவி வஸ்திரமும் சடை முடியும் தரிக்கிறாள். இவளுடைய முகம் முதிர்ந்த, பெரிய, வலிய, உறுதியான ஆண் முகம்போல இருக்கிறது. அத்துடன் பெண்ணொளி கலந்திருக்கிறது. இவளுடைய கண்கள் பெரிய மான் விழிகளைப் போல இருக்கின்றன.

இவள் ஒரு சுப்பிரமணிய சுவாமி கோயில் கட்டிக் கொண்டிருக்கிறாள். கோயில் கட்டிடம் பெரும்பாலும் முடிந்து போய் விட்டது. இன்னும் சிகரம் மாத்திரந்தான் வைக்கவில்லை.

இவள் தன் வீட்டுக்குள் ஒரு வேல் வைத்துப் பூஜை பண்ணுகிறாள். அதன் பக்கத்தில் இரவும் பகலும் அவியாத வாடா விளக்கு எரிகிறது.

கோயிலும் இவள் வீட்டுக்கு ஸமீபத்திலே தான் கட்டியாகிறது. இவளுடைய வீடு வேதபுரத்துக்கும் முத்துப்பேட்டைக்கும் இடையே ரஸ்தாவின் நடு மத்தியில் சுமை தாங்கிக்கு ஸமீபத்தில் இருக்கிறது.

திருக்கார்த்திகை யன்று, பிரதி வருஷமும் அடியார்கள் சேர்ந்து இவளுக்கு மிளகாய்ப் பழத்தை அரைத்து உடம்பெல்லாம் தேய்த்து ஸ்நானம் செய்விக்கிறார்கள். அதனாலேதான் இவளுக்கு "மிளகாய்ப் பழச் சாமியார்" என்ற நாமம் ஏற்பட்டது.

நான் இந்த மிளகாய்ப்பழச் சாமியாருடைய கோயிலுக்குப் பல முறை போய் வேலைக் கும்பிட்டிருக்கிறேன். இன்று காலை இந்த ஸ்திரீ என்னைப் பார்க்கும் பொருட்டு வந்தாள். வந்து கும்பிட்டாள்.

"எதன் பொருட்டுக் கும்பிடுகிறீர்?" என்று கேட்டேன்.

"எனக்குத் தங்களால் ஒரு உதவியாக வேண்டும்" என்றாள்.

"என்ன உதவி?" என்று கேட்டேன்.

"பெண் விடுதலை முயற்சியில் எனக்குத் தங்களால் இயன்ற ஸகாயம் செய்ய வேண்டும்" என்றாள்.

"செய்கிறேன்" என்று வாக்குக் கொடுத்தேன்.

அப்போது அந்த மிளகாய்ப்பழச் சாமியார் பின் வருமாறு உபந்யாஸம் புரிந்தாள் :—

" ஹா, ஹா, பொறுத்துப் பொறுத்துப் பொறுத்துப் பொறுத்துப் போதுமடா, போதுமடா, போதும்!

உலகத்திலே நியாயக் காலம் திரும்புவதாம்.

ருஷியாவிலே கொடுங்கோல் சிதறிப் போய் விட்டதாம்.

ஐரோப்பாவிலே ஏழைகளுக்கும் பெண்களுக்கும் நியாயம் வேண்டுமென்று கத்துகிறார்களாம்.

உலக முழுமைக்கும் நான் சொல்லுகிறேன்.

ஆண் பெண்ணுக்கு நடத்தும் அநியாயம் சொல்லுக் கடங்காது. அதை ஏட்டில் எழுதியவர் இல்லை. அதை மன்றிலே பேசியவர் யாருமில்லை.

பறையனுக்குப் பார்ப்பானும், கறுப்பு மனுஷனுக்கு வெள்ளை மனுஷனும் நியாயம் செய்யவேண்டும் என்று சொல்லுகிறீர்கள்.

பெண்ணுக்கு ஆண் நியாயம் செய்வது அதையெல்லாம் விட முக்கியமென்று நான் சொல்லுகிறேன்.

எவனும் தனது சொந்த ஸ்திரீயை அலக்ஷியம் பண்ணுகிறான். தெருவிலே வண்டி தள்ளி நாலணா கொண்டு வருவது மேல் தொழில் என்றும், அந்த நாலணாவைக் கொண்டு நாலு வயிற்றை நிரப்பி வீடு காப்பது தாழ்ந்த தொழிலென்றும் நினைக்கிறான். பெண்கள் உண்மையாக உழைத்து ஜீவிக்கிறார்கள். ஆண் மக்கள் பிழைப்புக்காகச் செய்யும் தொழில்களில் பெரும்பாலும் பொய், சூது, களவு, ஏமாற்று, வெளிமயக்கு, வீண் சத்தம், படாடோபம், துரோகம், கொலை, யுத்தம்!

இந்தத் தொழில்கள் உயர்வென்றும், சோறுக்குத் துணி நோய்த்துக் கோயில் செய்து கும்பிட்டு வீடு பெருக்கிக் குழந்தைகளைக் காப்பாற்றும் தொழில் தாழ் வென்றும் ஆண் மக்கள் நினைக்கிறார்கள்.

வியபிசாரிக்குத் தண்டனை இஹலோக நரகம்.

ஆண் மக்கள் வியபிசாரம் பண்ணுவதற்கு சரியான தண்டனையைக் காணோம்.

பர ஸ்திரீகளை இச்சிக்கும் புருஷர்களின் தொகைக்கு எல்லை யில்லையென்று நான் சற்றே மறைவிடமாகச் சொல்லுகிறேன். ஆனால் அவர்கள் பத்தினிகளை நேரே அவர்கள் நோக்க யோக்யதை யில்லாமல் இருக்கிறார்கள்.

பூமண்டலத்தின் துக்கம் ஆரம்பமாகிறது. ஆணும் பெண்ணும் ஸமானம். பெண் சக்தி. ஆண் பெண்ணுக்கு ஆண் தலை குனிய வேண்டும். பெண்ணை ஆண் அடித்து நசுக்கக்கூடாது. இந்த நியாயத்தை உலகத்தில் நிறுத்துவதற்கு நீங்கள் உதவி செய்யவேண்டும். உங்களுக்குப் பராசக்தி நீண்ட ஆயுளும் இஷ்ட காம்ய சித்திகளும் தருவாள்" என்று அந்த மிளகாய்ப் பழச் சாமியார் சொன்னாள். சரி என்று சொல்லி நான் அந்த தேவிக்கு வந்தனம் செய்தேன். அவள் விடை பெற்றுக்கொண்டு சென்றாள்.

---

## பேய்க் கூட்டம்

### I

மூன்று நாள் இரவு பன்னிரண்டு மணிக்கு, நான் எந்தக் காரணத்தாலோ தூக்கம் வராமல் பாயிலே

படுத்துக்கொண்டிருந்தேன். தூக்கம் வராது போனால் அருவியை நினைத்துக்கொண்டு அது சல சலவென்று விழும் ஓசையிலே மானஸிகமாகச் செவியைச் செலுத்திக் கொண்டிருந்தால் சிறிது நேரத்திற்குள் தூக்கம் வந்துவிடுமென்று நான் குழந்தையா யிருந்தபோது ஒரு புஸ்தகத்தில் படித்திருந்தேன். அந்தப்படி அருவியை நினைத்தால் பாதி இரவில் அந்த ஞாபகத்திலிருந்து குளிர் அதிகப்படுகிறதே யொழியத் தூக்கம் வருகிற பாட்டைக் காணோம்.

என்ன காரணம்? குளிர்தான் காரணமென்றெண்ணி, நான்கு சாளரங்களையும் சாத்தினேன். பிறகு காற்றோட்டமில்லாத அறையில் படுத்திருக்கக் கூடாதென்று வெள்ளைக்கார சுகாதார சாஸ்திரமும்—சற்றேறக் குறைய—அனுபவமும் சொல்லுவதால், ஒரு ஜன்னலைத் திறந்தேன்.

வாசற்பக்கத்தில், என் அறைக்கு நேரே, "காந்த விளக்கு" (எலெக்ட்ரிக் விளக்கு). அதை மின்னல் விளக்கென்று சொல்வது நியாயம். ஆனால் ஜனங்கள் அதைக் காந்த விளக்கென்று சொல்லுகிறார்கள். ஊரோடொக்க ஓடு என்று தர்மபுத்திரர் சொல்லியது போலே நானும் ஜன வழக்கத்தைப் பெரிதாகக்கொண்டு அதைக் காந்த விளக்கு என்றே சொல்லுகிறேன். மேலும் காந்தம் என்ற சொல் அழகாக விருக்கிறது. காந்தி, காந்தன், காந்தை என்ற ப்ரயோகங்கள் அதிலே நினைவுக்கு வருகின்றன. வாசலில் காந்த விளக்குப் போட்டிருக்கிறது. அதைச் சுற்றி விளை

யாடும் பூச்சிக்கூட்டங்கள் என் அறைக்குள்ளே பிரவேசித்து விடுகின்றன. அறைக்குள் விளக்கை அவித்துப் போடுவோமா என்று யோசித்தாலோ, தூக்கமும் வராமல் இருளில் கிடப்பது மிகவும் சிரமம். என் மனம் பல பல விஷயங்களை யோசித்துக் கொண்டிருந்தது. கண்ணை மூடினால் எனக்கு ருஷியாவின் நிலைமை ஞாபகம் வந்து கொண்டிருந்தது. அதற்குக் காரணமென்ன தெரியுமா?

ஒரு மனுஷ்யன் காலையில் கண்ணை விழிக்கும் போது:—விழித்தவுடனே, அவன் வேறெந்த வஸ்துவையும் பார்க்கு முன்னே, அவன் முன் ஒரு குரங்கைக்கொண்டு நிறுத்தினால், அன்று முழுவதும் அவன் அந்தக் குரங்கை மறப்பது மிகவும் சிரமம். அது போலவே மூன்றாம் நாள் காலையில் நான் கண்ணை விழிக்குமுன்பாகவே என் பத்தினி "சுதேசமித்திரன்" பத்திரிகையைத் தலையணைக் கருகே கொண்டு போட்டிருந்தாள். திறந்து பார்த்தேன்—முதலாவது என் கண்ணில் "ருஷியாவில் உள் நாட்டுக் கலகம்; சச்சரவு அதிகரிக்கின்றது—" என்ற பகுதி தென்பட்டது. இதென்னடா விசேஷம் என்று வாசித்துப் பார்த்தேன். இரவில் தூக்கமில்லாது படுத்துக் கொண்டிருக்கும் போது காலையில் படித்த விஷயங்களெல்லாம் மற்றொரு முறை மனவீதியிலே உலாவி வரலாயின. மாஸ்கோ நகரத்தில் கலகம்—ஸ்திரீகளும் குழந்தைகளும் உட்பட்ட இருநூறு பேர் கொலை யுண்டனர்.....துப்பாக்கிப் பிரயோகங்கள் அமிதவாதி

களும், மிதவாதிகளும் பரஸ்பரம் செய்துகொண்டனர். ஒதெஸ்ஸா நகரத்தில் செல்வரிடமிருந்து பொருளை யெல்லாம் பிடுங்கி ஏழை ஜனங்களுக்குள்ளே பங்கிட்டுக்கொடுக்க ஒரு கமிட்டி! முதலிய பல செய்திகள். ருஷியா விஷயம் எக்கேடு கெட்டால் எனக்கென்ன என்று தூங்க முயற்சி செய்தால் மனம் இணங்கவில்லை தூக்கம் வரப்போகிற—அல்லது வாராமல் இருக்கிற— பாதி யிரவு நேரத்தில் மனம் புத்தி சொன்னபடி கேட்கவே கேட்காது. எப்போதும் மனதைக் கட்டி யாள்வது சிரமம். படுக்கையிலே படுத்துக்கொண்டு மனதைக் கட்ட விசுவாமித்திரராலே கூட முடியாது. பிறகு எனக்கு ருஷியாக் குடியரசின் தலைவனாகிய லெனின் என்பவனுடைய ஞாபகம் வந்தது. உரலுக்கு ஒரு பக்கம் இடி, மத்தளத்துக்கு இரண்டு பக்கம் இடி. லெனினுக்கு லக்ஷம் பக்கத்திலே!

தள்ளடா! லெனினு மாயிற்று; வெங்காயமு மாயிற்று. தூங்குவோம் என்று நினைத்தால் கொசு வந்து காதில் "நொய்" என்று ரீங்காரம் பண்ணுகிறது.

சரி. தூக்கம் வருமென்று நினைக்க ஹேதுவில்லை; எழுந்து உட்கார்ந்து ஏதேனும் புஸ்தகம் வாசிப்போ மென்று மேஜை மீது வைத்திருந்த விளக்கைப் பெரி தாக்கி எதிரே நாற்காலியில் உட்கார்ந்து மேஜையின் மீது முதலாவது கண்ணுக்குப் புலப்பட்ட புஸ்தகத் தைக் கையிலே எடுத்தேன். அது ஸ்காந்த புராணம். அதிலே நல்ல கட்டம் கண்ணுக்குப் புலப்பட்டது. தினைப் புனத்தில் வள்ளி யம்மையை சுப்பிரமணிய

ஸ்வாமி பல விதங்களில் கெஞ்சியும் பயமுறுத்தியும் பெண்டாகச் செய்து கொண்டார்.

பிறகு புராணம் சொல்லுகிறது :—கேளீர் முனிவர்களே; அந்த வள்ளியம்மை யானவள் திரும்பித் தனது பரணுக்கு வந்து சேர்ந்தாள். தினைப்புனத்தை அங்கே காத்துக்கொண்டிருந்த ஸகியானவள் வள்ளியை நோக்கி, "ஏனம்மா, வள்ளி, இவ்வளவு நேரம் எங்கே போயிருந்தாய்?" என்று கேட்டாள்.

"குளத்துக்குப் போய் நீராடி வந்தேன்" என்று வள்ளியம்மை சொன்னாள்.

"நெடுநேரம் குளத்திலே இருந்தாயா? ஸ்நானத்துக்குச் சென்றால் இத்தனை காலம் ஆகிய முகாந்தரமென்ன?" என்று தோழி தொளைத்துத் தொளைத்துக் கேட்கலானாள். அப்போது வள்ளியம்மை சினங் கொண்டு:—"ஏதடி பாங்கி? நீ என்மேல் பழி சுமத்தப் பார்க்கிறாயா?" என்றாள்.

அப்போது பாங்கி கண்ணைப் பரக்க விழித்து, "நான் ஒன்றும் சொல்லவில்லையே, தெய்வமே, நீ தானே பழி யென்ற சொல்லை எடுத்தாய்!" என்று கூறிக் கலகலவென்று நகைத்தாள்.

வள்ளியம்மை கண்ணிலே நீர்த்துளிகள் பிறந்தன. முருகக் கடவுள் அந்தச் சமயத்தில் வில்லையும், அம்புகளையும் சுமந்து கொண்டு மறுபடி வேட வேஷந் தரித்துக்கொண்டு அவ்விரு பெண்களின் முன்னே வந்து நின்று:—"ஏ பெண்களா! என்னம்புகளால் உடம்பெல்லாம் அடிபட்டோடிய மிக உன்னதமான பெரிய

ஸ்வாமி பல விதங்களில் கெஞ்சியும் பயமுறுத்தியும் பெண்டாகச் செய்து கொண்டார்.

பிறகு புராணம் சொல்லுகிறது :—கேளீர் முனி வர்களே ; அந்த வள்ளியம்மை யானவள் திரும்பித் தனது பரணுக்கு வந்து சேர்ந்தாள். தினைப்புனத்தை அங்கே காத்துக்கொண்டிருந்த ஸகியானவள் வள் ளியை நோக்கி, " ஏனம்மா, வள்ளி, இவ்வளவு நேரம் எங்கே போயிருந்தாய் ? " என்று கேட்டாள்.

" குளத்துக்குப் போய் நீராடி வந்தேன் " என்று வள்ளியம்மை சொன்னாள்.

" நெடுநேரம் குளத்திலே இருந்தாயா ? ஸ்நானத் துக்குச் சென்றால் இத்தனை காலம் ஆகிய நிமித்த மென்ன ?" என்று தோழி தொளைத்துத் தொளைத்துக் கேட்கலானாள். அப்போது வள்ளியம்மை சினங் கொண்டு:—"ஏதடி பாங்கி ? நீ என்மேல் பழி சுமத்தப் பார்க்கிறாயா ?" என்றாள்.

அப்போது பாங்கி கண்ணைப் பரக்க விழித்து, " நான் ஒன்றும் சொல்லவில்லையே, தெய்வமே, நீ தானே பழி யென்ற சொல்லை எடுத்தாய் !" என்று கூறிக் கலகலவென்று நகைத்தாள்.

வள்ளியம்மை கண்ணிலே நீர்த்துளிகள் பிறந்தன. முருகக் கடவுள் அந்தச் சமயத்தில் வில்லையும், அம்பு களையும் சுமந்து கொண்டு மறுபடி வேட வேஷந் தரித் துக்கொண்டு அவ்விரு பெண்களின் முன்னே வந்து நின்று :—"ஏ பெண்களா ! என்னம்புகளால் உடம் பெல்லாம் அடிபட்டோடிய மிக உன்னதமான பெரிய

"வேணு முதலியார்! இந்த நேரத்தில்—பேய்களெல்லாம் ஸந்த்யா வந்தனம் பண்ணப் புறப்படுகிற சமயத்தில்—வந்து கதவைத் தட்டுகிறாயே! உனக்குப் பயித்தியமா?" என்று கேட்டேன். அப்போது வேணு முதலி சொல்லுகிறான்:—"நான் மாத்திரமில்லை. ஐயரே, நானும் என்னுடன் நான்கு பேரும் இருக்கிறோம். எங்கள் அத்தனை பேருக்கும் பயித்தியம்—நீர் மாத்திரம் புத்திசாலியா? கதவை கீழே வந்து திறவும். ஏதோ முக்கியமான காரியம் இருக்கக் கண்டு தான் வந்து கதவைத் தட்டுகிறோம். இல்லா விட்டால் வருவோமா?" என்றான்.

"காரியத்தைச் சொல்" என்றேன். அப்போது வேணு முதலி:—"இங்கிருந்து சொல்ல முடியாது. நீர் தயவு செய்து இறங்கி வாரும்" என்றான். சரி, காலைச் சுற்றின பாம்பு கடித்தாலொழியத் தீராது. விதியைத் தள்ளினாலும் தள்ளலாம், வேணு முதலியை விலக்க நம்மால் முடியாது. தவிரவும் நமக்கும் தூக்கம் வரவில்லை. இவன் ஏதோ செய்தி கொணர்ந்திருப்பான். அதைக் கேட்கும்போது, போது போக்க இடமுண்டாகும்" என்று யோசனை பண்ணிக் கீழே இறங்கிப் போய்க் கதவைத் திறந்தேன். பளிச்சென்று என் கண்களில் எவனோ துணியை வரிந்து கட்டினான். ஒருவன் என் வாய்க்குள்ளே துணியைச் செலுத்தினான். ஒருவன் கையைக் கட்டினான், மற்றொருவன் காலைக் கட்டினான். கண் மூடித் திறக்கு முன்னே என்னைக் குண்டு கட்டாகக் கட்டி ஒரு குதிரை வண்டிக்குள் தன் வசமின்றிப் போட்டார்கள். குதிரை வண்டி

வாயு வேகமாகப் பறக்கிறது. வண்டி ஓடும் போதே என் மனதில் யோசிக்கலானேன்.

"ஐயோ! என்ன செய்வோம்! வேறு முதலியின் குரலைப் போல் தானே யிருந்தது. அவன் நமக்குத் தீங்கு செய்ய மாட்டானே! இப்போ தொன்றும் தெரியவில்லையே! கண்களை அடைத்து விட்டார்களே! வாய் பேச வழியில்லையே! நான் அசையவொட்டாமல் நெஞ்சில் அழுத்திக்கொண்டிருக்கிற பாதகன் யாரென்பதும் தெரியவில்லையே! என்ன செய்வோம்! நம்மை எங்கே கொண்டு போகிறார்கள்!—தெய்வமே, நம்மை இவர்கள் கொன்று போடுவார்களோ? என்னவோ தெரியவில்லையே! போனால் போகிறது போ—செத்தால் செத்துப் போவோமே! நாம் செத்தால் காடெல்லாம் எலும்பாய் விடுமோ? போனால் போகிறது. மனமே, சும்மா இரு. அடடா! நாம் செத்தால் இந்தக் குழந்தைகளும் பெண்டாட்டியும் எப்படி ஜீவிக்கும்? அடபோ! அதெல்லாம் வீண் கதை! எல்லா உயிர்களையும் தெய்வந்தானே காப்பாற்றுகிறது. நாம் செத்ததினாலே இந்தக் குழந்தைகளுக்கு யாதொரு பிரமாதமும் நேரிட்டு விடாது. ஒரு மாஸம் அழும். அப்பால் அப்பா இருந்தார், மோக்ஷத்திலே நல்லவர் என்று கதை சொல்லிக் கொண்டு சௌக்கியமாகவே இருக்கும். நம்முடைய பிதா செத்துப் போனாரே, நாம் உடன் கட்டை ஏறினோமா? மேலும் இவர்கள் நம்மைக் கொல்லுவார்க ளென்பது தான் நிச்சயமா? எங்கேனும் கொண்டுபோய் அடைத்து வைத்திருப்பார்

களோ, என்னவோ? ஐயோ! அடைத்து வைத்தால் என்ன செய்வோம்? அட போடா! செய்வதென்ன? சும்மா விருப்போம். நல்லது தானே! சோறு அவன் போடுவான். நமது பாடு மஜா. பாட்டுப் பாடிக் கொண்டு யாதொரு வேலையுஞ் செய்யாமல் ஜோக் காகவே இருக்கலாம். சித்திரவதை பண்ணுவார்களோ, என்னவோ! ஏனடா, நம்மை அப்படிச் செய்கிறான்? நம்மை யாரும் ஒன்றுமே செய்ய மாட்டார்கள். நாம் எவனுக்காவது தீங்கு நினைத்தாலன்றோ, நமக்கொரு வன் தீங்கு நினைப்பான். நாம் சும்மா இருக்கும்போது நமக்கேன் பிறர் தீங்கு செய்கின்றார்கள்? அது நடக் காது. நம்மை அனுவசியமாக ஹிம்ஸிக்க மாட்டார் கள்............பின் எதற்காகத்தான் கொண்டு போகி றார்கள்? அதிலும் இப்படி அப்ராக்ருதமான அவஸ் தைக் குட்படுத்தி நம்மைக் கொண்டு போவார் ஹிம் ஸைக் கில்லாமல் ஸ்ரீமந்த கலியாணத்துக்கா இப்படி அழைத்துக் கொண்டு போவார்கள்?" என்று பலவித மாக எண்ணினேன். அப்போது திடீரென்று வண்டி நின்றது.

---

## பேய்க் கூட்டம்

## II

[பூர்வ கதை:—பாதி யிரவில் என் வீட்டுக் கதவை யாரோ இடி இடியென் றிடிக்க நான் யாரென்று கேட்க, வேணு முதலியும் சில நண்பர்களும் என்று எதிருத்தரம் வர, நான் கீழே போய்க் கதவைத் திறக்க, அப்போது அங்கு வந்திருந்தோரை நான் பார்க்கு

முன்னாகவே, அவர்கள் பனிச்சென்று என் கண்ணைக் கட்டிக் குதிரை வண்டியில் போட்டுக்கொண்டு செல்ல, நெடுந்தூரம் போன பின்பு குதிரை வண்டி சடேரென்று நின்றது.]

மேலே கதை சொல்லுகிறேன். ஆச்சர்யமான கதை. ஜாக்ரதையுடன் கேளுங்கள்.

என்னை ஒருவன் வந்து பந்தைத் தூக்குவதுபோலே கையில் தூக்கிக்கொண்டான். தெய்வகிருபையால் அவர்கள் என் செவியைக் கட்டவில்லை. சத்தங்கள் செவிப்பட்டன. குதிரையை வண்டியிலிருந்து அவிழ்த்து ஸமீபத்தில் கொண்டு கட்டினார்கள் என்று சில ஒலிக் குறிப்புகளாலே தெரிந்து கொண்டேன். என்னைத் தூக்கிக் கொண்டு போய்க் கண்ணை அவிழ்த்தபோது பார்க்கிறேன், சுமார், நூறு தீவட்டிகள் கைக்கொண்டு சுமார் நூறு கன்னிப் பெண்கள் வரிசையாக நிற்கிறார்கள். எதிரே ஒரு பொன்னாஸனம் போட்டிருந்தது. அதன்மேலே கந்தை யுடுத்துக் கருந்துணி போர்த்துத் தலை மொட்டையாய், முகம் நரைத்தும், புகையிலைச் சுருட்டுப் பிடித்துக்கொண்டு ஒரு பரதேசி உட்கார்ந்திருந்தார். அவரைச் சுற்றி அநேகம் சாமியார்கள் நிற்கிறார்கள். கையை உயரத் தூக்கி அப்படியே பல வருஷம் வைத்துக் கொண்டிருந்த படியால், கை மரம் போல் அசைக்க முடியாமல் போன ஸந்நியாசிகளும் காவி யுடுத்தவர்களும், கந்தை தரித்தவரும், சடை நீட்டினவரும், மொட்டை யடித்தவரும், நிர்வாண ரூபமாக நிற்போரும் இங்ஙனம் பல பல வகைகளில் சுமார்

முப்பது சந்நியாஸிகள் இருந்தார்கள். வேணு முதலி யைக் காணவில்லை. என்னை இவர்களிலே சிலர்தான் தூக்கிக் கொண்டு வந்திருக்க வேண்டுமென ஊஹித் துக் கொண்டேன். அங்ஙனம் கொண்டு வந்தோரில் ஒருவன் வேணு முதலி போலே பொய்க்குரல் காட்டி என்னை வஞ்சனை செய்து விட்டானென்பதையும் உணர்ந்து கொண்டேன்.

ஆதலால், மிகுந்த கோபத்துடன் நான் பொன்னு ஸனத்தில் வீற்றிருந்த பண்டாரத்தை நோக்கி:— "யாரடா நீ! என்னை ஏன் இந்த நின் ஸேவகர் மூல மாக இங்கு கொணர்வித்தாய்?" என்று கேட்டேன். அப்போது அந்த ஸந்யாஸி "பாரடா!" என்று சொல்லித் திரும்பி வடதிசையைக் காட்டினான். அவன் கிழக்கைப் பார்க்க உட்கார்ந்திருந்தான். அந்த ராத் திரியில் உனக்குத் திசை எப்படித் தெரிந்த தென்று கேட்பீர்களோ? அந்தப் பண்டாரஞ் சொன்னான்:— "வட திசையைப் பார், அங்கே எரிகின்ற சிதைகளைக் கண்டாயா?" என்றான். அங்கு பார்த்தேன். முப் பது நாற்பது பிணங்கள் வரிசையாக அடுக்கி எரிந்து கொண்டிருந்தன. பாதி ராத்திரியில் அந்தப் படாரங் களின் கூட்டத்தைப் பார்க்கும் போதே எனக்குப் பயமாக இருந்தது. அந்த இரவிலே இந்த முப்பது நாற்பது பிணங்கள் எரிவதையும் சேர்த்துக் காட்டின போது நான் பயந்து நடுங்கிப் போனேன். அந்தப் பண்டாரம் கொல்லென்று சிரித்தான்.

உடனே அந்த நூறு தீவட்டிகள் கொண்டிருந்த

